Sriyai Namah | Sri Harihi Saranam Naha | Sarve Janas | Sukhino Bhavant



# ஸ்ரீவைஷ்ணவ பரிபாஷையும்

## சில ஸங்கேதங்களும்

ISSUED FREE WITH

NITYAANUSANDHAANAM & NITYAANUSHTAANAKRAMAM


தொகுப்பு :

ஸ்வதர்மநிரத, சிஷ்டப்ரேஷ்ட, ஸகலகலாகுசல,
செந்நெறிச் செம்மல், ஸ்ரீ ஹயக்ரீவதாஸ

**வே. வேங்கடேசன்**





***PUBLISHERS :***

**THE LITTLE FLOWER Co.**

**MADRAS-600 017** & : TRICHY-620 002

**1977**

ஸ்ரீ:

# ஸமர்ப்பணம்

அன்பும் அருளும் அருங்குணமும் நிறைந்தவரும், திருமாலின் திருவடியைச் சிந்தையிலும், சிரத்திலும் தினமும் சூடிப் போற்றுபவரும், உபயகலையைச் சேர்ந்த திருமால் அன்பர்களிடமும், சிவநேயர்களிடமும் அன்பு செலுத்துபவரும், லிப்கோ நிறுவனத்தின் ஸ்தாபகருமான ஸ்ரீ சடாரி ஸேவக, பக்திப்ரசாரணப்ரவீண, ஸ்ரீ ஹயக்ரீவஸேவாரத்னம் ஸ்ரீ உ. வே. திருமலை நல்லான் சக்ரவர்த்தி வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா ஸ்வாமி ஆஸ்திக உலகிற்காக மாபெரும் தொண்டு செய்துவருவது யாவரும் அறிந்ததே. உபயகலையைச் சேர்ந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருவதன்மூலம், படிப்படியாக உலக ஸகோதரத்வம் ஏற்பட வேண்டும் என்பது இப்பெரியவரின் ஒரே அபிலாஷை. இவருடைய இந்த மனோரதம் நிறைவேற வேண்டுமென்று ஸ்ரீபெரும்புதூர் வந்த வள்ளல் (திருமலை, திருநாராயணபுரம், மதுராந்தகம், திருவஹீந்திரபுரம் முதலிய பல திவ்யதேசங்களில் ஸேவை தரும்) ஸ்ரீ பகவத் ராமாநுஜர் திருவடிகளில் இச்சிறு நூலை வெகு உருக்கத்துடனும், மஹா விசுவாசத்துடனும் ஸமர்ப்பிக்கிறேன்.

சென்னை-600017
14-11-1977

வே. வேங்கடேசன்
(அடியேன் சிறிய ஞானத்தன்—அடியார், அடியார் தம்அடியார், அடியார் தமக்கடியார், அடியார்தம் அடியார், அடியேன்)

Suggestions for the improvement of this book or corrections will be gratefully welcomed by the Publishers whose main aim is accuracy and service.

# முன்னுரை

உலகில் பலர் பலவகையாக வாழ்கிறார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்களாகப் பிறந்து வாழவேண்டிய முறைகளையே நாம் இங்கு கூறுகிறோம். ஸ்ரீவைஷ்ணவ சமயம் நன்கு பண்பட்ட சமயம். ஸ்ரீ வைஷ்ணவர்கள் பழகும் முறைகளை வரையறுத்துக்கூறும் தத்துவ நூல்கள், உபதேச நூல்கள் இதில் இருக்கின்றன. ஆசாரியர்கள் நூல்களிலும், அநுஷ்டானங்களிலும் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் பெருமைகளைக்கூறி இருக்கிறார்கள். திருமழிசைப்பிரான் எல்லா சமயங்களையும் ஆராய்ந்து சுவையற்றவை என்று நினைத்து ஸ்ரீவைஷ்ணவமே சுவையானது, நிலையானது, நன்மையளிக்க வல்லது என்று அறிவுறுத்துகிறார். நான் எத்தனை பிறவி எடுத்தாலும் வைஷ்ணவனுகவே இருக்க விரும்புகிறேன். 'காமயே வைஷ்ணவத்வம்து ஸர்வஜந்மஸு கேவலம்' என்று அறிவுடையோர் வேண்டுகிறார்கள். தங்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் என்று ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டால் மட்டும் போதாது. அடக்கமும், நன்னடத்தையும் கொண்டு பக்தியோடு ஒற்றுமையாக வாழவேண்டிய காலம் இது. நிந்தனை, புறங்கூறல், பிறரைக் கெடுத்தல், தற்பெருமை ஆகியவற்றை ஸ்ரீவைஷ்ணவர்கள் தவிர்த்தேயாக வேண்டும். அன்பு, இன்சொல், நற்செயல், பிறருக்கு உதவும் தன்மை, பொறுமை ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்களது எண்ணங்களைச் சொல்லாலும் செயலாலும் பெரியோரிடம் காட்டிக்கொள்ள வேண்டும். ஸ்ரீவைஷ்ணவச் சிறுவர்கள் (ஏன்! பெரியோர்களிலும் சிலர்) "பெருமாள் வருகிறார்; நெற்றியில் நாமம் போட்டுக் கொள்; தண்ணீர் ஊற்று; சேர்த்து போடு" என்று கூறுவதைக் கேட்கும் போதும், லுங்கி உடுத்திக்கொண்டு அவர்கள் வாழ்க்கையை நடத்துவதைக் காணும்போதும், பெரியோர்களிடம் பண்பட்ட முறையில் பேசத் தெரியாமல் தவிப்பதைக் காணும்போதும் ஒவ்வொருவரின் உள்ளமும் குமுறும்; வேதனை அடையும் என்பதில் ஐயமில்லை. எழுத்தினால் எழுத முடியாத அளவும் சிலர் மாறி இருக்கிறார்கள். பிற சமயத்தினர் ஸ்ரீவைஷ்ணவப் பரிபாஷைச் சொற்களைக் கேட்டு வியந்துபோகிறார்கள். இப்படிப் பட்ட ஸ்ரீவைஷ்ணவ சமயத்திற்கு நிகராக மற்றொன்று இல்லை என்றும் கூறுகிறார்கள். சிலர் முன் செய்த நல்வினையால் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தில் பிறக்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவச் சிறுவர்கள் சிறுவயதிலேயே ஸ்ரீவைஷ்ணவ பரிபாஷைச் சொற்களை அறிந்து அடிக்கடி பயன்படுத்த வேண்டும். இது அவர்கள் செய்தாக வேண்டிய சமயத் தொண்டு.

சுருங்கக் கூறின், லௌகிகர்களான ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்களுக்கு எம்முடைய எளிய வேண்டுகோள் இது தான்—"உண்மையான ஸ்ரீவைஷ்ணவன் ஒவ்வொருவனும் எல்லோரையும் அதாவது உலகனைத்தையும், அன்புக் கண்களோடு நோக்க வேண்டும்."

இச் சிறு நூலில் சில கட்டுரைகளும், குறிப்புக்களும் இதே நோக்கத்துடன் சேர்த்திருக்கிறோம்.

அடியோங்களுடைய இத்தகைய முயற்சிக்கு எவ்விதப் ப்ரதிப்ரயோஜனமும் எதிர்பாராமல் கட்டுரைகளையும், ஆதரவும், ஆலோசனையும் தந்துதவிவரும் கீழ்க்கண்ட மஹனீயர்களுக்கு அடியோங்களுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்:

1.—ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான் சிரோமணி வித்யா விசாரத ந்யாய வேதாந்த ப்ரவீண, ஸ்ரீதேசிக தர்சன துரந்தர ஸ்ரீ உ. வே. வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்ய ஸ்வாமி
2. வித்வான், ந்யாய சிரோமணி, [illegible] யதீந்த்ர ப்ரவணப் பிரபாவம் பின்பழகிய [illegible] உ. வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி, 78, T. P. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—600005
3. [illegible] திருமலை நல்லான் சக்ரவர்த்தி, கூத்தப்பாக்கம் வித்வான் ஸ்ரீ உ. வே. லக்ஷ்மீந்ருஸிம்ஹாசார்ய ஸ்வாமி, சென்னை—33
4. ஸ்ரீமதி விஷ்ணு [illegible]
5. ஸ்ரீ உ. வே. D. [illegible] சென்னை—78

சென்னை—600 017
14—12—1977

—லிட்டில் ப்ளவர் கம்பெனி
பதிப்பகத்தார்

## ஸ்ரீ விஷ்வக்ஸேந ஆராதனம் :

நிகழ்ந்தாய்பால் பொன்பசுப்புக் கார்வண்ணம் நான்கும்,
இகழ்ந்தா யிருவரையும் வியப்,—புகழ்ந்தாய்
சினப்போர்ச் சுவேதனைச் சேனுபதியாய்,
மனப்போர் முடிக்கும் வகை

—நான்முகன் திருவந்தாதி—24.

எல்லா சுபகாரியங்களையும் ஆரம்பிக்கும் முன் ஸ்ரீ விஷ்வக்ஸேனருக்கு ஆராதனம் செய்ய வேண்டும். இதைச் செய்வதால் அந்தக் காரியம் நிர்விக்னமாக நடந்தேறும். ப்ருஹஸ்பதி ஸ்வாமி இந்த ஸ்ரீ விஷ்வக்ஸேன ஆராதனம் செய்து வைக்கும்போது "கர்த்தா" மஹாவிச்வாஸத்துடன் மந்த்ரங்களைத் திருப்பிச் சொல்ல வேண்டும். அப்போது அங்கு கூடியிருக்கும் ஸபையோரும் மௌனமாக இருக்கவேண்டும். இந்த ஆராதனம் முடிந்தவுடன் ப்ருஹஸ்பதி ஸ்வாமி "ஸ்ரீ விஷ்வக்ஸேன ப்ரஸாத ஸித்திரஸ்து" என்று சொல்லி ப்ரஸாதத்தைக் கர்த்தாவிடம் சேர்ப்பிப்பார். பெரியோர் அந்த ஸமயத்தில் "ததாஸ்து" என்று சொல்லவேண்டும். கர்த்தாவும் பக்தி ச்ரத்தையுடன் ப்ரஸாதத்தை ஏற்றுக் கொள்வதால் அந்தக் காரியம் விக்னமில்லாமல் நடந்தேறும் என்பது திண்ணம். நீராடி, சுத்தமா வஸ்த்ரம், த்வாதச புண்ட்ரம் தரித்து கிழக்கு முகமாக ஆஸனத்தில் அமர்ந்து, ஆசமநம் செய்து, ப்ராணுயாமம் செய்து, கைகூப்பி ஸ்ரீ விஷ்வக்ஸேனுராதனத்தை ஆரம்பிக்க வேண்டும்.

## ஸ்ரீ விஷ்வக்ஸேந ஆராதனம் :

(வடகலையாருக்கு மாத்திரம்)

ஸ்ரீ மான் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ ।
வேதாந்தாந்தாசார்யவர்யோமே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥
குருப்யஸ்தத் குருப்யச்ச நமோவாகமதீ மஹே ।
வ்ருணீமஹே ச தத்ராத்யெள தம்பதீ ஜகதாம்பதீ ॥
ஸ்வசேஷபூதேந மயா ஸ்வீயைஸ்ஸர்வ பரிச்சதை: ।
விதாதும் ப்ரீதமாத்மநம் தேவ: ப்ரக்ரம தேஸ்வயம் ॥

(இருகலையாருக்கும் பொது)

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோபசாந்தயே ॥
யஸ்யத்விரத வக்த்ராத்யா: பாரிஷத்யா: பரச்சதம் ।
விக்நம் நிக்னந்தி ஸததம் விஷ்வக் ஸேநம் தமாச்ரயே ॥



கீழ் அஹோபிலத்தில் ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ விஷ்வக்ஸேநர்

கரிஷ்யமாணஸ்ய கர்மண: (ப்ராரப்தஸ்ய கர்மண:) நிர்விக்நேன பரிஸமாப்த்யர்த்தம் ஆதௌ விஷ்வக்ஸேந ஆராதனம் கரிஷ்யே—

அஸ்மிந் கூர்ச்சே ஸபரிவாரம் விஷ்வக்ஸேனம் ஆவாஹயாமி, த்யாயாமி, ஆஸநம் ஸமர்ப்பயாமி, ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, ஸ்நாபயாமி, ஸ்நாநோத்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, வஸ்த்ரார்த்தம் உபவீதார்த்தம் அக்ஷதாந் ஸமர்ப்பயாமி, கந்தாம் தாரயாமி, புஷ்பமாலாந் ஸமர்ப்பயாமி, தூபதீபார்த்தம் அக்ஷதாந் ஸமர்ப்பயாமி.

[தாம்பூலம், பழம் ஸ்ரீ விஷ்வக்ஸேநருக்கு அமுது செய்விக்கவேண்டும்]

அமுது செய்வித்த பிறகு

''ஸமஸ்த தேவோபசாரார்த்தம் அக்ஷதாந் ஸமர்ப்பயாமி'' என்று அக்ஷதை சேர்ப்பிக்க வேண்டும்

பிறகு, ப்ராணயாமம் (ஹரிரோம்தத். . . . .கரிஷ்யே)

## ஸாத்விக த்யாகம்

(வடகலையாருக்கு மட்டும்)

''. . . . . .நின்னபாத பங்கயம்,
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே.''
—திருச்சந்தவிருத்தம்—101

''அருளா தொழிவாய் அருள்செய்து, அடியேனைப்
பொருளாக்கி யுன்பொன் னடிக்கீழ்ப் புகவைப்பாய்,. . . .''
—திருவாய்மொழி 9—8—8

''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்பது பழமொழி. எனவே, எந்த நற்காரியத்தைச் செய்தாலும் அதைப் பக்தியுடன் எம்பெருமானிடம் அவன் அநுக்ரஹத்தில் பேரார்வத்தோடு, ஸமர்ப்பிப்பது முக்கியமான கடமையாகும். எல்லாக் காரியங்களையும் செய்யச் சொல்பவனும், செய்து வைப்பவனும் ஸர்வேச்வரனே என்பதை நன்கு உணரவேண்டும். இதை 'நான் செய்தேன்' என்ற அகம்பாவச் சொல்லை நீக்கி ''இதை ஸர்வேச்வரன் செய்து வைத்தான்'' என்று சொல்லவேண்டும்.

நீர்நும தென்றிவை,—வேர்முதல் மாய்த்து, இறை,
சேர்மின் உயிர்க்கு, அத—னேர்நிறை யில்லே.''
—திருவாய்மொழி 1—2—3

என்பது நம்மாழ்வார் திருவாக்கு.

எனவே, எல்லா காரியங்களுக்கும் காரணபூதன் 'பகவானே'' என்பதை மனத்தில் அழுத்தமாகக் கொண்டு, எடுத்த காரியத்தை நடத்தித்தரும்படி பகவானை ப்ரார்த்தித்துப் பிறகு அந்தக் காரியம் முடிந்ததும் பகவானுக்கு க்ருதஜ்ஞதை தெரிவிப்பதே ஸாத்விகத் யாகம். ஒரு காரியத்தைச் செய்த பின் 'கிருஷ்ணார்ப்பணம்'' என்று உலகில் பலர் ஸமர்ப்பிப்பது வழக்கம். இதைச் செய்யும் முறையைத்தான் மிக விரிவாகவும் எளிதாகவும் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்துள்ளார். அதாவது ''ஸர்வேச்வரனை ஸ்ரீமந் நாராயணன் தனக்குச் சேஷனை அடியேனைக்கொண்டு தன் உடைமையான கருவிகளைக் கொடுத்துத் தன் திருவுள்ளத்தின் உகப்புக்காகத் தன்னுடையதான இந்தக் காரியத்தைத் தானே செய்விக்கிறன்'' என்று ஒரு காரியத்தைத் தொடங்கும் போது அநுஸந்திக்கவேண்டும். அந்த நற்காரியம் முடிந்தபின் அந்த முறையையே பின்பற்றி எம்பெருமான் தானே செய்வித்துக் கொண்டான் என்று அநுஸந்திக்கவேண்டும். இதுதான் ஸாத்விகத் யாகம். இதைச் செய்வது காரியங்களின் நடுவில் நேரும் குறைகளுக்குப் பரிஹாரமுமாகும். இது வடகலை

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குத் தான் உண்டு. அப்தபூர்த்தி, உபநயனம், விவாஹம், சாந்தி முஹூர்த்தம், ஸீமந்தம் போன்ற சடங்குகள் செய்துவைக்கும் போது அந்தந்த சடங்குகள் ஆரம் பிக்குமுன் ஸ்ரீவிஷ்வக்ஸேந ஆராதனம் முடிந்தவுடன் ப்ருஹஸ்பதி ஸ்வாமி கர்த்தாவை ஆசமநம் செய்யச் சொல்லி, ஸங்கல்பம் செய்து வைத்துக்கீழ்க்கண்ட மந்திரம் சொல்லி 'ஸாத்விகத் யாகம்'' செய்து வைப்பார்.

## ஸாத்விகத்யாக மந்த்ரம்

பகவாநேவ ஸ்வநியாம்ய ஸ்வரூபஸ்த்திதி ப்ருவ்ருத்தி ஸ்வசேஷதைக ரஸேந அநேந ஆத்மநா கர்த்ரா ஸ்வகீயைச்சோபகரணை: ஸ்வாராதநைக ப்ரயோஜநாய பரமபுருஷ: ஸர்வசேஷீ ச்ரிய:பதி: ஸ்வசேஷபூதம் (இந்த இடத்தில் கர்மாவைச் சொல்லவும்) கர்ம ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயமேவ காரயதி.

[ஸாத்விகத்யாகம் முடிந்தவுடன், ப்ருஹஸ்பதி ஸ்வாமி ஸ்ரீவிஷ்வக்ஸேநரை உத்வாஹனம் செய்து ப்ரஸாதம் கர்த்தாவிடம் சேர்ப்பிப்பார்.]

''ஆவாஹிதம் விஷ்வக்ஸேநம் யதா ஸ்தாநம், யதாஸ்தாநம் ப்ரதிஷ்டாப யாமி—சோபநார்த்தே க்ஷேமாய புனரா கமநாய ச—ஸ்ரீவிஷ்வக்ஸேந ப்ரஸாத ஸித்திரஸ்து'' என்று கூறுவார். ஸபை யார் மஹா விசுவாஸத்துடன் 'ததாஸ்து' சொல்ல வேண்டும். பிறகு ப்ருஹஸ்பதிஸ்வாமி ஸ்ரீவிஷ்வக்ஸேநரை உத் வாஹனம் செய்துப்ரஸாதத்தைக் கர்த் தாவிடம் சேர்ப்பிப்பார். ஏற்கெனவே சொல்லியபடி இந்த ப்ரஸாதத்தை மஹாவிச்வாஸத்துடன் கர்த்தாவும், பந்து மித்திரர்களும் தரித்துக் கொள்ள வேண்டும். பிறகு, அந்த நல்ல காரியம் முடிந்தவுடன், எம்பெருமானுக்கு க்ரு தஜ்ஞதை தெரிவிக்கும்படி கீழ்க்கண்ட மந்திரம் ப்ருஹஸ்பதி ஸ்வாமி சொல்லி வைப்பார்.

பகவாநேவ ஸ்வநியாம்ய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்தி ஸ்வசேஷதைக ரஸேந அநேந ஆத்மநா கர்த்ரா ஸ்வகீயைச்சோபகரணை: ஸ்வாராதநைக ப்ரயோஜ நாய பரம புருஷ: ஸர்வேசேஷீ ச்ரிய:பதி: ஸ்வசேஷபூதம் (இந்த இடத்தில் கர்மாவைச் சொல்லவும்) கர்ம ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயமேவ காரிதவாந்.

சுபம்.

### * மழைக்காக வருண ஜபம்

விருத்தாசலம். ஆக. 5—பெண்ணுடம் பிரளயகாலேச்வர கோவிலில் வறட்சி நீங்கி மழை பெய்யவேண்டி, வருணஜபமும் .''மேகராககுறிஞ்சி'' ராகத் தில் நாதசுர இசை மற்றும் தேவார, இன்னிசைகளுடன் ஹோமம் கலசபூஜை செய்து தாராபாத்திர அபிஷேகமும் பஞ்சமூர்த்திகளுக்கும் விசேஷ அபிஷேகம், பூஜைகளும் நடத்தப்பட்டு ஏழைகளுக்கு அன்னதானமும் செய்யப்பட்டது.

—தினமணி 7–8–1977

### *ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஒரு ப்ரார்த்தனை

ஸர்வலோக யோக க்ஷேமத்திற்காக மேலே கூறப்படுவது போல் விஷ்ணு கோயில்களில் உருக்கமாக அடிக்கடி உசிதமான காலங்களில் ப்ரார்த்தனைகள் நடத்துதல் நலம்.

—லிப்கோ பதிப்பகத்தார்

# ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்

1. ''புறம்புண்டான பற்றுக்களை யுடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களை போதுபோக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களை ற்ற மறிந்து உகந்திருக்கையும், திருமந்திரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையவனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்.

என்கிற முமுக்ஷுப்படி வாக்கியப் படியான வைஷ்ணவ லக்ஷணம்,

2. ''ஞக்ஷாக்ஷராணி ச்ருண்வந்வை ததா பாகவதேரிதாந்,
ப்ரணாம பூர்வகம் க்ஷாந்த்யா யோ வதேத் வைஷ்ணவோ ஹி ஸ:''

என்ற பிரமாணம் கூறுகிறபடி பாகவதர்களால் ஏதேனும் ஒரு குற்றம் சாட்டப்பட்டவர்கள், அப்பாகவதர் திருவடிகளில் தண்டம்ஸமர்ப்பித்து,''இக்குற்றம் அடியேனுடையதுதான், க்ஷமித்தருளவேணும்.'' எனப் பிரார்த்தித்துப் பொறுத்துக் கொள்ளச் செய்வதே ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்.

## அடியேன், தாஸன், தேவர் தேவரீர்!

'அடியேன்' என்ற சொல், ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உடன்பிறந்த சொல்லாகும். ''தாஸபூதா: ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:'' என்ற வாக்யத்தின்படி ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும், 'தான்பகவானுக்குத் தாஸன், பாகவதர்களுக்குத் தாஸன்' என்று நன்றாக உணர்ந்து 'அடியேன்' என்ற சொல்லை அடிக்கடி உபயோகிக்க வேண்டும். 'தாஸன்' அல்லது 'அடியேன்' என்ற சொல்லுக்கு 'அடிமை' என்று அர்த்தம். அதாவது தான் வணங்கும் பகவானை பாகவதர்களோ மிகவும் உயர்ந்தவர்கள். தான் அவர்களைக் காட்டிலும் மிகவும் தாழ்ந்தவன் என்பதே அதன் பொருளாகும்.

இதை ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தங்கள் அருளிச் செயல்களில் நன்றாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். குலசேகராழ்வார், முகுந்தமாலையில் பகவானிடம்

''த்வத்ப்ருத்ய ப்ருத்ய பரிசாரகப்ருத்யப்ருத்ய
ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத''

''உன் தாஸனுக்குத், தாஸனுக்குத், தாஸனுக்குத் தாஸனுக்குத் தாஸனுக்குத் தாஸனுக்குத் தாஸனாக அதாவது ஏழாவது கீழ்ப்படியில் உள்ள சரமாவதி தாஸனாக என்னை நினைத்து அனுக்ரஹம் செய்'' என்று கூறுகிறார்.

ஸ்ரீ ஆளவந்தாரும் ஸ்தோத்ரரத்னத்தில்

''தவதாஸ்ய ஸுகை கஸங்கிநாம்
பவநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே''

''பகவானே! உனக்குத் தாஸன் என்று சொல்லி மகிழ்கின்ற பாகவதர்களின் வீட்டில் நான் புழுவாகப் பிறந்தாலும் அது எனக்கு உகப்பாகும்''என்றுதாஸ்யத்தின் மேன்மையை உயர்த்தியிருக்கிறார்.

ஸ்ரீவைஷ்ணவ பரமாசார்யரும் வேதம், தமிழ் செய்த மாறன் சடகோபனுமான நம்மாழ்வார் அநுஸந்திப்பதைப் பார்ப்போம்:—

''அடியேன் சிறிய ஞானத்தன் அறித லார்க்கு மரியானை,
கடிசேர் தண்ணந் துழாய்க்கண்ணி புனைந்தான் றன்னைக் கண்ணனை,
செடியார் ஆக்கை யடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை,
அடியேன் காண்பான் அலற்றுவன் இதனில் மிக்கோர் அயர்வுண்டே?
—திருவாய்மொழி 1–5–7.





## ‘திரு’வும் ‘ஸ்ரீ’யும்

ஸ்ரீவைஷ்ணவ பரிபாஷையில் ‘திரு’ என்ற சொல் அடிக்கடி பயன்படுத்தப் படுகிறது. 108 திவ்யதேசங்களின் பெயர்களில் அனேகமாக எல்லாவற்றிற்கும் திரு என்பது முன் நிற்கும். உதாரணம்:

திருப்பதி
திருவரங்கம்
திருவஹீந்திரபுரம்
திருமாலிருஞ்சோலை
திருவநந்தபுரம்
திருவல்லிக்கேணி
திருவெடந்தை (திருவிடவெந்தை)
திருக்கண்ணபுரம்
திருக்குருகூர்
திருக்கோவலூர்
திருக்கோட்டியூர்
திருக்குடந்தை முதலியன

இம்மாதிரியே, திருக்கை, திருவடி, திருமுகம், திருவாய், திருக்கண், திருமண் என்று எல்லாவற்றிற்கும் அனேகமாக, ‘‘திரு’’ என்ற சொல் சேர்த்து உச்சரிப்பது வழக்கத்தில் இருக்கிறது.

‘திரு’ போலவே ‘ஸ்ரீ’ என்பதும் சேர்த்துச் சில பதங்கள் உச்சரிக்கப்படுகின்றன.

ஸ்ரீக்ராமம், ஸ்ரீசூர்ணம், ஸ்ரீரங்கம் முதலானவை.

எங்கே ‘திரு’ சேர்க்க வேண்டும். எங்கே ‘ஸ்ரீ’ கலக்க வேண்டும் என்பதைப் பெரியோர்கள் உரையாடல்களைக் கேட்டுக்கேட்டு அநுபவத்தில் தெரிந்துகொள்ள வேண்டும்.

## ஸ்ரீ வைஷ்ணவ பரிபாஷையைப் பற்றி

அருளுருவாயமைந்த அண்ணல், உலகம் உய்ய உதித்த பெரியார், கற்றவர் போற்றும் கற்பகக்கனி, ஸ்ரீ உ. வே. ஸ்ரீமான் திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, எமது 5—10—1965 ச்ரவண இலவச வெளியீடு ‘‘ஸ்ரீவைஷ்ணவ பரிபாஷை’’ என்ற சிறிய நூலிற்கு உகந்து அளித்த அணிந்துரையை. (அதன் விசேஷ உபதேசங்களுக்காக, அடுத்த பக்கம் தந்துள்ளோம்.

பிங்கள ஸ்ரீ புரட்டாசி..மீ 7உ
ச்ரவணகபதினம்—சுக்ரவாரம்
23—9—1977

—விப்கோ பதிப்பகத்தார்

# அணிந்துரை

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனுடைய திருவவதார தினமான கந்யாச்ரவணம் (புரட்டாசித் திருவோணம்) என்கிற புனித நன்னாளை நினைக்கும்போதே அவ் வாசார்யோத்தமனின் மெய்யடியார்கள் உள்ளத்தில் உவகை பெரிதும் எழுவது இயல்பு. சென்ற நான்கு ஆண்டுகளாக அத்திருநாளில் நியமேந வெளியிடப் பெறும் லிப்கோ பதிப்பகத்தாருடைய புதிய புதிய அருமையான புத்தகங்கள் மேலும் ஒருபடி ஓங்கி அன்பர்களுக்கு மகிழ்ச்சி அளித்துவருகின்றன.

உலகமெங்கும் உண்மை வைணவம் தழைத்து, ஓங்கி, ஒளிபெற்று அனைவருக்கும் ஒளி பெறுவித்து விளங்க வேண்டும் என்ற பேரவாபூண்ட அப்பதிப்பகத்தார் இவ்வாண்டு வெளியிடவிருக்கும் நூலைப் பார்க்கும் பாக்கியம் அடியேனுக்குக் கிட்டியது. புது நாகரிகத்தில் மயங்கி இக்காலத்தில் பலர் வைணவர்களாகப் பிறந்தும் வைணவத்தின் அருமை பெருமைகளை உணராதிருக்கின்றனரே என்ற ஏக்கத்தினால் அவர்களுக்கு நல்லுபதேசம் புரியும் வகையில் இப்புத்தகத்தின் பெரும்பாகம் அமைந்திருக்கின்றது. வைணவ சமயத்தின் உயிர்நிலை போன்ற ஸர்வ பூததயை, விநயம், நல்லொழுக்கம், பெரியோரிடத்து பயபக்தி முதலிய உயர் குணங்களெல்லாம் அவர்களுடைய பரிபாஷையில் ப்ரதிபலிக்கிற முறை நன்கு விளக்கப்பட்டிருக்கிறது இந்நூலில்.

“கேசவா, புருடோத்தமா, கிளர் சோதியாய், குறளா என்று பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே” என்று பேசிய பெரியாழ்வாரை வழிகாட்டியாகக் கொண்டு “அடியேன்” என்றே ஒவ்வொருவரும் தன்னை இதர வைணவர்கள் விஷயத்தில் வ்யவஹரித்து வருவது காண்கிறோம். இதற்குச் சேர “அவர் ஸ்வாமி, நான் தாஸன்” என்றே எண்ணத்தக்கது. எவ்வளவு பெரிய மாளிகையாயினும் எனதில்லம் “அடியேன் குடிசை” என்றுதான் என் மனத்துக்குத் தோற்ற வேண்டும். திருமால் மெய்யடியாருடைய இருப்பிடம் எவ்வளவு சிறிய குடிசையாயிருந்தாலும் என் அபிப்ராயத்தில் அது “அந்த ஸ்வாமி திருமாளிகை” என்றுதான் பெருமை பெற்றிருக்கும். வீட்டில் செய்யும் சமையலெல்லாம் 'பெருமாள் தளிகை' என்றுதான் கருதப்பட்டு வருகிறது. பெரியோர்கள் உள்ளத்தில், இவையெல்லாம் வீண் பகட்டென்றோ, ஊராரை ஏமாற்றும் சொற்களென்றோ நினைக்கக்கூடாது. அப்படி ஒருகால் முதலில் அஹ்ருதயமாக அச்சொற்களைக் கையாண்டாலும், காலக்ரமத்தில் அவைகள் உண்மையாகவே மாறிவிடும். “பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமேயாடி, மெய்யே பெற்றொழிந்தேன்” என்பது நம்மாழ்வார் அனுபவம். அவர்தாம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் குலபதி. ஆகவே நம் பழக்க வழக்கங்களையும், நம் முன்னோர்கள் கையாண்டு வந்த சொற்களையும் நாம் பொன்னே போல் போற்றி அவற்றைக் கைவிடாது கடைப்பிடித்து நல்வாழ்வு வாழ வேண்டும். அதை வற்புறுத்துவதுதான் இப்புத்தகத்தின் முக்கிய நோக்கு.

நம்மிடத்து உண்மையான வைஷ்ணவத்வம் விளங்கவில்லையே என்று வருந்துவோர் தூப்புல் பிள்ளை பொற்றாளில் சரணம் புகுந்தால் வைஷ்ணவத்வம் அவர்களுக்கு நிலைப்பதோடு, அவைஷ்ணவத்வம் அறவே ஒழியும் என்று ஸ்வாமி தேசிகன் திருக்குமாரர் “பிள்ளையந்தாதி” என்னும் ப்ரபந்தத்தில் நமக்கு உபதேசிக்கிறார்.

“வணக்கம் ஒடுக்கம் வழக்கம் ஒழுக்கம் இரக்கம் சேரும்
இணக்கம் உறக்கம் இழுக்கும் அழுக்கும் இகந்து நிற்கும்
குணக்குல மோங்கும் இராமானுசன் குணம் கூறும் தூப்புல்
அணுக்கனைப் பிள்ளைதனை அரணை அடைபவர்க்கே.” என்று.

* * *

“யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்” என்ற மனப்பான்மை பூண்டு லிப்கோ பதிப்பகத்தார் செய்து வரும் உயர் தொண்டில் அடியேனுக்கும் இவ்வணிந்துரைவரைய இடம் கொடுப்பதன் மூலம் பங்கு கொடுத்த அவர்களுக்கு இதன் மூலம் நன்றி செலுத்துகிறேன்.

D. ராமஸ்வாமி தாஸன்
(விசுவாவசு புரட்டாசித் திருவோணம்)

5–10–1965

# ஸ்ரீ வைஷ்ணவர்களின் உரையாடல்

(மாதிரி)

**வினா :** தேவரீர் இருப்பிடம் எதுவோ?

**விடை:** "நல்வேதியர்கள் தொழும் திருப்பாதன் இராமானுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத்தாடுமிடம் அடியேனுக்கு இருப்பிடமே."

**வினா :** தொழில் ?

**விடை:** "தொழிலெனக்குத் தொல்லை மால்தன் நாமமேத்தல்."

**வினா :** பொழுதுபோக்கு ?

**விடை:** "திருமாலைத் தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசிப்பதுமே பொழுது போக்கு."

**வினா :** ஆகாரம்?

**விடை:** "உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்."

**வினா :** ஏதாகிலும் குறைவுண்டோ?

**விடை:** திருமாலைப் 'போற்றியென்றே கைகளாரத் தொழுது சொன்மாலைகள் ஏற்ற நோற்றேற்கு இனியென்ன குறை எழுமையுமே." "ஆள்கின்றான் ஆழியான் யாரால் குறைவுடையம்."

**வினா :** அடியேனுக்கு ஒரு நல்லுபதேசம் செய்தருள வேண்டும்.

**விடை:** "திருநாரணனைக் காலம் பெறச் சிந்தித்துய்மினோ."

# ஸ்ரீ வைஷ்ணவ பரிபாஷை

ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒருவரோடொருவர் பேசவேண்டிய முறை, பரிபாஷைச் சொற்களையும், மாதிரி உரையாடல்களையும் கொடுப்பதன் மூலம் இங்கு விவரிக்கப் படுகிறது. கூடியவரை, காலை எழுந்தது முதல் இரவில் படுக்கும் வரையில் உள்ள செயல்கள் சில ப்ரகரணங்களாகப் பிரித்துத் தரப்பட்டுள்ளன. இப்பேற்பட்டதான் சொற்கள் வைஷ்ணவ பரிபாஷை முறையில் வழக்கத்தில் இருந்து வருகின்றன. அவை இதர ஸம்ப்ரதாயங்களுக்கும் பொதுவானவை.

## 1. ஸ்நாந ப்ரகரணம்

| பரிபாஷை | | பொருள் |
|---|---|---|
| அந்பசங்கை | : | சிறுநீர் கழித்தல் |
| பஹிச்சங்கை | : | ஜலபாதை நிவ்ருத்தி |
| ப்ரக்ஷாளனம் | : | சௌசம் செய்துகொள்ளுதல் |
| தந்ததாவனம், தந்தசுத்தி | : | பல் தேய்த்தல் |
| தீர்த்தமாடுதல், நீராட்டம் | : | ஸ்நானம் செய்தல் |
| ஸ்நான சாடி | : | குளிக்கும்போது தரிக்கும் துண்டு |
| வேஷ்டி, திருப்பரிவட்டம் | : | 8 முதல் 12 முழம் வரையுள்ள கச்சம் வைத்து தரிக்கும் வஸ்திரம் |
| உத்தரீயம் | : | மேல்வேஷ்டி |
| திருப்பரிவட்டம் சாற்றிக்கொள்ளுதல் | : | வேஷ்டி உடுத்திக்கொள்ளுதல் |
| யஜ்ஞோபவீதம் | : | பூணூல் |
| மடிஸஞ்சி | : | சுத்தமாக வஸ்திரம் முதலியவைகளை வைக்கும் கம்பளியால் ஆன பை |
| திருப்புட்கூடை | : | ஓலையில் ஆன பெட்டி |

| | | |
|---|---|---|
| திருமண்காப்பு, ஊர்த்வபுண்ட்ரம் | : | ஸ்ரீ வைஷ்ணவன் என்பதைக்குறிக்கும் சின்னமான திருமண்ணும் ஸ்ரீசூர்ணமும் |
| திருமண்பெட்டி | : | திருமண் ஸ்ரீ சூர்ணம் உள்ள பெட்டி |
| த்வாதசோர்த்வ புண்ட்ரம் | : | பன்னிரண்டு திருமண் காப்பு |
| அநுஷ்டானம் | : | நித்ய கர்மங்களைச் செய்வது |

## 2. பூஜா ப்ரகரணம்

| | | |
|---|---|---|
| திருவாராதானம் | : | பூஜை செய்தல் |
| பெருமாள் | : | பகவான் விக்ரஹம், ஸாளக்ராமம் முதலியன |
| தாயார், பிராட்டி, தேவி | : | ஸ்ரீ மஹாலக்ஷ்மி |
| திருக்காவேரி | : | பூஜைக்காக ஜலம் வைக்கும் பாத்திரம் |
| வட்டில்கள் | : | பூஜையில் அர்க்ய பாத்யம் முதலியன ஸமர்ப்பிக்கும் வட்டமான பாத்திரங்கள் |
| படிகம் | : | அர்க்ய பாத்யங்களை பகவானுக்கு நிவேதநம் செய்தபின் சேர்க்கும் பாத்திரம் |
| திருக்காப்பு நீக்குதல் | : | பகவான் எழுந்தருளியுள்ள பெட்டியின் கதவைத்திறப்பது |
| ஏள்ளப் பண்ணுதல், எழுந்தருளப் பண்ணுதல் | : | ஸாளக்ராமம் விக்ஹம் முதலியவைகளை ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றுதல் |
| கோயிலாழ்வார் | : | ஸாளக்ராமம் அல்லது விக்ரஹம் அமர்ந்திருக்கும் மரத்தால் செய்த கோயில் போன்ற பெட்டி |
| திருவிளக்கு | : | பகவான் எதிரில் உள்ள தீபம் |
| திருமணி ஸேவித்தல் | : | பூஜையில் மணியடித்தல் |
| திருந்துழாய் | : | துளசி |
| பரிமளத்ரவ்யம் | : | ஏலக்காய் முதலிய வாசனைத் திரவியங்கள் |
| அடைக்காய் | : | வெற்றிலை, பாக்கு |
| திருமஞ்சனம் | : | அபிஷேகம் |
| சாற்றுப்படி | : | சந்தனம் (அல்லது) பகவானுக்குச் செய்யும் அலங்காரம் |
| திருப்பரிவ(யு)ட்டம், பீதாம்பரம், | : | பெருமாள் வஸ்திரம் |
| ஸேவாகாலம் | : | திவ்ய ப்ரபந்த அநுஸந்தானம் |
| சாற்றுமறை | : | சாற்றுப் பாசுரங்களை (முடிவுப் பாசுரங்களை) அநுஸந்தித்தல் |
| மங்களாசாஸநம் | : | பெரியோர்கள் சுலோகங்களாலும் பாசுரங்களாலும் பகவானுக்கு மங்களம் ஏற்பட வேண்டும் என்று ஸ்தோத்ரம் செய்வது. இதனால் பொதுவாகப் பெரியோர்கள் பெருமாளை வணங்கி வழிபடுவதே மங்களாசாஸனம் என்று சொல்லப்படுகிறது. |
| அமுது செய்யப்பண்ணுதல், அமிசெய்யப் பண்ணுதல் | : | பகவானுக்குப் பிரஸாத பணியார வகைகளை நிவேதனம் செய்தல் |
| தீர்த்தவாரி, அவப்ருதஸ்நானம் | : | கோயில்களில் உத்ஸவம்முடிந்த கடைசி தினம் புஷ்கரிணியில் நடக்கும் அபிஷேகம். |

| | |
|---|---|
| அத்யாபகம் | : ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களை ஸேவித்தல் |
| அத்யயனம் | : வேதமோதுதல் |
| மண்டகப்படி | : உத்ஸவ காலங்களில் பகவானைவிசேஷ மாகக் கொண்டாடும் வைபவம் |
| ஈரவாடை தீர்த்தம் | : திருமஞ்சனம் ஆனபின்பு பகவான் வஸ்த்ரத்திலிருந்து பிழியப்படும் தீர்த்தம் |
| பெருமாள் தீர்த்தம் | : திருவாராதனம் முடிந்த பிறகு கொடுக்கப்படும் தீர்த்தம் |
| திருப்பாவாடை, பெருந்திருப்பாவாடை | : நிரம்பப்பிரஸாதத்தை சேர்த்து பகவானுக்கு நிவேதனம் செய்தல் |
| திருஆலவட்டம் | : பகவானுக்கு வீசும் விசிறி |
| பெரிய திருவடி | : கருடன |
| சிறிய திருவடி | : ஆஞ்சநேயர் |
| திருவந்திக்காப்பு | : காலையிலோ மாலையிலோ வீதிப்புறப்பாடு முடிந்து இறுதியில் பாவானுக்கு ஸமர்ப்பிக்கும் ஒரு ஹாரத்தி |
| திருவாபரணம் | : பகவானுக்கு சாற்றும் ஆபரணங்கள் |
| திருமுடி | : பகவானுடைய சிரஸ் |
| சேர்த்தி | : மூலஸ்தானம்—சேர்ந்திருத்தல் |

## 3. போஜன ப்ரகரணம்

| | |
|---|---|
| திருமடைப்பள்ளி | : சமையலறை |
| அரங்கு | : சமையல் அறைக்கு அடுத்து சாப்பிடு வதற்காக அமைந்த இடம் |
| தளிகை | : சமையல் |
| ஸ்தல சுத்தி | : சாப்பிட இலைபோடுவதற்குமுன்சாணம் கலந்த ஜலத்தால் இலையளவுதரையைச் சுதுரமாக சுத்தம் செய்வது. |
| இலை தளிகை சேர்த்தல் | : இலைபோடுதல் |
| ப்ரஸாதம், ஸாதம் | : அன்னம் |
| நெய்யமுது, அன்னசுத்தி | : நெய் |
| பெருமாள் தீர்த்தம் | : பரிஷேசனத்தில் ஸாதிக்கும் பூஜை தீர்த்தம் |
| உத்தராபோசனம் | : சாப்பாடு முடிந்தவுடன் செய்யும் பரிஷேசனத்துக்குத் தீர்த்தம் |
| ஸாதித்தல் | : பரிமாறுதல் |
| தழுகரமுது, நெகிழ்கரியமுது | : குழம்பு, சாம்பார் |
| சாத்தமுது, சாரமுது | : ரஸம் |
| கரியமுது | : பக்குவம் செய்யப்பட்ட கரிகாய்கள் வகை |
| திருக்கண்ணமுது, அக்கார வடிசில் | : பாயஸம் |
| உபதம்சம் | : ஊறுகாய் |
| வெள்ளைசர்க்கரை | : உப்பு |
| ஓரைகள் | : புளிசாதம், தயிர்சாதம், பொங்கல் முதலிய கலப்பு சாதங்கள் |
| புளியோரை | : புளிசாதம் |
| தத்யோதனம் | : தயிர்சாதம் |
| திருப்பணியாரம் | : வடை, அதிரசம் முதலியன |
| மனோஹரம் | : வெல்லப்பாகு சேர்த்து உருட்டிய தேன் குழல் உருண்டை |

அமுது பாறை : புளியோரை முதலிய ப்ரசாதங்கள் கலக்கும் பாறை அல்லது மேடை

என்ன திருவுள்ளம்? : என்ன தேவை?

ததீயாராதனம் : ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்துச் செய்யும் ஸமாராதனம்

தீர்த்தம் : உட்கொள்ளும் ஜலம்

உஷ்ண தீர்த்தம் (அல்லது)உஷ்ணோதகம் : உட்கொள்ளுவதற்கான சூடானஜலம்

சீதோதகம்(அல்லது) : உட்கொள்ளுவதற்கான குளிர்ந்தஜலம்

தீர்த்தம் }
தாகசாந்தி } : தீர்த்தம் அல்லது வேறு ஏதாவது பானங்கள் மூலம் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளுதல்

உபவாஸம் : ஏகாதசி போன்ற தினங்களில் பட்டினியாக இருத்தல்

பாரணை : த்வாதசியன்று காலையில் போஜனம் செய்தல்.

பரான்னம் : பிறர் இடும் உணவு

பத்ர நியமம் : உணவு உண்ண தகுந்த இலையை பயன்படுத்தும் முறை

## 4. சயன ப்ரகரணம்

சயனித்துக் கொள்ளுதல், : படுத்துக்கொள்ளுதல்

திருக்கண் வளருதல் : தூங்குதல்

## 5. பந்துவர்க்கங்கள்

திருத்தகப்பனார் : தந்தை

திருத்தாயார் : தாய்

திருத்தமையன் : அண்ணன்

தமக்கை : அக்காள்

திருப்பாட்டனார், பிதாமஹர் : தந்தைவழிப் பாட்டனார்

பிதாமஹி : தந்தைவழிப் பாட்டி

மாதாமஹி : தாய்வழிப் பாட்டி

(அம்மான்), மாதுலர் : மாமா

திருத்தமபி : தம்பி

தன்னுடைய தம்பியைக் குறிக்கும்போது அடியேனுடைய "தம்பி என்றுதான் சொல்லவேணும். பொதுவாகப் பெரியவர்களைக் குறிக்கும்போது அந்த ஸ்வாமி (நாராயணசார்வர்ஸ்வாமி) என்று கூறினால் போதும். அவர்கள்மனைவிகளைக் குறிக்கும்போது 'ஸ்வாமி தேவிகள்' என்றும் சொல்ல வேணும். அவர்கள் பிள்ளையை ஸ்வாமி குமாரர் என்றும், பெண்ணை ஸ்வாமி குமாரத்தி என்றும் சொல்லவேணும். இது தமது ஆசாரியனுடைய பிள்ளை பெண் விஷயத்தில் மிகவும் முக்கியம்.

அத்தான் : அத்தையின் பிள்ளை

அத்தங்காள் : அத்தையின் பெண்

அம்மாஞ்சி : மாமாவின் பிள்ளை

அம்மங்கா : மாமாவின் பெண்

## 6. பெரியோர்களோடு பேசும்போது சில சொற்கள்

தேவரீர் : தாங்கள்

அடியேன் : நான்

| | | |
|---|---|---|
| எழுந்தருளவேண்டும் | : | தாங்கள் வரவேண்டும் |
| எழுந்தருளப்பண்ணு | : | பெரியவர்களை அழைத்து வர அல்லது சாளக்ராமம், க்ரந்தம் முதலியவைகளை எடுத்துவரச் சொல்லுதல் |
| திருவுள்ளம் பற்றவேண்டும்; | : | |
| ப்ரதிக்ரஹிக்கவேணும்; ஸ்வீகரிக்கவேணும் | : | அங்கீகரிக்கவேண்டும் |
| ஸ்வாமி என்ன ஸாதித்தது | : | தாங்கள் என்ன சொன்னீர்கள்? |
| திருமேனி பாங்கா? | : | உடம்பு சௌகரியமா? |
| ஸ்வாமி திருநாமம்? | : | தங்கள் பெயர்? |
| தேவள் ஸ்ரீக்ராமம்? தேவள் எவ்விடம்? | : | தங்கள் ஊர் பெயர்? |
| ஸ்வாமி திருமாளிகை | : | தங்கள் வீடு |
| அடியேன் குடிசை | : | என் வீடு |
| திருச்செவி சாத்தவேணும் | : | காது கொடுத்துக் கேட்கவேண்டும் |
| கடாக்ஷிக்கணும் | : | பார்க்கவேண்டும் |
| திருவுள்ளச் சீற்றம் (அ) திருவுள்ளக் கலக்கம் | : | கோபம் |
| உபேக்ஷை | : | கவனியாதிருத்தல் |
| ஸ்வாமி தேவிகள் | : | தங்கள் மனைவி |
| ஸ்ரீமுகம் | : | கடிதம் |
| திருநக்ஷத்ரம் | : | பிறந்த நாள் |
| ஸ்ரீசூர்ண பரிபாலனம் | : | இறந்தவர்களுக்குப் புண்ட்ரதாரணம் செய்து வைக்கும் சடங்கு |
| திருவத்யயனம் | : | சிராத்தம் |
| பரமபதித்துவிட்டார், பரமபதம் ஏள்ளிவிட்டார், திருநாடலங்கரித்தார் | : | மரணமடைந்துவிட்டார் |
| திருவோலக்கம் | : | வரிசையாக (கோஷ்டியாக) இருப்பது |
| ஸ்ரீகோசம் | : | புஸ்தகம் |
| நியமிக்கவேணும் | : | உத்திரவு இடவேணும் |
| ஸ்ரீஸூக்தி | : | பெரியவர்களின் க்ரந்த ரூபமான வாக்கு |
| ஸ்ரீபாஷ்யம் | : | ஸ்ரீபகவத் ராமாநுஜர் இயற்றிய பிரஹ்ம ஸூத்ரபாஷ்யம் |
| பகவத்விஷயம் | : | நம்பிள்ளை அருளிச் செய்த திருவாய்மொழியின் வ்யாக்யானம். |
| ஐதிஹ்யம் | : | பரம்பரையாகச் சொல்லும் சரித்திரம் |
| குசலப்ரச்னம் | : | க்ஷேமம் விசாரித்தல் |
| தண்டம் ஸமர்ப்பித்தல், ஸேவித்தல் | : | நமஸ்காரம் பண்ணுதல் |
| ஸ்வாமி ஸாதித்தார் | : | பெரியவர் சொன்னார் |
| ஸ்வாமி நியமனம் | : | பெரியவர் ஆக்ஞை (ஆணை) |
| ப்ருஹஸ்பதி | : | வைதிக கர்மங்களைச் செய்விக்கும் உபாத்யாயர் |
| நிமந்த்ரணம் | : | ச்ராத்தத்திற்கு பித்ருவர்ணம் முதலியவைகளுக்காக ஒருவரை வரித்தல் |
| திருமிடற்றோசை | : | பெரியோர்களுடைய பேச்சுக்குரலை குறிக்கும் மரியாதையான சொல் |
| தன்னடிச்சோதி | : | அவதாரம் முடிந்தபின் பகவான் தம் இருப்பிடமாகிய வைகுண்டத்தை திரும்பி அடைவதையும், ஆசார்யன் பரமபதித்ததையும் குறிக்கும் சொல் |
| கைங்கர்யம் | : | பகவானுக்கும், பாகவதர்களுக்கும் செய்யும் தொண்டு |

## 7. ச்ராத்த நிமந்த்ரணத்திற்கு ஸ்வாமிகளை அழைக்கும் முறை

அடியேன் தாயார் திருவத்யயனம் நாளைமறுநாள், வருகிறது. தேவர் எழுந்தருளி அதைப் பூர்த்தி செய்வித்து ஸ்ரீபாததீர்த்தம் ஸாதித்தருளவேண்டும்.

(அல்லது)

அடியேன் திருத்தகப்பனாரின் ச்ராத்தம் ஏகாதேசி தினம் வருகிறது. தேவரீர் நிமந்த்ரணம் எழுந்தருளி ஸ்ரீபாததீர்த்தம் ஸாதிக்கவேணும்.

## 8. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே உரியதான சில அனுஷ்டானச் சொற்கள்

| | | |
|---|---|---|
| ப்ரபத்தி | : | சரணாகதி |
| பரஸமர்ப்பணம், பரந்யாஸம், | : | மோக்ஷத்தை விரும்பி ஆசார்யன் மூலமாக பகவானைச் சரணமடைதல். |
| ஸமாச்ரயணம், பஞ்ச ஸம்ஸ்காரம் | : | ஆசார்யனை அணுகி (1) சங்கசக்ராங்கனம் (சங்கு சக்ரங்களைக் காய்ச்சி புஜங்களில் முத்திரையிடுதல்)(2) திருமண் காப்பு (3) தாஸ்ய (நாமா) பெயர் வைத்தல் (4) மந்த்ரோபதேசம் (திருவஷ்டாக்ஷரம், த்வயம், த்வயம், சரமச்லோகம் ஸ்ரீமத் ராமாயணம் முதலியவைகளை உபதேசித்தல்) (5) யாகம் (திருவாராதன உபதேசம்) என்ற ஐந்து சடங்குகள் |
| ஸ்ரீபாத தீர்த்தம் | : | ஆசார்யன் திருநக்ஷத்ரம், ச்ராத்தம் முதலியவைகளில் பாதுகை அல்லது பேரியவாளின் வலதுகால் கட்டை விரலை அலம்பிய தீர்த்தம். அது மஹா விஷ்ணுவினுடைய திருவடியில் தோன்றிய கங்கா தீர்த்தமாகக் கருதப் படுகிறது |
| பஞ்சகவ்யம் | : | (1) பசுவின் பால், (2) தயிர், (3) நெய், (4) சாணம், (5) கோமயம் இவ் வைந்தும் ஒன்று சேர்த்த பொருள் பஞ்சகவ்யம். இதைப் பல ஸந்தர்ப்பங்களில் சரீர சுத்திக்காக ஸ்ரீவைஷ்ணவர்கள் உட்கொள்வது வழக்கம். |

## 9. ஸரியான பதங்கள் தெரியாமல் தவறாக உச்சரிக்கும் சொற்களும் திருத்தமும்

| தவறான சொற்கள் | | திருத்தம் |
|---|---|---|
| ப்ரம்மோஸ்தவம் | : | ப்ரம்மோத்ஸவம் |
| புண்யாசனம் | : | புண்யாஹவாசனம் |
| உதயசாந்தி | : | உதகசாந்தி |
| உத்தராபோஜனம் | : | உத்தராபோசனம் |
| பெருமாள் தேர்த்தம் | : | பெருமாள் தீர்த்தம் |
| உன்யோகம் | : | விநியோகம் |
| மோளம் | : | மேளம் |
| ச்ரார்த்தம் | : | ச்ராத்தம் |
| பலேணிதர்ப்பணம் | : | பரேஹணிதர்ப்பணம் |
| சீமந்தம் ஸ்ரீமந்தம் | : | ஸீமந்தம் |
| கெரப்ரேசம் | : | க்ருஹப்ரவேசம் |
| தடியார்தனை | : | ததீயாராதனை |
| ஆடிநிறைவு | : | ஆண்டுநிறைவு |
| அமுந்திரி | : | அமுதுபடி |
| திருமட்டி | : | திருமண்பெட்டி |

## ஸ்ரீ வைஷ்ணவ பரிபாஷைச் சொற்கள்

(வித்வான், ந்யாய சிரோமணி, சொல்வேந்தர்
யதீந்த்ர ப்ரவணப் பிரபாவம் பிள்ளைலோகம்
ஸ்ரீமான் உ. வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி)

அகம்: மனம், வீடு
அடிசில்: உணவு
அக்காரவடிசில்: திருக்கண்ணமுது
அரவணை: சயனதிவாஸம்
அலகிடுதல்: பிரித்தல், கோலமிடுதல்
அயோனிஜர்: கர்ப்பவாஸம் செய்யாதவர், பிறக்காமல், தோன்றுபவர்
அன்னம்: உணவு
அவஸானம்: முடிவு
அமாவாஸ்யை : க்ருஷ்ணபக்ஷத்தின் கடைசி நாள்
அத்யயனம்: ஓதுதல், கற்றல்.
அபிவாதனம்: 'அபிவாதயே' என்று தொடங்கி கோத்ரம், ஸூத்ரம் நாமா சொல்லுதல்
அத்யயனஉத்ஸவம்: பகற்பத்து, ராப்பத்து
அத்யாபகர்: ஆசிரியர்,
அத்யாபகர்கள்: ஸன்னிதியில் திவ்யப் பிரபந்தம்ஸேவிப்பவர்கள்
அநுதாபம்: பிறர் துன்பத்தைக் கண்டு, மனக்லேசம் கொள்ளுதல்
அந்நபாநாதி: உணவு, நீர் முதலியன.
அர்த்தஸேது: மாமல்லபுரம்.
அக்ஷதை: மஞ்சள்கலந்த அரிசி
அமுதுபடி: அரிசி
அடியேன்: அடியவன்
அபராதம்: தவறு
அபராதத்தொகை: தவறுக்குரிய தொகை
அர்ச்சகர்: கோயிலுள்ள அர்ச்சா மூர்த்தியை ஆராதிப்பவர்
அமுது செய்தல்: பெரியோர் உண்ணுதல்
அடைக்காய்: பாக்கு
அநுஷ்டானம்: நித்யகர்மங்களைச்செய்தல்
அற்பசங்கை: சிறுநீர் கழித்தல்
அதிதி: விருந்தினர்
அபவித்ரம்: சுத்தமில்லாதது
அயோக்யம்: தகுந்ததன்று
அநாஹூதன்: அழைக்கப்படாதவன்.
அருளிச் செயல்: நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
ஆலவட்டம்: விசிறி
ஆசீர்வாதம்: பெரியோர் சிறுவருக்கு ஆசி கூறுதல்.
ஆசாரியர் : திருமந்திர உபதேசம் செய்பவர்
ஆரம்பம்: தொடக்கம்
ஆதுரம்: பேரார்வம்

ஆஸனம்: இருக்கை.
ஆழ்வான்: கூரத்தாழ்வான்
ஆண்டான்: முதலியாண்டான்
ஆண்டாள்: கோதை
ஆனந்தம்: மகிழ்ச்சி
ஆபாதசூடம்: திருவடி முதல் திருவடி வரை
ஆவாஹனம்: ஒரு பொருளில் வரச் செய்தல்
ஆஹுதி: நெய்யினால் ஒருமுறை ஹோமம் செய்தல்
ஆஹூதன்: அழைக்கப்பட்டவன்
ஆராமம்: சோலை
ஆகாசம்: வானம்
இதிஹாஸம்: கதை
இயத்: இவ்வளவு
இரா: இரவு
இன்னடிசில்: இனியஉணவு
இந்தனம்: கட்டை
இருடீகேசன்: ரிஷீகேசன்
இரக்கம்: கருணை
இறக்கம்: மேலிருந்து கீழே இறங்குதல்
ஈரவாடை: நனைந்தஆடை
ஈதல்: கொடுத்தல்
ஈசாந்யம்: வடகிழக்கு
உபதேசம்: அறிவுரை
உத்தரிணி: வட்டிலிலிருந்து தீர்த்தம் எடுக்கும் பாத்திரம்
உத்தரீயம்: மேலே அணிந்து கொள்ளும் துணி
உபகாரம்: உதவி
உத்தராபோசனம்: உணவின் முடிவில் கையில் ஒரு முறைதீர்த்தம் சேர்த்து மந்திரத்தோடு உட்கொள்ளுதல்
உபஹாரம்: கோயிலுக்குச் செல்லும் போது பகவானுக்காக எடுத்துச் செல்லும் பூ, பழம், தேங்காய் முதலியன
உபநயனம்: பூணூல் முகூர்த்தம்.
உபயவிபூதி: பரமபதம், பூலோகம்
உதகசாந்தி: சாந்தி அளிக்கும் தீர்த்தம்
உத்யோகம்: முயற்சி, வேலை.
உபவாசம்: பட்டினி இருத்தல்
உபதம்சம்: ஊறுகாய்
உஷ்ணோதகம்: வெந்நீர்.
உபத்ரவம்: தொல்லை.

உரகம்:பாம்பு
உறுதுணை:நல் லதுணை
உயர்வு:மேன்மை
உத்தரம்:விடை
உத்வாஹம்:விவாஹம்
ஊண்:உணவு
ஊசல்:ஊஞ்சல்
எம்மான், எம்பெருமான்:பகவான்
எம்பெருமானார், எதிராசன்: உடையவர்
எழுந்தருள்க: வரவேணும்
எற்றைக்கும்:என்றைக்கும்
எதுகிரி:திருநாராயணபுரம்
எம்பார்:கோவிந்தபட்டர்
ஏதம்:பரவம்
ஏகம்:ஒன்று
ஏக்கம்:ஏங்கி இருக்கும் நிலை
ஏற்றம்:ஏறுதல்
ஏளனம்:பரிகாசம்
ஏசல்:ஏசுதல்
ஏகாந்தம்:ரகசியம்
ஏகாங்கி:தனிமனிதன்
ஏகாதசி:விஷ்ணுதிதி
ஏகாந்தி:பரமைகாந்தி
ஐவர்:பஞ்சபாண்டவர்
ஐம்புலன்:செவி வாய் கண் மூக்கு உடல்
ஐதிஹ்யம்:கர்ணபரம்பரையாகக்கூறப் படும் நிகழ்ச்சி
ஐராவதம்:இந்திரனின் யானை
ஐந்திலக்கணம்: எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.
ஐயைந்துமைந்து:முப்பது பாசுரங்களைக் கொண்ட திருப்பாவை
ஐவாய் அரவணை:ஐந்து தலை நாகம்.
ஐயர்:தகப்பனார்.
ஒருவன்: நிகரற்றவன்.
ஒருத்தி:நிகரற்றவள்
ஒழுக்கம்:நடத்தை
ஒழிவு:ஓய்வு
ஓம்:பிரணவம்
ஓமம்:ஆஹுதி
ஓதம்:ஈரம்
ஓணம்:திருவோணம்
ஓதுதல்:படித்தல்
ஓலமிட்டான்:கத்தினான்
ஓர்:நினை
ஔபாஸனம்:திருமணமானவர் தினமும் செய்ய வேண்டிய ஹோமம்
கச்சி, காஞ்சி:காஞ்சீபுரம்
கண்டம்: கழுத்து.
கடாக்ஷம்:பெரியோரின் பார்வை
கல்பவிருக்ஷம்:கேட்டதைத் தரும் கற்பக மரம்
கங்கணம்:கைகாப்பு
கத்யத்ரயம்:சரணாகதி, ஸ்ரீரங்க, ஸ்ரீவை குண்ட கத்யங்கள்
கல்யாணம்:மங்களம்
கரியமுது:பக்குவம் செய்யப்பட்ட காய் கறி.
கருடன்:பக்ஷிராஜன்
கர்ப்பகிருஹம்:மூலஸ்தானம்
காமக்ரோதாதி:ஆசை கோபம்முதலியன
காலாதீதம்:காலம் கடந்தது.
கிரஹண காலம்:சூர்ய சந்திரர்கள் ராஹுவினால் பிடிபடும்காலம்
கிரமம்:வரிசை, முறை.
நவகிரஹம்:நவக்கிரஹங்கள்
கிருஹம்:வீடு.
கிங்கரன்:வேலைக்காரன்
கிருஷ்ணன்:கண்ணன்
கிருஷ்ணை:திரௌபதி
கிரி:மலை.
கீதை:பகவத்கீதை.
கீதாசாரியன்:கண்ணன்.
கீதம்:பாடப்பட்டது (பாட்டு)
குரு:ஆசாரியர்
குணம்:பண்பு
குருகு:ஒரு பறவை
குருகூர்:ஆழ்வார் திருநகரி.
குருபரம்பரை:ஆசார்ய பரம்பரை (வரிசை)
குருக்ஷேத்திரம்:பாரதயுத்தம் நடந்த இடம்.
குருவேர்:தலையில் அணியும்வாசனைவேர்
குருகுலவாசம்:ஆசாரியரின் திருமாளி கையில் வசித்தல்
குரோதம்:கோபம்
குழவி:குழந்தை
குலசேகரர்:குலசேகராழ்வார்.
குலசேகரப்படி:ஸன்னிதியில் கர்ப்பகி ருஹத்திற்கு அடுத்த வாசற்படி.
குளிர்ச்சி:தண்மை.
குஹப்பெருமாள்: ராமனின் நண்பன் குகன்
குமாரன்:மகன்
கேணி:கிணறு
கேசவன்:பகவான்
கேழல்:வராஹம்.
கைதை:தாழை
கைங்கர்யம்:அடிமை
கைகேயி:பரதனின் தாய்
கைசிகம்:ஒரு பண்
கைரவிணீ:திருவல்லிக்கேணி.
கைம்மாறு:பதிலுதவி
கொழுநன்:கணவன்
கொழுமுகில்: கருமேகம்
கொழுந்து:தளிர்(அ) துளிர்

கொண்டான்:கணவன்.
கொடை:தானம்
கோபாலன்:கண்ணன்
கோகுலம்:கண்ணன் வளர்ந்த இடம் (அ) பசுக் கூட்டம்
கோ:அரசன் (அ) பசு.
கோவலன்:கோபாலன்
கோயில்:ஸ்ரீரங்கம், கோவில்
கோகிலம்:குயில்
கோள்:குற்றம்.
கோளரி:நரசிங்கம்
கோளாறு:கோணல்
கோலம்:அழகு
கோவிந்தன்:பகவான், கண்ணன்
கோசிகன்:விசுவாமித்திரர்
கோடு:சிகரம்
கோடரி:மரம் பிளக்கும் கருவி (கோடாலி)
கோடல்:ஏற்றுக்கொள்ளுதல்
கோடி:வரிசை
கோயிலாழ்வார்:கோவில் வடிவத்தில் இருக்கும் பெட்டி,
கோமகன்:இளவரசன்
கோதுகலம்:மகிழ்ச்சி
கோதை:ஆண்டாள், பெண்.
கோது:குற்றம்
கௌஸ்துபம்:பகவானின் திருமார்பிலுள்ள ஆபரணம்
கௌசிகம்:ஒரு கோத்திரம்
கௌதமர்:ஒரு மஹரிஷி
கௌரவர்:திருதராஷ்ரனும், அவன் மக்களும்
க்ருஷ்ணாஜினம்:மான்தோல்
க்ருபை:கருணை
க்ருமி கீடாதி:பூச்சி புழு முதலியன
க்ருத்ரம்:கழுகு
க்ராமம்:சிற்றூர்
சதுரன்:கெட்டிக்காரன்
சமன்:சமம்
சதுர்முகன்:பிரஹ்மா
சதுர்புஜன்:திருமால்
சகடம்:வண்டி
சக்ரவர்த்தி:பேரரசன்
சயனம்:படுத்தல்
சாயை:நிழல்
சாமரம்:கவரி
சாந்தம்:அமைதி
சாற்று:சாற்றுமறை
சாத்துப்படி:சந்தனம்
சாற்றமுது:ரசம்
சார் தூலம்:புலி
சார்ங்கம்:பகவானின் கையில் இருக்கும் வில்
சிரஸ்:தலை
சிரம்:வெகுகாலம்
சிகை:முடி
சிகரம்:உச்சி
சிகைக்காய்:சீக்காய்
சிதலை:கரையான்
சிந்தனை:நினைவு
சீமான்:செல்வன்
சீர்:புகழ்
சீர்பாடல்:புகழ்ப்பாடல்
சுபம்:மங்களம்
சுகம்:கிளி, இன்பம்.
சுரர்:தேவர்
சுமங்கலி:கணவனோடு வாழ்பவள்
சுயம்பு:பிரம்மா
சுமுகம்:மலர்ந்த முகம்
சூரன்:திறமை மிக்கவன்
சூக்ஷ்மம்:மிகச் சிறியது
சூத்ரம்:நூல், இலக்கண நூல்களில் உள்ள சூத்ரம்
சேய்மை:தொலைவு
சேய்:குழந்தை
சேமம்:க்ஷேமம்
சைத்ரம்:சித்திரைமாதம்
சோமன்:சந்திரன்
சோரன்:திருடன்
சோதி:ஒளி, ஸ்வாதி
சோபை:அழகு
சோபனம்:மங்களம்
சோபானம்:படிகட்டு
ஞாயிறு:சூரியன்
டமாரம்:டமருகம், பெரிய மேளம்
டிப்பணி:சிற்றுரை சிறுவியாக்யானம்
தரம்:(உயர்வு) நிலை
தமஸ்:இருட்டு
தயை:கருணை
தனம்:செல்வம்
தவம்:தபஸ்
தளிகை:சமையல்
ததீயர்:திருமால் அடியார்கள்
தம்பதி:கணவன், மனைவி
தர்மம்:தருமம்
தரித்திரம்:ஏழ்மை
தந்தம்:பல், யானைத் தந்தம்
தயிரமுது:மோர், தயிர்
தர்ப்பம்:வைதிகாரியங்களுக்குப் பயன் படும் புல்
தவறு:பிழை
தவிர்:நீக்கு
தன்னடிச்சோதி:பரமபதம்
தாகம்:நீர்வேட்கை
தானம்:பொருள் கொடுத்தல்
தாமரை:கமலம்
தாஸன்:அடியவன்
தார்:மாலை

தாரை:பெருக்கு
தாரணம்:தரித்தல்
தாருகன்:கண்ணனின் தேரோட்டி
தாளபத்ரம்:பனை ஓலை
தாள்:திருவடி, பூட்டு
திருமகள்:லக்ஷ்மி.
திரவம்:பருகும் உணவு
திருமண்காப்பு:திருமண்
திருமண் பெட்டி: திருமண் வைக்கும் பெட்டி
திருப்புட்கூடை:சுத்த வஸ்திரம் வைக்கும் ஓலைப் பெட்டி
திருவாராதனம்:பூஜை.
திருத்துழாய்:துளசி
திருக்காவேரி:வட்டிலில் தீர்த்தம் சேர்க்கும் பாத்திரம்
திருக்காப்பு நீக்குதல்:பெருமாள் பெட்டிக்கதவு திறத்தல்.
திருமணி ஸேவித்தல்:திருவாராதனமணி அடித்தல்
திருக்காப்பு சாத்துதல்: கோயிலாழ்வார் கதவு மூடுதல்
திண்ணம்:நிச்சயம்.
திவசம்:நாள்
திருவத்யயனம்:சிராத்தம்.
திருவீதி:பெருமாள் எழுந்தருளும் வீதி
திருக்கண்ணமுது:பாயசம்
திருத்தேர்மகோத்ஸவம்:தேர்த்திருவிழா
திருச்சின்னம்:பெருமாள் எழுந்தருளும் அடையாளத்தைக் காட்டும் பெரிய ஊது குழல்கள்
திவ்யப்பிரபந்தம்:நாலாயிரம் பாசுரங்கள், அருளிச்செயல்
திருமாங்கல்யம்:தாலி
திருமதிள்:மதிள் சுவர்
திருமடைப்பள்ளி:கோயில் பிரஸாதம் செய்யுமிடம்
திருப்பரிவட்டம்:பெரியோர் உடுக்கும் உடை
திருவாய்மலர்ந்து அருளினன்: (வாய் திறந்து) சொன்னன்
திருமாளிகை:ஸ்ரீவைஷ்ணப் பெரியோர் (மகான்கள்) வசிக்கும் வீடு.
திருவடிசோதித்தல்: கால் அலம்புதல்.
திருக்கை சோதித்தல்: கை அலம்புதல்.
திருவடி தொழுதான்:வணங்கினன்.
திருக்கார்த்திகை:கார்த்திகைப்பண்டிகை
திருவோணம்:ச்ரவண நக்ஷத்திரம்.
திருவடி:ஹனுமான்
திருவனந்தாழ்வான்:ஆதிசேஷன்
திருவாழியாழ்வான்:ஸுதர்சனம்
திருமலை:திருப்பதி மலை.
திருச்செவி சாத்தினர்: சொல்லுவதைக் கேட்டார்.

திருவுள்ளம்:எண்ணம், அபிப்பிராயம்
திருவடிஸம்பந்தம் பெற்றவர்:சிஷ்யர்.
திருவுளச்சீதளமோ?:கோபமோ!
திருமேனி:பெரியோரின் சரீரம்.
திருவிளக்கு:விளக்கு
திருநாடு:பரமபதம்
திருப்பள்ளிக்கட்டில்:படுக்கும் கட்டில்
திருப்பள்ளி எழுச்சி:துயிலுணர்தல்
திருப்பணி:கோயில் வேலை
திருமஞ்சனம்:அபிஷேகம்
திருத்தினர்:நல்லவராக்கினர்.
திருமிடற்றோசை:குரல் ஒலி
திருவரங்கம்:ஸ்ரீரங்கம்
திருவொற்றுஆடை:அபிஷேகம் ஆனதும் பெருமாள் திருமேனியைத் துடைக்கும் ஆடை
திவ்யாக்ஞை:பெரியோர் கட்டளை
திவ்யாயுதங்கள்:பஞ்சாயுதங்கள்
திவ்ய தேசம்: ஆழ்வார்பாடல்பெற்ற ஸன்னிதி (அ) ஊர்
திருமாமணிமண்டபம்:பெருமாள் எழுந்தருளும் பெரிய மண்டபம்.
திண்டோள்:வலிமை பெற்ற தோள்
தீபாவளி:தீபாவளிப் பண்டிகை, விளக்கின் வரிசை
தீர்க்கம்:நீளம்
தீர்க்கதரிசி:நீண்ட நாட்களுக்குப் பிறகு நடக்கப்போவதை முன்கூட்டியே அறிகிறவர்
தீர்த்தவாரி:அவப்ருதம், பிரம்மோத்ஸவத்தின் ஒன்பதாம் நாள் திருவிழா
தீங்கனி:இனியபழம்
தீஞ்சொல்:இன்சொல்
தீமான்:புத்திசாலி
தீயன்:கெட்டவன்
தீனன்:ஏழை
துவரை:ஒருதானியம், துவாரகை
துயர்:துன்பம்
துலா:தராசு
தூய்மை:சுத்தம்
தூபம்,தூமம்:புகை
தூதன்:தூதுசென்றவன்
தூமகேது:வால்நக்ஷத்திரம்
தேவரீர்: தாங்கள்
தேவப்பெருமாள்:வரதராஜர்
தேசாந்தரி:அயலூரார்
தேசு:தேஜஸ்
தையல்:பெண்
தைலம்:எண்ணெய்
தைவம்:கடவுள்
தை:தைமாதம்
தைப்பூசம்:குருபுஷ்யம்

தோளுக்கு இனியான்: பெருமாள் எழுந்தருளும் பிரபையோடு கூடிய தொட்டி
தோலாவழக்கன்: திருமங்கை மன்னனின் சீடருள் ஒருவன்.
தோன்றல்: ஆண்மகன்
த்வாதசி: பன்னிரண்டாம் திதி நாள்.
த்வாதசாராதனம்: பன்னிரு ஆராதனம்
த்வாதசாக்ஷரம்: பன்னிரண்டு எழுத்துகளைக் கொண்ட மந்திரம் (ஓம்நமோ பகவதே வாஸுதேவாய)
த்வாதசோர்த்வ புண்ட்ரம்: பன்னிரு திருமண்
த்வயம்: மந்த்ரரத்னம்.
த்வஜம்: கொடி
த்விஜர்: பிராம்மணர்
த்வரை: வேகம்
த்வம்: நீர்
த்வம்ஸம்: அழிப்பு
நம்பி: சிறந்த ஆண்மகன்
நப்பின்னை: கும்பரின் மகள், கண்ணன் மனைவி
நம்பெருமாள்: அரங்கன்
நந்தாவிளக்கு: திருநாங்கூர் திவ்யதேசங்களுள் ஒன்று, தூங்கா விளக்கு
நரகசதுர்த்தசீ: தீபாவளி
நந்தன்: நந்தகோபர்
நழுகரியமுது: சாம்பார்
நவக்ரஹம்: ஒன்பது கிரஹங்கள்
நம்பிமூத்தபிரான்: பலராமன்
நாமம்: பெயர்
நாராயணன்: பகவான்
நாநாதேசம்: பலதேசம்
நாவாய்: ஓடம்
நாரீ: பெண்
நாரிகேளம்: தேங்காய், தென்னை
நாமகரணம்: பெயரிடுதல்
நாமமாயிரம்: ஸஹஸ்ர நாமம்
நாளம்: தண்டு
நாணம்: வெட்கம்
நிறம்: வண்ணம், கலர்
நிலம்: பூமி
நிலத்தேவர்: அந்தணர்
நிமந்த்ரணம்: பிராம்மணார்த்தம்
நிழல், நீழல்: சாயை
நிலா: நிலவு, சந்திரிகை
நிரந்தரம்: எப்போதும், நிலை
நிக்ரஹம்: திரஸ்காரம்
நிச்சயம்: உறுதி
நிசா: இருட்டு
நிந்தை: தூஷணம்
நிர்மாணம்: சிருஷ்டி, புதிதாகப்படைத்தல்
நின்றவூர்: திருநின்றவூர்
நிவாரணம்: தடுப்பு
நியதி: வரைமுறை
நீராட்டம்: அபிஷேகம்
நீறு: தணல் மேல் படிந்த சாம்பல்
நீலமேகன்: பகவான்
நீலோத்பலம்: கருநெய்தல்
நீக்கம்: நீக்குதல்
நுமது: உமது
நுண்ணிய: மிகவும் சிறிய
நெய்யமுது: நெய்
நெஞ்சம்: நெஞ்சு
நேயம்: நேசம், அன்பு
நொடி: க்ஷணம், செகென்ட்
நோன்பு: விரதம்
பகவத்விஷயம்: திருவாய்மொழி வியாக்யானம்
படிக்கம்: திருவாராதன தீர்த்தம்சேர்க்கும் கிண்ணம்.
பரிமள திரவ்யம்: வாசனைப் பொருள்
பத்துக்கடை: கோயிலில் உள்ள பலகாரக்கடை
பணியாரம்: பக்ஷணம்
பவித்ரம்: சுத்தம்
பஞ்சேந்திரியம்: ஐம்புலன்
பரம் பொருள்: மேலான பொருள்
பரசமயம்: பிறமதம்
பரமபுருஷன்: பகவான்
பரிஷேசனம்: உணவு உண்ணத் தொடங்கும்போது கையில் ஒருமுறை தீர்த்தம் எடுத்து மந்திரத்தோடு இலையைச் சுற்றி வட்டம் போடுதல்
பலம்: பழம்
பயன்: பிரயோஜனம்
பதுமை: பொம்மை
பத்மம்: தாமரை
பத்மநாபன்: பகவான்
படம், படாம்: துணி
பட்டம்: பல்கலைக் கழகம் அளிக்கும் பட்டம். காற்றாடி
பட்டர்: அர்ச்சகர்
பண்டு: முன்பு
பல்லாண்டு: பலவருடங்கள்
பரான்னம்: அயலார் வீட்டில் உண்ணுதல்
பற்று: ஆசை
ப்ரக்ஷாளனம்: அலம்புதல்
பாடசாலை: பள்ளிக்கூடம்.
பாசம்: அன்பு
பாவம்: தீவினை
பாஞ்சஜந்யம்: பகவானின் இடக்கையில் இருக்கும் சங்கு

பாணிக்ரஹணம்:கைப்பிடித்தல்
பாதுகை:திருவடிஜோடு
பாத்திரவேதி:திருவாராதன பாத்திரங்கள் வைக்குமிடம்
பாநீயம்:பருகும்பொருள்
பாயல்:படுக்கை
பாரம்:சுமை
பாரணை:துவாதசி திதியில் உணவு உண்ணல்
பாகம்:பகுத்தல்
பாராயணம்:உயர்ந்த நூல்களை தினமும் வாசித்தல்
பார்:பூமி
பார்மகள்:பூதேவி
பாவனை:எண்ணம்
பாதுகாவல்:காவல்
பாதாதிகேசம்:திருவடி முதல் திருமுடிவரை
பாணர்:பண் இசைத்துப் பாடுவோர்
பாண்பெருமாள்:திருப்பாணாழ்வார்
பாரதம்:மஹாபாரதம், பாரதநாடு
பாசுரம்:திவ்வியப்பிரபந்த பாடல்
பாமாலை:பாடல், மாலை
பாஷை:மொழி
பிரமன்:பிரஹ்மா
பிரம்மோத்ஸவம்:பெரிய திருவிழா பிரம்மா நடத்தி வைத்த உத்ஸவம்
பிரம்மசாரி:வேதாத்யயனம் செய்பவன், திருமணமாகாதவன்
பிராட்டி:தாயார்
பிரதிக்ரஹம்:தானம் வாங்குதல்.
பிரதிநிதி:ஒருவருக்குப் பதில் வந்திருப்வர்.
பிரவாஹம்:வெள்ளம்
பிரச்னம்:வினா
பிருஹஸ்பதி:தேவகுரு,உபாத்யாயம் செய்து வைப்பவர்
பிதா:திருத் தகப்பனார்
பிதாமஹர்:தந்தையின் தந்தை
பிதாமஹி:தந்தையின் தாய்
பிலஹரி:ஒரு ராகம்
பிங்காக்ஷர்:ஹநுமான்
புறப்பாடு:புறப்படுதல்
புனர்வஸு:புனர்பூசம்
புராணம்:பழைய நூல்
புஷ்கரிணி:பெருமாளுக்குரிய குளம்
புண்டரீகம்:தாமரை
புண்ணியம்:நல்வினை
புராதனம்:மிகப்பழையது
புகல்:அடைக்கலம்.
புதுமலர்:அப்போதலர்ந்த மலர்
புத்தாண்டு:புதுவருடம்
புதுப்புனல்:புதுநீர்
பூ:மலர், பூமி
பூமகள்:மஹாலக்ஷ்மி
பூசுரர்:பிராஹ்மணர்
பூகம்:பாக்கு
பூதபுரி:ஸ்ரீ பெரும்பூதூர்
பூபாலம்:ஒருராகம்
பூணூல்:யக்ஞோபவீதம்
பெருமாள்:திருமால்
பெரியஜீயர்:ஸ்ரீ மணவாள மாமுனிகள்
பேரருளாளன்:வரதராஜப் பெருமாள்
பொன்னி:காவேரி
பொழில்:சோலை
பொலிந்தது:விளங்கியது
பொருள்:செல்வம்
பொரி:லாஜம்
பொறி:இந்த்ரியம்
பொன்னடி:திருவடி
பௌவம்:கடல்
பௌர்ணமி சுக்லபக்ஷத்தில்கடைசிநாள்
பௌராணிகர்:புராணம் சொல்பவர்
பௌருஷம்:ஆண்மை
ப்ரஸாதம்:அநுக்ரஹம்
ப்ரபத்தி:சரணாகதி
ப்ராஸாதம்:மாடி
ப்ரோக்ஷணம்: மந்திரத்தோடு நீர் தெளித்தல்
ப்ராகாரம்:ஸந்நிதியில் ப்ரதக்ஷிணம் செய்யும் வழி
ப்ரீதி:அன்பு
ப்ரீதிபூர்வம்:அன்போடு
மகுடம்:கிரீடம்
மகள்:புத்ரீ
மகிஷி:தேவி
மஹர்ஷி:மாமுனிவர்
மதி:புத்தி
மந்தி:பெண்குரங்கு
மதம்:சமயம்
மனம்:உள்ளம்
மறம்:பாவம்; வலிமை
மனோஹரம்:மனம் கவர்தல்
மங்களம்:சுபம்
மஹாராஜர்:சுக்ரீவன்
மா:லக்ஷ்மி
மாதவன்:பகவான்
மாயன்:மாயையை உடையவன்
மாமாயன்:மஹாமாயன்
மாநிலம்:பூமி
மாதம்:மாஸம்
மாறன்:நம்மாழ்வார்
மாவீரன்:பெருவீரன்
மாமல்லபுரம்:திருக்கடல் மல்லை
மாது:பெண்
மாத்யாந்நிகம்:உச்சிக்காலத்தில் செய்ய வேண்டிய காலக்கடன்

மாதுலா:அம்மான்
மாதாமஹர்:தாயின் தந்தை
மாதாமஹி:தாயின் தாய்
முகில்:மேகம்
முக்காலம்:பூத,பவிஷ்யத்,வர்த்த மான காலங்கள்
முகில் வண்ணன்:நீலமேகன்
முந்நீர்:கடல்
முழக்கம்:பேரொலி
முழவம்:மிருதங்கம்
முதல்வர்:பகவான்
முன்:முன்பு
முன்னுரை:முதல் பேச்சு
முளரி:தாமரை
மூவுலகு:பூ, புவ: ஸுவ: என்னும் மூன்று லோகங்கள்
மூதாதை:பெரியோர்
மென்மை:மார்தவம்
மெல்லியலார்:பெண்கள்
மெய்யடியார்:ஸ்ரீவைஷ்ணவர்கள்
மேதினி:பூமி
மேளம்:தோல் ஒலிக்கருவி
மேகம்:முகில்
மேழி:ஏர்
மை:அஞ்சனம்
மைவண்ணன்:கருமேனி
மையறு:குற்றம் நீங்கிய
மைந்தன்:மகன்
யதி:ஸந்யாஸி
யதிராஜன்:ஸ்ரீஉடையவர்
யதீர்ந்த்ரர்:எதிராஜர்
யதீந்த்ரப்ரவணர்:மணவாள மாமுனிகள்
யாசகம்:யாசித்தல்
யாகம்:வேள்வி
யாமுநார்யர்:ஸ்ரீஆளவந்தார்
யாநம்:ப்ரயாணம்
யுவா:யௌவனமுடையவன்
யுகளம்:இரட்டை
யுகம்:நான்கு யுகங்கள்
யோனிஜர்:கர்ப்பவாஸம் செய்து பிறந்தவர்
ராகம்:ஆசை, ராகங்கள்
ராஜா:அரசன்
ராமாயணம்:ராமசரித்திரம்
ராமதூதன்:ராமதாஸன், ஹநுமான்
ராதை:கண்ணனின் மனைவி
ராஸம்:ராஸக்ரீடை
ராக்ஷஸன்:அரக்கன்
ராசி:பிறந்தராசி
ராணி:அரசி
ரிக்வேதம்:நான்குவேதங்களுள் முதலது
ரிஷபம்:காளை
ருக்மிணி:கண்ணனின் மனைவி
ருசி:சுவை
ரூபம்:உருவம்
ரேவதி:நக்ஷத்திரங்களில் கடைசி நக்ஷத்திரம்.
ரைவதம்:ரைவதமலை
ரோதனம்:அழுகை
ரௌரவம்:ஒரு நரகம்
லவன்:ராமனின் கனிஷ்ட புத்ரன்.
லவணம்:உப்பு
லாவண்யம்:அழகு
லீலை:விளையாட்டு
லௌகிகம்:உலகப்போக்கை அநுஸரித்த வாழ்க்கை
வரன்:சிரேஷ்டன்
வளம்:வளப்பம்
வசம்:வயம்,அதீனம்
வகை:விதம்
வள்ளல்:தானம் செய்து கொண்டே இருப்பவன்
வல்லன்:வல்லவன்
வடிவழகு:திருமேனி அழகு
வர்ஷாகாலம்:மழை காலம்
வந்தனம்:வணக்கம்
வாஸஸ்தானம்:வசிக்குமிடம்
வாசாலகன்:பேச்சில் வல்லவன்
வாசாமகோசரம்:சொல்லுக்கு எட்டாதது
வாணீ:வார்த்தை
விரக்தர்:ஆசையற்றவர்
விளம்பம்:தாமதம்
விதம்:வகை
விபூதி:ஐச்வர்யம்
விநியோகம்:ஒரு பொருளைப் பலருக்கும் கொடுத்தல்
வித்தம்:செல்வம்
வித்தகன்:அறிவாளி
விகாரம்:வேறுபாடு
விருது:பட்டம்
விருந்தாவனம்:பிருந்தாவனம்
விட்டுசித்தர்:பெரியாழ்வார்
விமலன்:குற்றமற்றவன்
விமலா:மஹாலக்ஷ்மி
விபீஷணன்:விபீஷணாழ்வான், ராவணனின் தம்பி
விஸ்ம்ருதி:மறதி
வீதி:தெரு
வீற்றிருத்தல்:அமர்ந்திருத்தல்
வீடு:மோக்ஷம்
வெய்யோன்:சூரியன்
வேதம்:மறை
வேழம்:ஆண்யானை
வேடம்:வேஷம்
வேகம்:விரைவு
வேந்தன்:அரசன்
வேடன்:வேட்டையாடுபவன்

வேய்:மூங்கில்
வேய்ங்குழல்:புல்லாங்குழல்
வேதாந்தம்:உபநிஷத்
வேதாந்ததேசிகர்:ஸ்ரீ ஸ்வாமி தேசிகன்
வையம்:உலகம்
வைரம்:துவேஷம்
வைணவம்:ஸ்ரீவைஷ்ணவம்
ஸன்னிதி:விஷ்ணு கோயில்
ஸந்த்யா:இரவு பகல் சேர்க்கை
ஸமிதாதானம்:பாலாச ஸமித்தை ஹோமம் செய்தல்
ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர்: ஸ்ரீ ஸ்வாமி தேசிகன்
ஸாகரம்:கடல்
ஸாம:நல்வார்த்தை, ஸாம வேதம்.
ஸிம்மாஸனம்:பகவான் அமரும்ஆஸனம்
ஸீமா:எல்லை.
ஸுதர்சனம்:சக்கரத்தாழ்வார்
ஸுகம்:இன்பம்
ஸுகந்தம்:நறுமணம்
ஸௌகரம்:பன்றி
ஸௌக்தி:அருளிச் செயல்
ஸ்தலம்:பூமி, நிலம்
ஸ்தலசுத்தி:பூமியை சுத்தம் செய்தல்
ஸ்வப்னம்:கனவு
ஸ்வீகாரம்.பெற்றுக்கொள்ளுதல்
ஸ்வயம்:தானே
ஸ்வயம்பூ:பகவான்
ஹரி:திருமால்
ஹாரம்:மாலை
ஹோமம்:அக்னியில் ஆஹுதி செய்தல்
க்ஷீரம்:பால்
க்ஷேமம்:குறையாது இருத்தல்
ஸ்ரிய:பதி:திருமால்
ஸ்ரீகோசம்:புத்தகம்
ஸ்ரீ பாஷ்யம்:பிரம்ம ஸூத்ர வியாக்யானம்
ஸ்ரீ ரங்கம்:அரங்கம்
ஸ்ரீநிவாஸன்: அலர்மேல் மங்கை மணாளன்
ஸ்ரீமான்:செல்வந்தன்
சுபம்:மங்களம்

## உறவுமுறை

தமையன்:அண்ணன்
தமக்கை:அக்காள்
புத்ரன்:மகன்
புத்ரி:மகள்
அத்தான்:அத்தை மகன்
அத்தங்காள்:அத்தை மகள்
அம்மாஞ்சி:மாமாவின் பிள்ளை
அம்மங்காள்:மாமாவின் பெண்
அம்மான்:மாதுலர்

# ஸ்ரீ வைஷ்ணவ கடிதங்கள்

## வடகலையாருக்கு

### மாதிரி 1: பந்துக்களுக்கு

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

க்ஷேமம்

கோயம்புத்தூர்
24–8–1977

அண்ணா ஸந்நிதியில் வீரராகவதாஸன் அனந்தமான தண்டன் ஸமர்ப்பித்த விஜ்ஞாபனம் உபயக்ஷேமம்.

நான் இன்று காலை 7–மணிக்கு சௌக்கியமாக வந்து சேர்ந்தேன். அத்திம்பேர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்திருந்து என்னை அழைத்துப் போனார். என்னுடைய உத்யோக விஷயமாக நாளைக்கு அதிகாரியைப் பார்க்க அழைத்துப் போவதாகச் சொல்லியிருக்கிறார். அதுபற்றி விவரங்களை பின்னால் தேவரீருக்கு எழுதுகிறேன். மற்றபடி இங்கு அத்தை, அத்தான், அத்தங்காள் எல்லோரும் க்ஷேமம். அவ்விடத்தில் பாட்டிக்கும் அம்மாவுக்கும் எனது ப்ரணாமங்கள். அவ்விடத்திய க்ஷேமங்களுக்கு ,அடிக்கடி கடிதம் எழுதவேணும்.

வாசிகதோஷ: க்ஷந்தவ்ய:

இப்படிக்கு
வீரராகவதாஸன்

### மாதிரி 2: பந்துக்களல்லாதவர்களுக்கு

ஸ்ரீ:

க்ஷேமம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருக்குடந்தை
31–8–1977

ஸ்ரீமதித்யாதியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் ஆராவமுதன் அனந்தமான தண்டம் ஸமர்ப்பித்த விஜ்ஞாபனம். உபயகுசலோபரி. தேவரீர் ஸ்ரீமுகம் ஸேவித்துக் கொண்டேன். அடியேனுடைய கஷ்டம் அறிந்து தேவரீர் க்ருபை செய்தது பற்றி ரொம்பவும் க்ருதஜ்ஞதை பாராட்டுகிறேன். ஸ்வாமியின் அனுக்ரஹத்தாலும் ஆசார்யன் அனுக்ரஹத்தாலும் இங்கு யாவரும் க்ஷேமம். அவ்விடத்திய க்ஷேமங்களுக்கு அடிக்கடி ஸ்ரீமுகம் க்ருபை செய்தருள ப்ரார்த்திக்கிறேன். வாசிகதோஷ: க்ஷந்தவ்ய:

தாஸன்
ஆராவமுதன்

### மாதிரி 3: ஒருவருக்கொருவர்—ஆப்தர்கள் எழுதிக்கொள்ளும் கடிதம்

ஸ்ரீ

க்ஷேமம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருவல்லிக்கேணி
31–8–1977

ஸ்ரீமதித்யாதியாய் எழுந்தருளி இருக்கும்.. . .ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன். . . . . தண்டம் ஸமர்ப்பித்துச் செய்யும் விஜ்ஞாபனம். உபயகுசலம்,

இப்பவும் இங்கு எல்லோரும் க்ஷேமம். அங்கு ஸ்வாமி திருமாளிகை நித்ய ததீயாராதனைபய வேதாந்த க்ரந்த கால க்ஷேபாதிசயங்களுக்கு ஸ்ரீமுகம் ஸாதிக்கப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்வாமி பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளும்போது அடியேனும் விடை கொள்ளுகிறேன். பூவோடு சேர்ந்த நாறும் மணக்குமன்றோ! ஸ்வாமி திய மனத்தை எதிர்பார்க்கிறேன். ஸ்ரீ தேவப் பெருமானின் திவ்யாநுக்ரஹம் அடியேனிடம் இருக்கிறது என்பதற்கு ஸ்வாமியின் நியமனமே ஸூசகம். நியமனம் கிடைத்தால் பாக்யம் பெற்றவனாவேன்.

வாசிகதோஷ: க்ஷந்தவ்ய: தண்டம் ஸமர்ப்பித்த விஜ்ஞாபநம்

ராமாநுஜ தாஸன்

குறிப்பு: தென்னாசார்ய பக்தர்கள் "ஸ்ரீமந்நித்யாதியாய் எழுந்தருளி இருக்கும் ஸ்வாமி ஸந்நிதியில்........ தண்டம்ஸமர்பித்த விண்ணப்பம் (அல்லது தாளும் தடக்கையும் கூப்பிச்செய்யும் விண்ணப்பம்) என்று ஆரம்பிக்கலாம்....த்வைதி, அத்வைதி பெரியவர்களுக்கு "அனந்தகோடி நமஸ்காரம்—உபக்ஷேமம்" என்று ஆரம்பித்து "விதேயன்" என்று முடித்து கையெழுத்திடலாம்

## பெரியவர்களை ஸேவித்தல்

பெரியவர்களைச் சிறியவர்கள் ஸாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து ஸேவிப்பதென்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் கடைப் பிடிக்க வேண்டிய நல்ல பழக்கங்களில் ஒன்றாகும்.

"வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா
தண்டவத் ப்ரணமேத் புவி"

ஒரு வைஷ்ணவர் மற்றொரு வைஷ்ணவரைக் கண்டமாத்திரத்தில் தரை மீதுள்ள ஒரு தடியைப்போல தரைமீது நீண்டு விழுந்துஸாஷ்டாங்கமாகஸேவிக்க வேண்டுமென்பது சாஸ்திரவசனம்.

குறிப்பு:: இப்படி தடிபோல் நீண்டு ஸேவிப்பதை 'தண்டவத்ப்ரணாமம் ஸமர்ப்பித்தல்' என்பர். இது நாளடைவில் 'தண்டம் ஸமர்ப்பித்தல்' என்று சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

ஆகவே, கோயில்களிலும், உத்ஸவாதிகளிலும் பெருமாளை ஸேவிக்கும் போதும், பெரியோர்களைக் காணும் போதும் ஸாஷ்டாங்கமாகத் தரைமீது படுத்துக் கைகூப்பி பக்தியுடன் ஸேவிக்க வேண்டும். அந்த நிலையில் தன் உடம்போ, துணிகளோ அழுக்காகி விடுமென்று சிறிதளவும் யோசனை செய்யக்கூடாது. நம் உள்ளத்திலிருக்கும் அழுக்குகளை நீக்கிக் கொள்வதென்ற பெரிய லாபத்தை நோக்கும்போது, இந்த வெளி அழுக்கைப்பற்றி நினைக்கவே கூடாது.

பெரியவர்களை ஸேவிக்கும்போது ஒரே ஒரு முறை ஸேவிப்பது, பலமுறை ஸேவிப்பது என்ற ஸம்ப்ரதாயங்கள் உண்டு. பலமுறை ஸேவிப்பது என்ற வகையைச் சேர்ந்தவர்கள் நான்கு முறை ஸேவிக்கவேண்டும். குறைந்த பக்ஷமாக இரண்டு முறைகள் ஸேவிக்கலாம். ஸேவித்தபிறகு தன்னுடைய கோத்ரம், ப்ரவரம், பெயர் முதலியவைகளைச் சொல்லி அபிவாதநம் செய்யவேண்டும்.

ஸந்யாஸிகளை ஸேவிக்கும்போது (வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்கள் பல முறை ஸேவிப்பார்கள்) அந்த ஸந்யாஸிகள் 'போதும்' என்று சொல்லும் வரை ஸேவித்துக் கொண்டே இருக்கவேண்டும். (தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஒரு முறைதான் ஸேவிப்பது வழக்கம். ஸக்ருத் ப்ரணாமம்தான் அவர்கள் கொள்கை.) ஸந்யாஸிகளுக்கு அபிவாதநம் செய்யக்கூடாது.*

* ஸந்யாஸிகளுக்கு அபிவாதநம் செய்தால் அவர்கள் வாக்கால் ஆசீர்வதிக்க வேண்டும். யதிகள் வாக்கால் ஆசீர்வாதம் செய்யக்கூடாதென்பது சாஸ்திரம். இதுதான் யதிகளுக்கு அபிவாதநம் செய்யக்கூடாது என்பதின் உட்கருத்து.

பிரதிதினமும் பெரியவாகளை ஸேவிப்பதால் ஆயுள், பலம். கீர்த்தி, தேஜஸ், இவைகள் மேன்மேலும் விருத்தியடையும். மக்கட்பேறு செல்வம் விருத்தியடையும்.

வேதபாராயணம், திவ்ய ப்ரபந்த பாராயணம் செய்யும் கோஷ்டியையோ பெரியவர்களுடைய கோஷ்டியையோ ஸேவித்தால் அபிவாதநம் செய்யக் கூடாது. ஸ்த்ரீகளை ஸேவித்தாலும் அபிவாதனம் கிடையாது.

பெருமாளை ஸேவிக்கும்போது வடகலையார் தமக்கு முடிந்தவரையில் ஸேவிக்கலாம். (பெருமாளை ஸேவிக்கும் போதும் ஒரேமுறை ஸேவிப்பதுதான் தென்கலையார்களின் ஆசாரம்.) பெருமாளுக்கு அபிவாதநம் செய்யக்கூடாது.

கோயிலில் பெரியவர்களை ஸேவிக்கக் கூடாது; கைகளைக் கூப்புதல்மட்டும் போதும்.

ச்ராத்தத்துக்கு நிமந்த்ரணத்திற்காக ப்ரார்த்திக்கும் போது, வரிக்கப்படும் ஸ்வாமிகளை ஸேவித்து அபிவாதநம் செய்து பிறகு ப்ரார்த்திக்க வேண்டும்.

வெளியூர் பிரயாணம் கிளம்பும் போதும், பிரயாணத்திலிருந்து ஊர் திரும்பியதும் பெரியோர்களை ஸேவித்து அபிவாதநம் செய்ய வேண்டும்.

பெரியோர்கள் நம் குடிசைக்குப் பொன்னடி சாத்தினால் ஸகுடும்பமாக ஸேவித்தல் வேண்டும்.

## ஸ்ரீபாததீர்த்த மஹிமை

ஸ்ரீபாததீர்த்தத்தை மண்பாத்திரம், அல்லது மரப்பாத்திரத்தில் தான் சேர்த்துக் கொள்ளவேண்டும். "பத்ர புடம்" என்கிற இலையாலான தொன்னை களிலும் சேர்க்கலாம்.

முதலில் பெருமாள் தீர்த்தம் சாப்பிட்டபின்பே ஸ்ரீபாததீர்த்தம் சாப்பிட வேண்டும். துளஸீதளத்தையும் ஸ்ரீபாத தீர்த்தத்திற்குப் பிறகு உபயோகிக்க வேண்டும்.

சில பதார்த்தங்களை உட்கொண்டால் ஆசமனம் செய்யவேணுமென்று விதி யுள்ளது. ஆனால் ஸ்ரீபாததீர்த்தம் உட்கொண்டபின் ஆசமனம் செய்யக்கூடாது.

"பீதே பாதோதகம் விஷ்ணோ: வைஷ்ணவாநாம் ததைவ I
தத்ரநாசமநம் கார்யம் யதா ஸோமே த்விஜோத்தம II

ஸ்ரீபாததீர்த்தத்தை முதலில் கொஞ் கொண்டு, கண்களிலும் ஒத்திக்கொண்டு சம் கிரஹித்து, சிரஸில் ப்ரோக்ஷித்துக் —பிறகு,

"ஸர்வேஷாமேவ பாபாநாம் ப்ராயச்சித்தம் மநீஷிபி: I
நிர்ணீதம் பகவத்பக்த பாதோதக நிஷேவணம் II

என்று சொல்லி மூன்று முறைகள் சாப்பிடவேண்டும்.

(கருத்து) எல்லாவிதமான பாபங்களுக்கும் பாகவதர்களின் ஸ்ரீபாததீர்த்தம் உட்கொள்வதே ப்ராயச்சித்தமாகும் என்று பெரியோர்களால் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது, மற்றும் ஸ்ரீபாததீர்த்த மகிமை:

"நாரதஸ்யாதிதே: பாதௌ ஸர்வாஸாம் மந்திரேஷ்வயம் I
க்ருஷ்ண: ப்ரக்ஷாள்ய பாணிப்யாம் பபௌ பாதோதகம் முநே: II"

அதிதியாக வந்த நாரதமஹரிஷியின் திருவடியைச் சோதித்து (கழுவி) அந்த தீர்த்தத்தை ஸ்ரீகிருஷ்ண பகவான் உட்கொண்டார்.

---

ஸ்ரீ:

தீர்த்தனுக் கற்றபின் மற்றோர்
சரணில்லை யென்றெண்ணி, தீர்த்தனுக்கே
தீர்த்த மனத்தன னாகிச்
செழுங்குரு கூர்ச்சட கோபன்சொன்ன,
தீர்த்தங்க ளாயிரத் துள்ளிவை
பத்தும்வல் லார்களை, தேவர்வைகல்
தீர்த்தங்க ளேயென்று பூசித்து
நல்கி யுரைப்பர்தம் தேவியர்க்கே.

—திருவாய்மொழி 7—10—11.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்
"ஸர்வே ஜனாஸ் ஸுகினோ பவந்து"

# திருமண் இட்டுக்கொள்வதன் அவசியம்

எண்பத்து நான்கு லக்ஷம் வகை ஜீவராசிகளில் மனுஷ்ய சரீரம் கிடைப்பது அரிது. அத்தகைய கிடைத்தற்கரிய மனுஷ்ய சரீரம் பகவான் வாழும் திருக்கோயிலாகும். அதிலும் 'ஹ்ருதயம்' என்னும் மார்பகமே அவனுடைய கர்ப்பக்கிருஹம்.

''ஹ்ருதயம் தத் விஜாநீயாத் விச்வஸ்யாயதநம் மஹத்'' — ''ஹ்ருதயத்தை எங்கும் பரந்துள்ள எம்பெருமானின் இருப்பிடமாக அறிந்து கொள்,'' என்கிறது புருஷ ஸூக்தம்.

மற்றும், தைத்தரீய ஆரண்யகம் முதல் ப்ரச்னத்தில்—

''அஷ்டா சக்ரா நவத்வாரா
தேவாநாம் பூ: அயோத்யா ।
தஸ்யாம் ஹிரண்மய: கோச:
ஸ்வர்கோ லோகோ ஜ்யோதிஷாவ்ருத:
யோவை தாம் ப்ரஹ்மணோ வேத
அம்ருதே நாவ்ருதாம் புரீம் ।
தஸ்மை ப்ரஹ்ம ச ப்ரஹ்மா ச
ஆயு: கீர்த்திம் ப்ரஜாம் தது:'' ॥

என்று சொல்லுகிறது.

''எண் வகைத் தோல்களும், ஒன்பது த்வாரங்களும் கொண்ட இந்தச் சரீரத்தில் பரமாத்மா வசிப்பதற்குத் தங்க மயமான பட்டணமாக அமைந்தது மார்பகம். அதை பகவானின் திருக்கோயிலாக எண்ணி, பகவானைத் தியானிப்பவர்களுக்கு பகவானும், பிரஹ்மாவும் ஆயுள், கீர்த்தி, சந்ததி, சம்பத்து முதலியவைகளை அளிப்பார்கள்.''

ஆகவே, எம்பெருமான் இந்தச் சரீரமாகிற திருக்கோயிலிலே வாஸம் பண்ணுகிறார் என்பதைக் குறிப்பிடவே எம்பெருமானின் திருவடி வடிவில் அமைந்த திருமண்காப்பை ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னிரண்டு இடங்களில் தரித்துக்கொள்கிறார்கள். அவைகளுக்கு 'த்வாதச நாமங்கள்' அல்லது 'பன்னிரு நாமங்கள்' என்பது பெயர்.

உபநயனம் ஆகித் தம்தம் ஆசாரியரிடத்தில் ஸமாச்ரயணம் செய்து கொண்ட ஒவ்வொரு 'ஸ்ரீவைஷ்ணவனும், தினந்தோறும் பன்னிரு நாமங்களைத் தரித்துக் கொண்டு, முறைப்படி அந்தந்த இடத்தில் பகவானுடைய பன்னிரு நாமங்களையும், மஹாலக்ஷ்மியினுடைய பன்னிரு நாமங்களையும் உச்சரித்து ஆவாஹனம் செய்யவேண்டும்.

தன் உடல் பகவானின் திருக்கோயில் என்னும் உண்மையை யறிந்தவன் எவனோ, அவன் பன்னிரு நாமங்களை இட்டுக் கொள்ள வெட்கப்படவே மாட்டான் என்பது உறுதி.

'நெற்றி' என்பது உள்ளத் தூய்மையை வெளிக் காட்டும் பளிங்குக் கண்ணாடி. ஒருவன் பக்தனா, நாத்திகனா, புத்திசாலியா, மூடனா என்பது, முகத்தைப் பார்த்தாலே விளங்கிவிடும். ஆகவே, ஹ்ருதயத்தில் குடிகொண்டுள்ள பகவான் நெற்றியில் விளங்குகிறார். அதை நினைவூட்டுவதற்காகவே நெற்றியில் 'பளிச்' சென்று திருமண் இட்டுக் கொள்ளுதல் மிகமிக அவசியம். பன்னிரு நாமங்களில் 'கேசவன்' என்னும் சொல்லால் அழைக்கப்படும் முதல் திருமண் நெற்றித் திருமண்ணாகும். ஆகவே, பன்னிரு நாமங்களைத் தரிக்க அவகாசமோ சௌகரியமோ இல்லாத ஸ்ரீவைஷ்ணவர்கள் நெற்றித் திருமண் மட்டும் இட்டுக் கொள்வது மிகவும் அவசியம்.

திருமண் இல்லாத நெற்றி 'பாழ் நெற்றி' என்று அழைக்கப்படுகிறது. பாழ் நெற்றி மூதேவியின் இருப்பிடமாகும்.

**க்ருஷ்ண யஜுர் வேதம் 4—ஆவது காண்டம் 2—ஆவது ப்ரச்னத்தில் சொல்வதாவது:—**

"மனிதர்களின் கழுத்துக்குமேல் நிருருதி தேவி (மூதேவி) சுற்றிக் கொண்டிருக்கிறாள். அவளைச் சில மந்திரங்களைச் சொல்லி ஹோமம் செய்து விடுவிக்கிறேன். அவளிடமிருந்து விடுபட்டு மனிதன் நீண்டநாள் வாழ வேண்டும்."

அவ்வாறே தைத்திரீய ப்ராஹ்மணம் ஒரு விருத்தாந்தம் சொல்வதா 1—ஆவது அஷ்டகம் முதல் ப்ரச்னத்தில் வது:—

ஒரு சமயம் ப்ரஹ்மா அக்னிமீது கோபம் கொண்டு அவனைத் துரத்திக்கொண்டு ஓடினார். ஆனால், அவனைப் பிடிக்கமுடியவில்லை. அவர் களைப்புற்றிருப்பதைக் கண்ட அக்னி தேவன் தானே நின்று விட்டான். வெகு தூரம் ஓடியதால் ப்ரஹ்மாவுக்கு நெற்றியில் வியர்த்து விட்டிருந்தது. அவர் அதைத் துடைத்தார். வியர்வை வழிக்கும்போது நெற்றியில் இருந்த ரோமங்களையும் வழித்துப் போட்டார். அதனால்தான் அவரால் படைக்கப்பட்ட நமக்கும் நெற்றியில் ரோமங்கள் இல்லை. அவர் இவ்வாறு வழித்துப் போட்ட ரோமங்கள் மூதேவியாகும்."

ஆகவே, மூதேவியின் முன்னிடமான நெற்றியில் பகவானுடைய திருவடிச் சின்னமான திருமண் காப்பையும் மஹா லக்ஷ்மியின் சின்னமான ஸ்ரீசூர்ணத் தையும் தரித்தால் மூதேவி எட்டியும் பார்க்கமாட்டாள். அவ்வாறன்றி பாழும் நெற்றியாக விட்டிருந்தால் மறுபடியும் மூதேவி அங்கே வாழ விரும்புவாள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா! மேலும் ஜப தான ஹோமாதி கர்மாக் களும் ஸந்த்யா வந்தனம் முதலிய நித்ய கர்மாக்களும் ஊர்த்வ புண்ட்ரம் (திருமண்காப்பு) இல்லாமல் செய்யப்பட் டால், எல்லாம் பயனற்றவையாகும். அந்தச் சரீரம் சுடுகாட்டிற்கு நிகர் என்று ப்ருகுஸம்ஹிதையில் சொல்லி யிருப்பதாகக் கூறப்படுகிறது.

## திருமண், ஸ்ரீசூர்ண மகிமை

'திருமண்' என்பது வெறும் மண் அல்ல. திருக்கலந்த ஸத்வ குணம் நிறைந்த லக்ஷ்மீகரமான மண். இந்த அபிப்பிராயத்தைத் திருமண் இடும் மந்திரம் விளக்குகிறது பாருங்கள்:—

உத்த்ருதாஸி வராஹேண
க்ருஷ்ணேந ச தாபாஹுநா |
பூமிர் தேநுர் தரணீ லோகதாத்ரீ
ம்ருத்திகே ஹநமே பாபம்
யந்மயா துஷ்க்ருதம் க்ருதம் |
த்வயா ஹதேந பாபேந
ஜீவாமி சரதச்சதம் |
ம்ருத்திகே தேஹி மே புஷ்டிம்
த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ||

"ச்வேத வராஹ ரூபியான பக வானாலே எடுக்கப்பட்ட வெள்ளை மண், விஷ்ணு ஸாந்நித்யம் கொண்டது. இம்மண் விரும்புமவற்றை அளித்து உலகையே தரிக்கும் பூமிதேவி. ம்ருத்தி கையே! உன்னைத் தரிப்பதால் என் பாபங்களைப் போக்கி நீடூழி வாழச் செய்ய வேண்டும். நீ தான் எனக்குச் சரீர புஷ்டியையும் அளிக்கவேண்டும். உன்னிடம் எல்லாம் நிறைந்துள்ள தன்றோ!"

திருமண் பகவானையும் ஸ்ரீசூர்ணம் பிராட்டியையும் குறிக்கிறது. ஸ்ரீசூர்ணம் என்ற பெயரே (ஸ்ரீ—லக்ஷ்மீகரமான—சூர்ணம்—தூள்) அதன் மகிமையைக் குறிப்பிடுவதாகும்.

வடகலையார்கள் சிவப்பு ஸ்ரீசூர்ணத்தையும், மஞ்சள் ஸ்ரீசூர்ணத்தையும் அணிகிறார்கள். தென்கலையார்கள் சிவப்பு ஸ்ரீசூர்ணத்தையே அணிகிறார்கள்.

ஸ்ரீவைஷ்ணவர்களின் நெற்றிகளில் விளங்கவேண்டுவது திருமண் காப்பு. இந்த திருமண் காப்புக்கு உரிய பெருமையை நாம் அளித்தால் அது நம்மைக் காப்பாற்றும்.

ஆடைகளினால் உடம்பை மறைத்துக் கொள்கிறோம் ஆனால் யாரும் முகத்தை மட்டும் மறைத்துக் கொள்வதில்லை. நெற்றியில் இருக்கும் சின்னத்தைக் கொண்டே எந்த சமயத்தைச் சேர்ந்தவன் என்று அறிந்து கொள்ளமுடிகிறது. இந்தச் சின்னமே குலப்பெருமையைக் காட்டுகிறது.

ஆசாரியன் இரண்டு புஜங்களிலும் சங்குசக்கர அடையாளங்களைத் தோற்றுவிக்கிறார். இதை அழிக்கிறோமா? இல்லை. அழித்தாலும்கூட அழிவதில்லை. இது அழியாத அடையாளம்.

குழந்தையாக இருக்கும்போது தகப்பனார் முதன்முதலில் திருமண்காப்பு இடுகிறார்; எனவே, இவர் முதலாசாரியர். ஸமாச்ரயணம் செய்யும்போது ஆசாரியன் மந்திர பூர்வமாக திருமண்காப்பு இடுகிறார். எனவே, இதைத் தினம் தோறும் இட்டுக் கொள்ளவேண்டும். அழியாமல் பாது காக்க வேண்டும். இப்படிப்பட்டவனைக் கண்டு பகவான் மகிழ்கிறான்.

பகவான் க்ஷத்ரிய வம்சத்தில் ராமனாக அவதரித்தபோது ஊர்த்வ புண்ட்ரம் அணிந்திருந்தான்; கண்ணனாக அவதரித்த போதும் ஊர்தவ புண்ட்ரம் தரித்தான் என்று ஆழ்வார்கள் அருளிச் செய்கிறார்கள்.

காளிங்களின் தலையில் திருவடிகளை வைத்துக் கண்ணன் ரக்ஷித்தான். பகவானின் திருவடிகளின் அடையாளமே திருமண் காப்பு. பரதனின் தலையில் தம் திருவடிகளை வைத்து ராமன் அனுப்பினான். அர்ச்சாவதார ஸ்தலங்களில் தம் திருவடியான ஸ்ரீ சடகோபனை நம் தலையில் வைத்து எம்பெருமான் ரக்ஷிக்கிறான். எனவே, திருமண்காப்பு நிந்திப்பவனை பகவான் நிந்திக்கிறான். திருமண் காப்பை அழிப்பவனை அவன் அழிக்கிறான். திருமண் காப்பை கௌரவிக்கும் இடத்தில் பகவான் திருவுள்ளம் உவந்து வாழ்கிறான். அவனை மனமார வாழ்த்துகிறான்; அவனைக் காப்பதைத் தம் கடமையாக நினைக்கிறான்.

திருமண் இட்டுக் கொண்டதும் கீழ்க் கண்ட பாசுரங்கள் கூறுவது மிகவும் நல்லது. பகவானின் திருவருள் எளிதில் கிடைக்கும்.

சிந்துரப் பொடிகொண்டு சென்னி யப்பித்
 திருநாம மிட்டங்கோ ரிலையந் தன்னால்,
அந்தர மின்றித் தன்னெறி பங்கியை
 அழகிய நேத்திரத் தால ணிந்து,
இந்திரன் போல் வரு மாயப் பிள்ளை
 எதிர் நின்றங் கினவளை யிழவே லென்ன,
சந்தியில் நின்று கண்டீர் நங்கை
 தன்துகி லொடுசரி வளைகழல் கின்றதே.

—பெரியாழ்வார் திருமொழி 3—4—8

ஏதாங்க ளாயின வெல்லாம்
 இறங்க லிடுவித்து, என் னுள்ளே
பீதக வாடைப் பிரானார்
 பிரம குருவாகி வந்து,
போதில் கமலவன் னெஞ்சம்
 புகுந்துமென் சென்னித் திடரில்,
பாத விலச்சினை வைத்தார்
 பண்டன்று பழிடினங் காப்பே.

—பெரியாழ்வார் திருமொழி 5—2—8

சென்னியோங்கு தண்திருவேங்
கடமுடையாய், உலகு
தன்னைவாழ நின்றநம்பீ
தாமோதரா சதிரா,
என்னையுமென் னுடைமையையுமுன்
சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு
நின்னருளே புரிந்திருந்தேன்
இனியென் திருக்குறிப்பே?

—பெரியாழ்வார் திருமொழி 5—4—1

பருப்பதத்துக் கயல்பொறித்த
பாண்டியர் குலபதிபோல்.
திருப்பொலிந்த சேவடியென்
சென்னியின் மேல்பொறித்தாய்.
மருப்பொசித்தாய் மல்லடர்த்தாய்
என்றென்றுன் வாசகமே.
உருப்பொலிந்த நாவினேனை
உனக்குரித் தாக்கினையே.

—பெரியாழ்வார் திருமொழி 5—4—7

நெற்றியுள் நின்றென்னை யாளும்
நிரைமலர்ப் பாதங்கள் சூடி,
கற்றைத் துழாய்முடிக் கோலக்
கண்ண பிரானைத் தொழுவார்,
ஒற்றைப் பிறையணிந் தானும்
நான்முக னுமிந் திரனும்,
மற்றை யமரரு மெல்லாம்
வந்தென துச்சியு ளானே.

—நம்மாழ்வார் திருவாய்மொழி 1—9-10

ஏறிய பித்தினோ 'டெல்லா
வுலகும்கண் ணன்படைப் பென்னும்
நீறுசெவ் வேயிடக் காணில்
'நெடுமால் அடியார்' என்றோடும்,
நாறு துழாய்மலர் காணில்
'நாரணன் கண்ணியீ தென்னும்.
தேறியும் தேறாது மாயோன்
திறத்தன ளேயித் திருவே.

—நம்மாழ்வார் திருவாய்மொழி 4—4—7

இவளைப் பெறும்பரி சிவ்வணங் காடுதல் அன்றந்தோ,
குவளைத் தடங்கண்ணும் கோவைச்செவ் வாயும் பயந்தனள்,
கவளக் கடாக்களி றட்டபி ரான்திரு நாமத்தால்,
தவளப் பொடிக்கொண்டு நீரிட் டிடுமின் தணியுமே.

—நம்மாழ்வார் திருவாய்மொழி 4—6—5

மேலே கொடுத்துள்ள பாசுரங்கள் தவிர, திருமண் ஸ்ரீசூர்ணத்தின் பெருமையை பறைசாற்றும் பாசுரங்கள் நாலாயிரதிவ்ய ப்ரபந்தத்தில் அநேகம் உள. பக்தர்கள் அவைகளைப் பரிசோதித்து எடுத்து, பக்தியுடன் அநுஸந்தித்து திருமண்காப்பு அணிவதின் முக்யத்தை உணர்ந்து திருமண் இட ஆரம்பித்தால், இகத்திலும் பரத்திலும் அளிக்கவல்ல எல்லா நன்மைகளும் அவர்களை வந்தடைவது திண்ணம்.

## ஸ்ரீ :

# ஸமாச்ரயணம்

(பஞ்சஸம்ஸ்காரம்)

(Sri Ubhaya Ve. Prof. A. Srinivasa Raghavacharya Swami, Viswabharat University, Santhiniketan, West Bengal)

ஸமாச்ரயணம் என்பது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் அநுஷ்டிக்கப் பட்டு வருகிற ஒரு முக்யமான ஸம்ஸ்காரம். உபநயநம் ஆனவர்களுக்கு இது செய்யப் படுகிறது. ஆசார்யர் பகவதாயுதங்களான சங்கசக்ரங்களின் இலச்சினைகளை அக்னியில் காய்ச்சி, சக்ரத்தைதால் சிஷ்யனுடைய வலது புஜத்திலும், சங்கத்தால் இடது புஜத்திலும் மந்திரத்தைச் சொல்லி அடையாளமிடுகிறார். ஸ்வாமியின் சின்னத்தை ஸேவகன் தரிப்பதை உலகில் காண்கிறோம், அதே போல நம் ஸ்வாமியான பகவானுடைய சின்னங்களான சங்கசக்ரங்களை அடியார்களான நாமும் நம்சரீரத்தில் ஸ்திரமாகத் தரிக்க வேண்டியது அவசியம். அதனாலேயே பகவானை நாம் உறுதியாகப் பற்றியதற்கு இது ஓர் அடையாளம். அதனால் இதற்கு 'ஸமாச்ரயணம்' (பற்றுதல்) என்று பெயர். அவரவர்களுக்கேற்ற முறையில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் செய்யப்பட்டு வருகிறது.

'தாபம்' என்கிற இந்த ஸம்ஸ்காரம் ஆனவர்கள்தான் த்வாதச ஊர்த்வ புண்ட்ரம் (பன்னிரண்டு திருமண்) இட்டுக் கொள்ளத் தகுதி யுடையவர்களாகிறார்கள். அப்போதே அவர்களுக்கு தாஸ்ய நாமம்' என்று ஒரு புதுப்பெயரும் கொடுக்கப் படுகிறது. இது நாம ஸம்ஸ்காரம். பிறகு ஆசார்யர் அவர்களுக்கு திருவஷ்டாக்ஷரம், த்வயம், சரம ச்லோகம் ஆகிய மந்ரங்களையும், ஸ்ரீமத்ராமாயணம், பகவத்கீதை முதலான அத்யாத்மக்ரந்தங்களையும் உபதேசிக்கிறார். இது மந்த்ர ஸம்ஸ்காரம், அதன்பின் அவர்களுக்குப் பகவானை ஆராதிக்கும் முறை உபதேசிக்கப் படுகிறது. இது இஜ்யா ஸம்ஸ்காரம். இதன் பிறகே அவர்கள் திருமாளிகைகளிலுள்ள பகவந்மூர்த்திகளைத் தொட்டு ஆராதிக்க யோக்யதை யுடையவராகிறார்கள். இவ்வாறு ஐந்து க்ரியைகள் இருப்பதாலேயே இதற்குப் 'பஞ்சஸம்ஸ்காரம்" என்று மற்றொரு பெயர் வழங்குகிறது.

இந்தப் பஞ்ச ஸம்ஸ்காரத்தால் ஒருவனுடைய சரீரத்துக்கும் உள்ளேயிருக்கும் ஆத்மாவுக்கும் சுத்தி ஏற்படுகிறது. பரமாத்மா இவ்வடியார்கள் விஷயத்தில் அருள் புரிகிறான். அதனால் அவன் ஸம்ஸாரமாகிற கடலைத் தாண்டி முடிவில் மோக்ஷத்தையும் அடைகிறான் என்று சுருதி ஸ்பஷ்டமாக ஓதுகிறது.

இந்த ஸமாச்ரயணம் என்கிற பஞ்சஸம்ஸ்காரத்தை ஒருவன் செய்து கொள்ளாவிட்டால் நேராக பகவானைத் தொட்டு ஆராதிக்க முடியாதாகையாலும், அவன் பெருமையைக் காட்டும் முக்யமான மந்திரங்களை ஜபிக்க இயலாதாகையாலும், அதனால் இவனுக்கு உஜ்ஜீவனோபாயம் இல்லாமல் போதுமாகையாலும், உபநயநம் ஆனவுடனேயே எல்லோரும் இதைச் செய்து கொள்ள வேண்டும். அதன் பிறகு தேசமறிய எம்பெருமானுக்கு ஆளாய்த் திரிகின்றவர்களாகி, அவன் கடாக்ஷத்துக்கு இலக்காகிறார்கள். அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்யம் பெற்றதாகிறது.

"ரதசரண நிரூட வ்யஞ்ஜனாநாம் ஜநாநாம் துரித
மதனலீலா தோஷளீ தேஹளீசஃ !"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் பஞ்ச ஸம்ஸ்காரங்களின் ஆவச்யகத்தையும், இந்த ஸம்ஸ்காரத்தைச் செய்து கொண்டவர்களுக்கு பகவான் அருள் புரியும் வகையையும் ஸாதித்துள்ளார்.

ஸ்ரீ:

# ஊர்த்வபுண்ட்ரதாரணம்

(Sri Ubhaya Ve. Prof. A. Srinivasa Raghavacharya Swami, Viswabharat University, Santhiniketan, West Bengal)

ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோரும் பிரதி தினமும் திருமண் இட்டுக் கொள்ள வேண்டும் என்று பகவத் சாஸ்த்ரங்களும் புராணங்களும் விதிக்கின்றன. 'திருமண் இட்டுக் கொள்வதை ஊர்த்வபுண்ட்ர தாரணம்' என்பார்கள். 'ஊர்த்வபுண்ட்ரம் என்னும் சொல்லுக்கு 'மேல் நோக்கிய தான சின்னம்' என்று அர்த்தம். ஊர்த்வபுண்ட்ரத்தை யார் தரிக்கிறார்களோ அவர்களை அதுமேலே மேலே உயர்ந்த லோகங்களுக்கு இட்டுச் செல்லுகிறது; அவர்களுடைய எண்ணமும் சொல்லும் செயலும் உயர்ந்து செல்லும் லக்ஷ்யத்தைக் கொண்டவையாக இருக்கும் என்பதை இது ஸூசிப்பிக்கிறது. ஸ்ரீ கூரத்தாழ்வார் வரதராஜஸ்தவத்தில் (ச்லோகம் 26) ''உத்தரத்யுபரி பக்தஜநாநித்யூர்த்வதாச்ரயண ஸூசித சக்திம்| ஊர்த்வபுண்ட்ரதிலகம் பஹூமாநாத்கிம் பிபர்ஷி வரதஸ்வலலாடே||' என்கிற ச்லோகத்தில் இதையே ஸாதித்தருளினார்.

வெள்ளையான மண்ணைக் கொண்டு ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரிக்கவேண்டும் அதற்கு வேண்டிய (திரு)மண்ணைப் புண்யதீர்த்தம் துளஸீவனம் முதலான புண்யஸ்தலங்களிலிருந்து சேகரிக்கவேண்டும். மந்த்ரத்தைச் சொல்லி திருமண்ணைக்குழைத்து ஸ்ரீந்ருஸிம்ஹ பீஜாக்ஷரத்தை எழுதி விஷ்ணுபாதம் போன்ற ரூபத்தில் நெற்றியில் நடுவில் நன்றாக இடம் விட்டுத் தரித்துக் கொள்ள வேண்டும். நடுவில் ஸ்ரீசூர்ணத்தைத் தரிக்க வேண்டும். இப்படித் தரிக்கப்பட்ட ஊர்த்வபுண்ட்ரம் பகவானுக்கு ஆலயம் போல் ஆகிறது என்று சாஸ்திரம் கூறுகிறது.

ஊர்த்வபுண்ட்ரமில்லாமல் பாழ்நெற்றியாக இருக்கலாகாது. பாழ் நெற்றியோடு செய்யும் ஜபம் பூஜை முதலியவை பயனற்றவை யாகின்றன. ஊர்த்வபுண்ட்ரத்தால் தன்னை அலங்கரித்துக் கொண்டு செய்தால். அவனுக்கு ஸகலமங்களங்களும் பகவத் பக்தியும் உண்டாகின்றன. ஸர்ப்பத்தைக் கண்டு தவளைகள் நடுங்குவது போல ஊர்த்வபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டு நடுங்கி, 'இவன் விஷ்ணு பக்தன், இவனிடம் நாம் செல்லக்கூடாது' என்று யமபடர்கள் விலகிச்செல்கிறார்கள்.

பகவானுக்கு அடியார்களான நாம் ஸ்வாமியானபகவானுடைய சின்னத்தை நம் சரீரத்தில் தரிப்பது உசிதம், அவசியமும்கூட. பகவானுடைய ஆலயத்தைப் பெருக்கி மெழுகிக் கோலம் இடுவது போல, அவனுக்கு இருப்பிடமான நம் சரீரத்தையும் ஊர்த்வபுண்ட்ரத்தால் அலங்கரிக்கவேண்டும்.

மனத்தில் பக்தி இருந்தால் போதாதா? இந்த வெளி வேஷம் எதற்கு? என்று சிலர் நினைக்கலாம். மனதில் பக்தி இருப்பது அவசியம் என்று அவர்கள் ஒப்புக்கொண்ட வரையில் நல்லது. ஆத்மாவையும் மனதையும் பகவானோடு ஸம்பந்தப் படுத்தி அதனால் அவற்றைப் பயனுள்ளவைகளாகச் செய்ய வேண்டும் என்று நினைப்பது போல, பகவானுடைய ஸொத்தாகிய இந்த சரீரத்தையும் அவனதாக்கி, அவனது சின்னங்களைத் தரித்து, அதையும் பயனுள்ளதாகச் செய்ய வேண்டாமா? ஆகையால் மனத்தில் பக்தி அவசியம் என்பது போல சரீரத்தில் ஊர்த்வபுண்ட்ரம் தரிப்பதும் அவசியம். அதைத் தரித்துச் சரீரத்தைப் புனித மாக்குவது நம் கடமை.

உபநயநம் ஆகி ஸமாச்ரயணமும் ஆனவர்கள் தினமும் த்வாதச ஊர்த்வபுண்ட்ரம் (பன்னிரண்டு திருமண்) தரித்து, ஜபம் பூஜை முதலிய எல்லாவற்றையும் செய்யவேண்டும். சரீரத்தில் நெற்றி, வயிற்றில் நடு பாகம், இரு பக்கங்கள், மார்பு, இரண்டு புஜங்கள், கழுத்தினுடைய முன்பின் பாகங்கள்,

இருபக்கங்கள் அடி முதுகு, ஆக பன்னிரண்டு இடங்களில் பன்னிரண்டு திருமண்களையும் கேசவன் நாராயணன் முதலான பன்னிரண்டு நாமங்களையும் சொல்லி இட்டுக்கொள்ள வேண்டும். அது முடியாதபோது, 'கேசவனையும் தாமோதரனையும் மறக்கலாகாது' என்ற வாக்யத்தின்படி, முதலாவதான கேசவன் நாமத்தைச் சொல்லி நெற்றியிலும், பன்னிரண்டாவதான தாமோதர நாமத்தைச் சொல்லிக் கழுத்தின் பின்புறத்திலும் இரண்டு திருமண்களையாவது தரிக்க வேண்டும். ஆகிலும் ஸ்ரீ ஸ்ரீ ஜயந்தி, ஸ்ரீ ஸ்ரீ ராம நவமி முதலிய விசேஷ தினங்கள், ஆசார்யர்களுடைய திரு நக்ஷத்ர தினங்கள், ஏகாதசி, த்வாதசி திதிகள், அமாவாஸ்யை முதலிய பித்ருதினங்கள் ஆகியவற்றிலாவது அவச்யம் த்வாதச ஊர்த்வ புண்ட்ரம் தரிக்கவேண்டும். ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்த பன்னிரு நாமம் என்ற பிரபந்தத்தில் பன்னிரண்டு திருமண்களிலும் த்யானம் செய்ய வேண்டிய பகவானுடைய ரூபம் ஆயுதங்கள் முதலியவை கூறப்பட்டிருக்கின்றன. பன்னிரண்டு திருமண்களை இட்டுக்கொண்டு அதில் பகவத் ஸ்வரூபத்தைத் தியானிப்பதால் நம்மிடம் பகவானுடைய ஸாந்நித்யம் அதிகமாக ஏற்படுகிறது. ஸத்வகுணம் விருத்தியடைகிறது. ஸ்ரீய:பதியின் அநுக்ரஹத்தால் ஸகல மங்களங்களும் உண்டாகின்றன.

---

## Photographs of certain very important persons, possessed of many a golden quality, who in our sincere opinion, owed their success also to their wearing of their caste-mark with very firm belief (Maha viswaasam).



ஸ்ரீ ராஜாஜி



டாக்டர் ஸர் C. P. ராமஸ்வாமி அய்யர்



ஸ்ரீ உ. வே. S. கஸ்தூரி ரங்க அய்யங்கார் (இன்று "ஹிந்து பத்திரிகை உலகத்திலுள்ள தலைசிறந்த பத்திரிகைகளுள் ஒன்ருக விளங்குவதற்கு வித்திட்ட மஹாபுருஷர்)



ஸ்ரீ உ.,வே. T. V. சுந்தரம் அய்யங்கார் ஸ்வாமியும் அவர் தர்மபத்னியும் (T.V S. ஸ்தாபனத்தை வித்திட்டு நீர்வார்த்து வளர்த்தவர்)



ஸ்ரீமத் பாகவதரத்ந, ஸ்ரீ பாகவத ராமாயண உபந்யாஸக, ப்ரவசந மார்க்கதரிசி ப்ரஹ்மஸ்ரீ தேவங்குடி சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள் (ஸ்ரீமத்ராமாயணத்தையும் ஸ்ரீமத் பாகவதத்தையும் பூரணமாகக் கற்றுத் தேர்ந்தவர். ஆசாரசீலர், தெய்வப் புலமை வாய்ந்தவர்)



குலபதி தர்மபூஷணம் ஸ்ரீ உ. வே V. V. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி (கலியுக கர்ணனுகவும், தலைசிறந்த வழக்கறிஞராகவும் விளங்கியவர்)



தார்மீக பூஷணம் ஸ்ரீ உ.வே. மாடபூசி ஸுதர்சனம் அய்யங்கார் ஸ்வாமி(தர்ம காரியங்களுக்கெல்லாம், வானெனவாரி வழங்கிய வள்ளல்)



ராஷ்ட்ரபந்து ஸ்ரீ L.K. துளஸிராம் (பாரதப் பண்பாட்டிற்காகப் பாடு பட்டவரும், கலாசாரத்தின் திலக மாகவும் விளங்கியவர்)



ஸ்ரீ C. M. V. K. கிருஷ்ணமாசாரியார் (ஆஸ்திக மக்களுக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து விளங்கும் மகாபுருஷர்)



ஸ்ரீ T. S. N. ஸுந்தரராஜ பாகவதர் (கோயில்களுக்குக் கைங்கர்யமும் ஏழை மாணக்கர்களுக்கு அன்ன தானமும் செய்தவர்)

மஹாகவி ஸ்ரீ வள்ளத்தோல் (உயிர் துடிப்புடனும், அழகுணர்ச்சியுடனும் கூடிய இவர் கவிதைகளும், கதக்களிக்கு புரிந்துள்ள அரிய ஸேவையும் போற்றத்தக்கவை)

ஸ்ரீ T. M. நாராயணஸ்வாமி பிள்ளை (அரசாங்க வழக்கறிஞராகவும், இந்து அறநிலைய போர்டின் தலைவராகவும், அண்ணாமலை பல்கழகத்தின் துணை வேந்தராகவும் திறம்பட பணியாற்றியவர்)

வடமொழிப் புலமைக்காக ஜனாதிபதி விருது பெற்ற ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான் சிரோமணி வித்யா விசாரத ந்யாய வேதாந்த ப்ரவீண, ஸ்ரீ தேசிக தர்சன துரந்தர ஸ்ரீ உ. வே. வங்கீபுரம், நவநீதம், ஸ்ரீ ராமதேசிகாசார்ய ஸ்வாமி (ஆசாரசீலர், கடின மான வேதாந்த க்ரந்தங்களை எளிய தமிழில் உரையிடுவதில் தேர்ச்சிபெற்றவர்)

வித்வான், ந்யாய [illegible] வேந்தா யதீந்த்ர ப்ரவணப் பிரபாவம் பிள்ளைலோகம் ஸ்ரீ உ. வே ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி (ஆசாரசீலர், எளிய நடையில் கட்டுரைகளையும், ஸம்ப்ரதாயக் கருத்துக்களையும் அழகுற எல்லோருடைய மனதைக் கவரும்படி எழுதுவதில் வல்லவர்)

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ப்ரபத்தி

(Sri Ubhaya Ve. Prof. A. Srinivasa Raghavacharya Swami, Viswa-bharat University, Santhiniketan, West Bengal)

'ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே ஜகத்ரக்ஷகன். தானும் பிறரும் தனக்குத் தஞ்சமல்ல' என்ற நிச்சயத்துடன் ஒருவன் எம்பெருமானைச் சரணம் புகுவதே 'ப்ரபத்தி' எனப்படுகிறது. 'சரணாகதி' என்பதும் இதுவே. தன்னைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதால் இதைப் 'பரந்யாஸம்' என்றும், தன்னைக் காத்துக் கொள்ளும் உபாயத்தை ஒருவன் இதனால் கைக்கொள்ளுவதால் 'உபாயாநுஷ்டாநம்' என்றும் இதைக் கூறுவர்.

உலகிலுள்ள ஸகல ஜீவராசிகளும் தமக்கு மேன்மையை விரும்புகின்றன. எல்லாவற்றிலும் மேலான பயன் மோக்ஷம். அதை அடைவதற்கு உபாயம் பக்தியோகம். அதை அநுஷ்டிப்பது மிகவும் கஷ்டமானது. ஞான சக்தியுள்ளவர்களே அதைச் செய்ய முடியும். சக்தியற்றவர்களுக்கு ப்ரபத்தி உபாயம். எல்லோரும் அனுஷ்டிக்கக் கூடியது. மோக்ஷோபாயத்தை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய சக்தி தனக்கு இல்லாமையையும் தன் புகலற்ற நிலைமையையும் உணர்ந்து பரமகாருணிகனை எம்பெருமானைச் சரணமடைவதே விவேகியான ஒருவன் செய்யத்தக்கது.

இந்த ப்ரபத்தியை அதனுடைய ஐந்து அங்கங்களோடு அனுஷ்டிக்கவேண்டும். அநாதிகாலமாகப் பாபமே செய்து வந்த நான் இனி பகவானுடைய திருவுள்ளத்துக்கு உகப்பான அநுகூல கார்யத்தையே செய்வேன் (1). அவனுக்குப் பிரதிகூலமான கார்யங்களைச் செய்யமாட்டேன் (2). பகவானைத் தவிர வேறு எவரும் என் இடரைக் களைந்து என்னைக் காக்க வல்லவரல்லர் (3). பிரார்த்தித்தால் பகவான் தன் கருணையால் நிச்சயம் ரக்ஷிப்பான் என்று நம்புகிறேன் (4) ஆகையால் என்னைக் காக்கருள வேண்டும் என்று அவனை ப்ரார்த்திக்கிறேன் (5). இந்த ஐந்து அங்கங்களோடு ஒருவன் தன்னையும் தன்னுடையவைகளையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதே பரஸமர்ப்பணம் என்றும் சரணாகதி என்றும் சொல்லப்படுகிறது. இப்படிச் சரணம் புகுந்தால் திருமால் திருவுள்ளம் உகந்து நம்மை ஆட்கொண்டு நம்மை எல்லா விதத்திலும் ரக்ஷிக்கிறான். இந்த ஒப்பற்ற ஓர் உபாயத்தை அநுஷ்டிக்காவிட்டால் நமக்கு விடிவு இல்லை. ஆகையால் இதை எல்லோரும் அநுஷ்டிக்க வேண்டும்.

இனி, 'ப்ரபத்தியை எப்போது செய்து கொள்ளவேண்டும்? மோக்ஷத்திற்கான உபாயமாகிய கடைசிக் காலத்தில் செய்தால் போதாதா? இப்போது என்ன அவசியம்?' என்று சிலர் நினைக்கலாம். இது ஒரு ஜீவனுடைய வாழ்க்கையில் மிகவும் மங்களகரமான கார்யம். ஆதலால் இதை எவ்வளவு சீக்கிரம் கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் செய்து கொள்ளவேண்டும். ப்ரபத்தி ஒரு ஜீவனைப் பரமாத்மாவோடு சேர்த்து விடுகிறதாதலால் இது ஒரு கன்னிகையின் விவாஹம் போன்றது. இந்தக் கல்யாணத்தில் ஜீவாத்மாவே அழகு வாய்ந்த மணப் பெண். எம்பெருமானே மகிழ்வுடன் அவளைக் கைப்பிடிக்கும் அழகிய மணவாளன். ஆத்மாவை எம்பெருமானிடம் சேர்ப்பிக்கும் ஆசார்யனே கன்னிகாதானம் செய்து கொடுக்கும் ஜநகன் (தந்தை). எம்பெருமானுக்கு வாழ்க்கைப் பட்டு அவனுக்குத் தொண்டு புரிந்து கொண்டிருப்பதே நித்ய ஸௌமங்கல்யத்தைக் காட்டும் மங்கல ஸூத்ரம். எந்தப் பெண்தான் தனக்கு மங்களத்தை விரும்பமாட்டாள்? அது போலவே இந்த ஜீவாத்மாவும் பிறந்தது முதற்கொண்டு நாயகனைச் சேரத் தகுதியுடைய பெண் போன்றது. ஆகவே வயதான பிறகு ப்ரபத்தி செய்து கொள்ளவேண்டும் என்றோ, ப்ரபத்தி செய்து கொள்வது அமங்களம் என்றோ நினைக்கலாகாது. ஆத்மாவுக்கு எல்லா மங்களங்களையும் இங்கும் அங்கும் தரவல்ல ப்ரபத்தியை நாம் உடனே செய்து கொள்ள வேண்டும். காலம் கடத்தலாகாது.

சரணாகதி சாஸ்த்ர விஷயமாகப் பெரியதும் சிறியதுமாகவும் தமிழிலும் ஸமஸ்க்ருதத்திலும் பலபிரபந்தங்கள்

ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளிச் செய்திருக்கிறார். அவற்றிலிருந்து ப்ரபத்தியின் ஸ்வரூபத்தைத் தெளிவாக விளக்கும் ஒரு பாசுரத்தைக் கூறி இதைமுடிப்போம்.

''நின்னருளாங் கதி யன்றி மற்றென்றில்லேன்
நெடுங்காலம் பிழை செய்த நிலை கழிந்தேன்
உன்னருளுக்கினிதான நிலை யுகந்தேன்
உன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்ற நிலை எனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சி தர வரித்தேன் உன்னை
இன்னருளால் இனி எனக்கோர் பரம் ஏற்றாமல்
எந்திருமால்! அடைக்கலம் கொள் என்னை நீயே.''

—ஸாரஸங்க்ரஹம்.

ஸ்ரீ:

## பிள்ளையந்தாதியும் அடைக்கலப்பத்தும்

ஸ்ரீ வைஷ்ணவ அன்பர்களே!

சிக்கலான பிரச்னைக்குத் தீர்வு காண விரும்புகிறீர்களா? அல்லது முக்கியமான காரியங்களில் வெற்றி பெற விருப்பமா? பணக்கஷ்டமா? மனக் கவலையா? ஸ்ரீ நயினராசாரியர் அருளிச் செய்துள்ள பிள்ளையந்தாதியையும் ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்துள்ள ''பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும் நல்ல திருந்திய ஞானமும் செல்வமும் சேரும்'' என்பது நம் பெரியோர்கள் பலர் அனுபவபூர்வமாகக் கண்ட உண்மை.

தினந்தோறும் காலையில் எழுந்து தீர்த்தமாடி, பன்னிரு திருமண் காப்பணிந்து ஸந்தியாவந்தனம் முதலிய அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, முடிந்தால் குடும்பத்திலுள்ள யாவரும் ஒன்று சேர்ந்து கோஷ்டியாக—இது ஸாத்தியமில்லாத பக்ஷத்தில் குடும்பத்தில் யாராவது ஒருவர் மட்டுமாவது—மேலேகூறிய இரண்டு அரிய துதிப்பாடல்களையும் உருக்கமாக அனுஸந்தித்தால் பணக்கஷ்டம் மனக்கஷ்டம் முதலிய எக்கஷ்டமும் நீங்கி ஸகல சௌபாக்கியங்களும் அடைவர் என்பது திண்ணம்.

அப்படி தினமும் ஸேவிக்க ஸாத்யமில்லாதவர்கள், கஷ்டம் வரும்போது, உருக்கமாக அநுஸந்தித்தால் உடனே நிவர்த்தி உண்டாகும். இதற்குச் சில நிமிடங்களே போதும்.

---

# அழகியசிங்கரின் அருள் மொழி

**ஆலோட்ய ஸர்வசாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: ।**
**இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயண: ஸதா ॥**
**ச்லோகார்தேந ப்ரவக்ஷ்யாமி யதுக்தம் க்ரந்தகோடிபி: ।**
**பரோபகார: புண்யாய பாபாய பரபீடநம் ॥**

இந்த இரண்டு ச்லோகங்களும் ஸ்ரீ வ்யாஸ மகரிஷி அருளிச் செய்தவை; அபூர்வமானவை. முதல் ச்லோகத்தால், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் ஸாரார்த்தத்தைச் சொல்லுகிறார். எவ்விதம்சொல்கிறார் என்பதைக் கேளுங்கள்.

ஓ ஜனங்களே! நான் நூற்றெட்டு உபநிஷத்துக்களையும் அறிந்திருக்கிறேன். நான்கு வேதங்களையும் அறிந்திருக்கிறேன். எனக்கு முந்தினவர்களான பெரிய மகரிஷிகள் செய்த எல்லா ஸ்ம்ருதிகளையும் அறிந்திருக்கிறேன். பல மதஸ்தர்களின் ஸித்தாந்தங்களையும் அறிந்திருக்கிறேன். எனக்குத் தெரியாத வேதங்களோ, வேதாந்தங்களோ, இதர சாஸ்திரங்களோ ஒன்றும் கிடையாது. எல்லா சாஸ்திரங்களையும் சேர்த்து வைத்துக் கொண்டு அடிக்கடி அவற்றின் அர்த்தங்களைப் பரிசீலனம் பண்ணினேன். மாறுபட்ட கருத்துடைய பல மகரிஷிகளையும் கலந்து ஆலோசித்தேன். அதன் பிறகு கடைசியில் நான் ஸாரமாகத் திரட்டிய விஷயத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

பரமாத்மா எனப்படும் கடவுள் ஒருவன்; உண்மையானவன். ஜீவாத்மாக்கள் பல கோடிப் பேர்கள்; உண்மையானவர்கள்; எப்பொழுதும் உள்ளவர்கள்; அழிவில்லாதவர்கள். பரமாத்மாவும் ஜீவாத்மாக்களும் அறிவுள்ளவர்கள்.

அறிவில்லாத வஸ்துக்கள் மூன்று. ஆகாசம், வாயு, நெருப்பு, ஜலம், ப்ருதிவீ முதலிய ஸகல வஸ்துக்களும் உண்டாவதற்கு மூலகாரணமான ப்ரக்ருதி என்று பெயர் பெற்றுள்ளது ஒரு வஸ்து.

ஸ்ரீவைகுண்ட லோகத்தில் உள்ள மண்டபம், கோபுரம், ப்ராஸாதம், தடாகம் முதலிய வஸ்துக்களும் உண்டாவதற்குக் காரணமான சுத்தஸத்துவம் என்று பெயர் பெற்றிருப்பது மற்றொன்று.

வருஷம், மாஸம், பக்ஷம், தினம், நாழிகை, விநாடி முதலியவற்றிற்குக் காரணமான காலம் என்று சொல்லப்படுவது வேறொன்று. ஆக இவை மூன்றும் அறிவில்லாதவை. இவற்றுக்கு அசேதனம் என்று பெயர். இந்த மூன்று அசேதனங்களும் கடவுளைப் போலவும் ஜீவாத்மாக்களைப் போலவும் எப்பொழுதும் உள்ளவை.

கடவுள் என்ற ஒருவரைத் தவிர, பிரம்மா முதல் மற்ற எல்லாத் தேவர்களும் அதிகமான புண்ணியங்களைச் செய்து ஸ்வர்க்கலோகம், பிரம்மலோகம் முதலிய இடங்களில் வஸிப்பவர்களாகவும், அதிலும் விசேஷமான பதவிகளை வகிப்பவர்களாகவும் இருக்கிறார்கள். இவை யாவும் உண்மையே. பிரம்மருத்ராதி ஸகல தேவர்களுக்கும் அந்த அந்தப் பதவிகளை அவரவர்களின் புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி கொடுத்த கடவுள் ஒருவனே. அவன் எங்கும் நிறைந்தவன்; ஸகலவிதமான சக்திகளை உடையவன்; ஸர்வ வஸ்துக்களுக்கும் ஆதாரமானவன்; ஸர்வ வஸ்துக்களிலும் இருக்கிறவன்; ஸர்வ ஜீவாத்மாக்களுக்கும் அவரவர்களுடைய கர்மாநுகுணமாகப் பலன்களைக் கொடுக்கிறவன்; பக்தர்களுடைய ஆபத்துக்களைப் போக்குவதற்காக ந்ருஸிம்ஹ, வாமன, ராம, கிருஷ்ணாதி அவதாரங்களைச் செய்தவன் என்பதை ஒரு தடவைக்குப் பல தடவை சாஸ்திரங்களை ஆராய்ந்து தீர்மானம் செய்து சொல்லுகிறேன்.

அவ்விதமே இந்தக் கர்மலோகங்களில் மனிதர்களுக்கு ஏற்பட்டிருக்கிற பிறப்பு இறப்பு என்ற ஆபத்துக்களிலிருந்து விடுபட்டு ஸ்ரீவைகுண்டத்தை அடைந்து, மறுபடி பிறப்பில்லாமல் எப்பொழுதும் பரமானந்தத்தோடு அவ்விடத்திலேயே தன்னையும் தனக்கு ஆத்மாவான பகவானையும் பகவத் கல்யாண குணங்களையும் இடைவிடாமல் அநுபவித்துக் கொண்டிருக்க வேண்டுமானால் ஜீவாத்மாக்கள் செய்திருக்கிற ஸமஸ்த பாபங்களும் போவதற்கு ஆரம்பித்த நாள் முதல் கடைசிக் காலம் வரையில் பக்தியோகம் செய்யவேண்டும். அதாவது பகவானைத் தியானம் பண்ண வேண்டும்.

பகவானுக்கு ஆயிரக்கணக்கான நாமாக்கள்—பெயர்கள் — இருக்கின்றன. அந்தத் திருநாமங்களில் எந்தப் பெயரைச் சொல்லியும் தியானம் பண்ணலாம். ஆயினும் சில நாமாக்கள், அந்தப் பேர் உள்ளவன் சிவன் என்றும் அர்த்தம் சொல்லிவிடலாம்; பிரம்மா என்றும் சொல்லிவிடலாம். ஆகையால் நாராயணன் என்ற திருநாமத்தைச் சொல்லியே தியானம் பண்ணவேண்டும். நாராயணன் என்ற திருநாமத்துக்கு, இந்திரன் என்றோ, பிரம்மா என்றோ, சிவன் என்றோ வ்யாகரணரீதியாக அர்த்தம் சொல்ல முடியாதாகையால் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு ஸ்ரீ வைகுண்டத்தை அடைவதற்குச் செய்ய வேண்டிய பக்தி யோகத்தில் அதாவது தியானத்தில், 'நாராயணா! நாராயணா! நாராயணா!', என்றே நினைக்க வேண்டும் என்று, ''த்யேயோ நாராயண: ஸதா'' என்று தீர்மானம் செய்திருக்கிறேன்.

ஆகையால், மோக்ஷமடைவதற்கு நாராயணனையே நீங்கள் எப்பொழுதும் தியானம் செய்ய வேண்டும் என்று வியாஸர் சொல்லியிருக்கிறார். இந்த வ்யாஸ மகரிஷியே, ப்ரஹ்மஸூத்ரங்கள் பண்ணும்போது, 'ஸ்ரீமந்நாராயணனைத் தியானம் பண்ண வேண்டும்' என்று உபதேசித்திருக்கிறார். பக்தியோகம் பண்ண முடியாதவர்கள் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளில் சரணமடைய வேண்டும் என்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன.

மறுபடியும் அத்யந்தம் ஸாரபூதமான ஒரு விஷயத்தை, ''ச்லோகார்தேந ப்ரவக்ஷ்யாமி யதுக்தம் க்ரந்தகோடிபி:

பரோபகார; புண்யாய பாபாய பர பீடநம்||'' என்று வ்யாஸ மகரிஷி உபதேசித்திருக்கிறார்.

உலகிலுள்ளவர்களே! கேளுங்கள். எவ்வளவோ புண்ணியங்களை முன்ஜன்மங்களில் செய்து அதன் பலனாக மானிடப் பிறவியை அடைந்திருக்கிறீர்கள். இது மற்ற எல்லாப் பிறவிகளைக்காட்டிலும் உயர்ந்தது என்பது உங்களுக்கே நன்றாகத் தெரிந்திருக்கிறது அல்லவா? ஆதலால், அதைப்பற்றி நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. புண்ணியவசத்தால் மனிதர்களாகப் பிறந்து அந்த அந்த ஜாதிமதங்களுக்குத் தக்கபடி அவரவர்களுடைய கடமைகளைச் செய்து, நல்ல கதியை அடைந்த பல பேர்களுடைய கதைகளைப் புராணங்கள் மூலமாகக் கேட்டிருக்கிறீர்கள். மேலும், அநேக மகான்கள் பெரிய மலைகளிலும் காடுகளிலும் காய் கிழங்குகளைச் சாப்பிட்டுக் கொண்டு பகவானைத் தியானம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களையும் நான் நேரில் பார்த்திருக்கிறேன். நீங்கள் அவர்களைப் போல் தவம் செய்யக் கூடிய சக்தியுடையவர்களாகத் தோன்றவில்லை. நான் எத்தனையோ புராணங்களை இயற்றியிருக்கிறேன். மகாபாரதத்தைப் படைத்திருக்கிறேன். எல்லாவற்றையும் நீங்கள் படித்துத் தெரிந்து கொள்ளக் கூடியவர்களாக இருப்பதாகவும் தோன்றவில்லை. ஆகையால், நீங்கள் நல்ல கதியை அடைவதற்குச் சுருக்கமாக உங்கள் மனத்தில் படும்படியாகச் சொல்லுகிறேன்.

எத்தனையோ கோடி க்ரந்தங்களினால் ச்லோகங்களினால் சொல்லியிருக்கிற விஷயங்களின் ஸாராம்சத்தை அரை ச்லோகத்தினால்—பாதி ச்லோகத்தினால்—சொல்லுகிறேன். அதாவது ''பரோபகார: புண்யாய, பாபாய பரபீடநம்'' என்று உபதேசிக்கிறார்.

இந்தப் பாதி ச்லோகத்தில், எல்லோரும் நரகம் முதலிய இடங்களில் கஷ்டங்களை அநுபவிக்காமல் மேல் உலகங்களில் ஸுகங்களை அநுபவித்து விட்டு, எல்லா உலகங்களுக்கும் மேலான ஸ்ரீவைகுண்டத்தை அடைவதற்கு வேண்டிய தர்மங்களையும் உபாயங்களையும் உபதேசிக்கிறார்.

பரோபகாரம் என்றால், பிறருக்குச் செய்யும் உபகாரம். அது இரண்டு விதம்—பிறர் ஸந்தோஷப்படும்படி காரியங்களைச் செய்வது ஒன்று. மற்றொன்று, பிறருடைய கஷ்டங்களை நிவர்த்தி செய்து வைப்பது. அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்த நந்த கோபாலன் போல் ஏழைகளுக்கு அன்னமிடுதல், தண்ணீர்ப் பந்தல் வைத்தல், வஸ்திரங்கள் அளித்தல், தானம் செய்தல், தானம் வாங்குகிறவரிடத்தில் பதில் பிரயோஜனத்தை எதிர்பாராமல் பரமப்ரீதியோடு, 'அத்ய மே ஸபலம் ஜந்ம' என்று நினைத்துக்கொண்டு ஸமர்ப்பிக்க வேண்டும். வேத வேதாந்தங்களைப் படித்தவர்களுக்கு ஸமர்ப்பிக்கலாம். பரம தரித்திரனாகக் கஷ்டப்படுகிறவனுக்குக் கொடுக்கலாம். குடும்ப பாரம் உள்ளவனுக்கு, குழந்தைக் குட்டிகள் அதிகமாக உள்ளவனுக்குத் தானம் பண்ணலாம். பூமியைத் தானமாகக் கொடுக்கலாம். தங்கம் வெள்ளியைத் தானம் கொடுக்கலாம். வஸ்திரம், தனம், தானியம், நெய், எள், வெல்லம், வெள்ளி ரூபாய், லவணம் (உப்பு)—இம்மாதிரியாக அநேக வஸ்துக்களைத் தானம் பண்ணும்படி சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது.

ஸங்கல்பம் செய்து, ''துப்யம் அஹம் ஸம்ப்ரததே'' என்று சொல்லிக் கொடுப்பதைப் பிராம்மணர்களுக்கே கொடுக்க வேண்டும். ஏழை எளியவர்களுக்குக் கொடுப்பதானால் ஸங்கல்பம் செய்து கொள்ளாமல் ப்ரீதியோடு கொடுக்கவேண்டும். பிறர் நாஸ்திகர்களாக இருந்தாலும் அவர்களுக்கும் உபகாரம் செய்யவேண்டும் ''நாஸ்திகர்களுக்கு உபகாரம் செய்யலாமா''? என்று கேட்கலாம். நாஸ்திகர்களுக்கும் உபகாரம் செய்யலாம். எப்படி என்றால், அவர்களின் வலையில் நாம் சிக்கிக் கொள்ளாமல், அவர்களிடத்தில் பழகிச் சில நல்ல விஷயங்களை மனத்தில் படும்படிச் சொல்லி, அவர்களின் புத்தியைத் திருப்பித் தெய்வ பக்தி வரும்படி பண்ணினால், அந்த நாஸ்திகர்களுக்குப் பாவம் போய்ப் புண்ணியம் வளரும் அல்லவா? அதுதான் அவர்களுக்குச் செய்யும் உபகாரம்.

வேதபாடசாலை ஏற்படுத்துவது, வேதாத்தியயனம் பண்ணியவர் அதை மறவாமலிருக்க வேதபாராயணத்திற்கு ஏற்பாடு செய்வது, வேதாத்தியாயனம் பண்ணினவரின் குடும்பத்தைப் போஷிப்பது—இவை பரோகாரமாகும். வேகம்

படிக்கும் பிள்ளைகளுக்கு ஆஹாரம் போடுவது வேதத்திற்கு ஆஹாரம் போடுவது போலாகும். வேதம் உலகில் நீடித்திருக்கும்படி பண்ணுவது மிகவும் உபகாரம். கிராமங்களிலோ நகரங்களிலோ கிணறுகள் வெட்டி ஜனங்களுக்கு உபயோகப்படும்படி பண்ணுவது பரோபகாரம். கோயிலில் வருகிற யாத்திரிகர்களுக்கு ஆஹார வசதி செய்வது பரோபகாரம். இலவச மான ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தி ரக்ஷிப் பது பரோபகாரம். அதிக வட்டி வாங் காமல் ஏழைகளுக்குக் கடன் கொடுப் பது, ஏழைப் பிராம்மணப் பிள்ளை களுக்குத் தர்மோபநயனம் பண்ணி வைப்பது, உபநயனத்திற்குக் கொஞ்சம் தனம் கொடுப்பது, கல்யாணத்திற்கு இடம் கொடுப்பது, உண்மையான ஏழைக்குக் கல்யாணத்திற்கு முடிந்த வரையில் தனம் கொடுத்து உபகரிப்பது, சாஸ்திர புஸ்தகங்கள் வாங்கிக் கொடுப்பது முதலியன பரோபகார மாகும்.

தர்ப்பணம், ச்ராத்தம் முதலிய வற்றை விடாமல் செய்வது பித்ருக் களுக்குச் செய்யும் உபாகாரம். ஏகா தசி உபவாஸம் இருந்தால் நம் முன் ளேர் யாராவது நரகத்தில் இருந்தால் அவர்களுக்குப் பாவம் போய் நரகத்தி லிருந்து விடுதலை ஏற்படுகிறபடியால் ஏகா தசி உபவாஸமும் பரோபகாரமாம். சாஸ்திரப்படி கல்யாணம் செய்து கொண்டு ஸத்புத்திரர்களை உண்டுபண்ணி ஞல், ''ஆஸ்போடயந்தி பித்ர: ப்ரந்ருத் யந்தி பிதாமஹா:। வைஷ்ணவோ ந: குலே ஜாத: ஸ ந: ஸந்தாரயிஷ்யதி ॥'' என்று, ஒரு வைஷ்ணவன் ஒரு குலத் தில் பிறந்தானேயானுல் பித்ருக்கள் குதிக்கிறார்கள். தோளைத் தட்டிக் கொள்கிறார்கள். ''இந்தப் பித்ருலோ கத்திலிருந்து இவன் நம்மைக் கரை யேற்றி வைகுண்டத்தை அடையச் செய்வான்'' என்று ஸந்தோஷப்படுகி றார்கள். ஆகையால் ஸத்ஸந்தானத்தை உண்டுபண்ணுவது பித்ருக்களுக்குச் செய் கிற பரோபகாரம்.

ஸத்புராணங்களை வாசித்துப் பல பேர்களுக்கு அர்த்தம் சொன்னார்களே யானுல் அதைக் கேட்கிற அநேகம் பேர்களுக்கு நல்ல விஷயங்களில் பக்தி உண்டாகி, நல்ல காரியங்களைச் செய் வார்களாகையால், புராணம் படித்துச் சொல்லுவது பரோபகாரம். இதைப் போலுள்ள பல பரோபகாரங்களைப் பெரியோர்களின் உபதேசத்திஞல் அறிந்து செய்ய வேண்டும்.

நாம் சிலவற்றைப் பரோபகாரம்என்று நினைத்து நம் இஷ்டப்படியெல்லாம் செய்வது பரோபகாரமாகாது. சாஸ்திர விருத்தமான பரோபகாரங்கள் பாவத் தில்தான் சேரும். சாஸ்திர ஸம்மத மான பரோபகாரம்தான் புண்ணியத் தில் சேரும். ''ய: பரோபகார: புண் யாய பவதி—எந்த மாதிரியான பரோ பகாரம் புண்ணியத்தை உண்டுபண்ணு மோ அந்தமாதிரியான பரோபகாரத் தைத்தான் பண்ண வேண்டும்'' என்பது வ்யாஸ மகரிஷியின் திருவுள்ளம்.

மேலும், எந்த மாதிரியான உபகாரம் பிறருக்குப் புண்ணியங்களையும் உண்டு பண்ணுமோ அப்படிப்பட்ட உபகாரம் தான் பரோபகாரமாகும்.

இதற்கு மேல் முக்கியமான பரோ பகாரம் ஒன்று இருக்கிறது. அதைச் சொல்லுகிறேன், கேளுங்கள். சொன்னல் பெரியோர் அதை ஒப்புக்கொள்வார்கள் என்றே நினைத்துச் சொல்லுகிறேன். முதல் ச்லோகத்தில் வ்யாஸ மகரிஷி உபதேசித்த ''த்யேயோ நாராயண: ஸதா'' என்கிறபடி, ஒரு பரோபகாரம் இருக்கிறது. அதாவது—பரோபகாரம் என்பதற்கு ஓர் அர்த்தம்; பரன் என்றால் பரமாத்மா; அவனுக்குச் செய்ய வேண் டிய உபகாரம் ஒன்று இருக்கிறது. அதைச் செய்வது பரோபகாரம். ''இது என்ன ஆச்சரியம்! பரமாத்மாவுக்குக் கூடவா நாம் உபகாரம் செய்ய வேண் டும்? நம்முடைய உபகாரத்தையா எதிர்பார்க்கிறான்? அது என்ன அப் படிப்பட்ட உபகாரம்? சொல்ல வேண்டும்'' என்றால், மறைத்து வைப்ப தில் பிரயோஜனமில்லை. சொல்லு கிறேன், கேளுங்கள்.

பிரளயகாலத்தில் எல்லா உலகங்களும் அழிந்துவிடுகின்றன. மோக்ஷமடைந்த ஜீவாத்மாக்களைத் தவிர மீதி எத்தனை யோ கோடி ஜீவாத்மாக்கள் மிகவும் குறைந்த ஜ்ஞாநத்தோடு ப்ரக்ருதியில் சேர்ந்து கிடக்கிற ஸமயத்தில், ஸர்வர க்ஷகனை ஸ்ரீமந் நாராயணன் அந்த ஜீவாத்மாக்களைக் கடாக்ஷித்து வருத்த மடைகிறான். என்ன வருத்தம் என்றால், ஸ்ரீவைகுண்டத்தில் முன்னமே இருக்கிற வர்களாகவும், வந்து சேர்ந்தவர்க ளாவும் இருக்கிற ஜீவாத்மாக்களைப் போல் இவர்களும் ஸ்ரீவைகுண்டத்திற்கு

வந்து ஆனந்தமடைய வேண்டியவர் கள்தாமே? ஸ்ரீவைகுண்டம் வருவதற்குச் செய்ய வேண்டிய பக்தியோகம் அல்லது சரணாகதி ஆகிய இரண்டில் ஒன்றைச் செய்வதற்குச் சரீரம்தானே முக்கியமாக வேண்டும்? சரீரம் இல்லாமல் இந்த ஜீவாத்மாக்கள் எப்படிப் பக்தி ப்ரபத்திகளைச் செய்வார்கள் என்று வருத்தமடைந்தவனாகப் பகவான் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ண ஆரம்பிக்கிறான்.

பிறகு அந்த ஜீவாத்மாக்களின் புண்ணிய பாவங்களுக்குத் தகுந்தபடி பிரம்மா, ருத்திரன், இந்திரன் முதலிய தேவர்களை ஸ்ருஷ்டித்து, மனுஷ்யர்களையும் ஸ்ருஷ்டித்து, வேதங்களையும் உபதேசித்து, வேத வேதாந்தங்களின் அர்த்தங்களை எல்லோருக்கும் தெளிய உபதேசிக்கிற ஆசார்யர்களையும் ஸ்ருஷ்டித்து, நாளது பர்யந்தம் இவ்வுலகத்தை நடத்திக்கொண்டு வருகிறான். அர்ஜுனனைச் சிஷ்யனாக வைத்துக் கீதையை உபதேசம் பண்ணினான். ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்த பகவான் கெஞ்சுகிறான்—"என்னைப் பூஜை பண்ணுங்கள். எனக்கு அர்ப்பணம் பண்ணுங்கள். என்னையே தியானம் செய்யுங்கள். என்னைச் சரணமடையுங்கள். கட்டாயம் என் இஷ்டப்படி எல்லோரும் ஸ்ரீவைகுண்டம் வந்து சேர்ந்து விடுவீர்கள். நான் எதற்காக உங்களுக்கு ஸகல காரியங்களையும் செய்து நல்ல கதி அடைவதற்குத் தகுந்த சரீரத்தை ஸ்ருஸ்டித்தேனோ, அப்படிப்பட்ட என் மனோரதமும் பூர்த்தியாகிவிடும்" என்று நம்மை யாசிக்கிறான் ஸ்ரீகிருஷ்ணன்.

ஆகையால் இந்தக் காலத்தில் நாம் பக்தியோகம் பண்ணி மோக்ஷம் அடைந்து அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய இஷ்டத்தைப் பூர்த்தி பண்ணி வைக்கச் சக்தியற்றவர்களாக இருந்தபோதிலும், "அஞ்ஜலிம் யாசமாநம்" என்கிறபடி, அவன் யாசிக்கிற சரணாகதி ரூபமான அஞ்ஜலியை அதாவது ஆநுகூல்யாதி அங்கபஞ்சகங்களோடு கூடின ஆத்மநிக்ஷேபத்தை அதாவது ஸ்வரூப—பல—ஸமர்ப்பணத்தோடு கூடின பரந்யாஸத்தை ஸ்ரீமந்நாராயணனின் திருவடிகளில் பண்ணினோமேயானால், பகவானுக்கு இருந்த நிர்வேதம் தீர்ந்துவிடுகிறபடியால், பகவானுக்கு நாம் பண்ணுகிற உபகாரம் நாம் பண்ணுகிற சரணாகதியாகும். இதைத்தான் பரமாத்மாவுக்குச் செய்கிற உபகாரம் என்று சொன்னேன்.

ஒருவனுக்கு ஏற்பட்டிருக்கிற வருத்தத்தைத் தீர்த்து வைப்பதுதானே பரோபகாரம்? ஜீவகோடிகள்—ஜீவாத்மாக்கள் எல்லோரும் மோக்ஷத்தை அடையவில்லையே என்கிற வருத்தம் பகவானுக்கு இருக்கிறபடியால், ஜீவாத்மாக்கள் சரணாகதி பண்ணி மோக்ஷம் அடைந்தால் பகவானுடைய வருத்தமும் தீர்ந்துவிடுகிறபடியால், மறவாதீர்கள்—ஜன்மம் எடுப்பதற்குப் பலனாக ஸ்ரீமந்நாராயணனைச் சரணமடைந்து முக்தியடைந்து நம் வருத்தத்தையும் தீர்த்துக் கொண்டு ஆனந்தமடைவீர்களாக. இம்மாதிரி பகவானுக்குச் செய்ய வேண்டிய 'உபகாரத்தையே "த்யேயோ நாராயண: ஸதா" என்று வியாஸர் உபதேசித்தார் என்று தெரிகிறது. இந்த இரண்டு ச்லோகங்களும் இரண்டு ரத்தினங்கள்.

இப்படியே பரபீடனம், பகவானை இல்லை என்னுதல், த்வேஷித்தல், அவனுடைய அடியார்களை நிந்தித்தல், அவர்களுக்கு உபத்திரவம் செய்தல் முதலிய காரியங்களைச் செய்தால் பாவம் உண்டாகிறது. ஆகையால், பகவத் பாகவதர்கள் விஷயத்தில் அபசாரங்கள் இல்லாமலிருந்தால் ஸகல க்ஷேமங்களையும் அடையலாம் என்றும் வ்யாஸ மகரிஷி உபதேசித்தார்.

—With grateful acknowledgments to Sri Narisimhapriya, September 1977 issue.

"Little deeds of kindness
Litte words of love
Help to make earth happy
Like the heaven above."

—Julia Fletcher Carney.

# பொதுவான அம்சங்கள்

## முன்னுரை :

(வடமொழிப் புலமைக்காக ஜனாதிபதி விருது பெற்ற ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான் சிரோமணி வித்யா விசாரத ந்யாய வேதாந்த ப்ரவீண, ஸ்ரீதேசிகதர்சன துரந்தர ஸ்ரீ உ.வே. வங்கீபுரம், நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்ய ஸ்வாமி.)

(லிப்கோ ''நம்மாழ்வார் பெருமை'' என்ற புஸ்தகத்தின் 1974ஆம் பதிப்பிலிருந்து தொகுக்கப்பட்டது)

காலம் கலிபுருஷனது ஆட்சிக்கு அகப்பட்டது. நாகரிகம் நாளுக்கு நாள் வளர்ச்சியடைகின்றது. கடவுள் இல்லையென்று பிதற்றும் நாஸ்திகர்களைப் பற்றி நமக்குக் கவலையில்லை. ஆஸ்திகத் தன்மை இருந்தும் தம் கடமைகளினின்று மிக மிகத் தவறி வரும் இளைஞர்களைப் பற்றியே கவலை கொள்ள வேண்டியுள்ளது. பெற்றோர்கள் தங்கள் புதல்வர்கள் விஷயத்தில் கொண்டுள்ள அசிரத்தையும் ஸஹவாஸ தோஷமும் அவர்கள் கடமையில் தவறக் காரணமாகின்றன. நம் ஸமூஹத்தைச் சேர்ந்த இளைஞர்கள் தெய்வ பக்தியுடையவராயிருந்தும் அவசியமாய்ச் செய்தே தீர வேண்டிய சிறு கடமைகளிலும் தவறுவது லிப்கோவின் உள்ளத்தைப் புண் படுத்துகின்றது. சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட செயல்களை நேரிய முறையில் செய்ய விடாமல் நம் வகுப்பினரான இளைஞர்களைப் புதிய நாகரிகமும் சூழ்நிலையும் வசப்படுத்திக் கொண்டுவிட்டன. இப்பொழுது கலியின் வலிமையும் புதிய நாகரிகமும் சேர்ந்து கொண்டு நம் ஸமூகத்தினரைப்படுத்தும் பாட்டை விளக்கி அவர்களுக்குச் சில நல்ல விஷயங்களை எடுத்துக் கூற வேண்டுமென்பதும் அதனால் பலர் திருந்தித் தம்மால் இயன்றளவுக்குக் கடமையைச் செய்ய முற்பட வேண்டுமென்பதும் லிப்கோவின் விருப்பம். இதைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் இங்கு நடைமுறையில் உள்ள விஷயங்களைக் காட்டி இளைஞர்களுக்கு நல்லுரை கூறப் பிறந்தது இந்நூல். லிப்கோவின் விருப்பத்தை தலைக்கட்டி வைப்பது ஸர்வேச்வரன் ஸங்கல்பத்தைப் பொறுத்ததாகும்.

—ஆசிரியர்

## 1. ஸம்ப்ரதாய ஒற்றுமை

உபநிடதங்களில் ஓதப்பட்டு ஆழ்வார் வழியாக நாதமுனிகளிடம் பெருகி ஆளவந்தாரால் வளர்க்கப்பட்டு ஸ்ரீ பாஷ்யகாரரால் காக்கப்பட்டு வந்த ஸித்தாந்தமே ஸ்ரீ வைஷ்ணவஸித்தாந்தம். இதுவே ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமெனவும் ராமாநுஜ தர்சநம் எனவும் வழங்கும். ஸித்தாந்தம் நிலைத்திருப்பச் செய்ததில் ஸ்ரீ பாஷ்யகாரரே பெரும் பங்கு கொண்டதால் அவருடைய தர்சனம் வழங்குகின்றது. எம்பெருமானாருக்குப் பிறகு வரும் ஆசார்ய பரம்பரையில் ஸம்ப்ரதாயம் தென்கலை வடகலை என இரண்டு வகையாய்ப் பிரிகின்றது. இந்த இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை என்பதிலும் அவன் திருவடிகளைச் சரணமடைய வேண்டும் என்பதிலும், ஸ்ரீ வைகுண்டத்தில் அவனைச் சாச்வதமாக அநுபவிக்கப் பெறுவதே சிறந்த பலன் என்பதிலும், பின்னும் பல பொது அம்சங்களிலும் கருத்து வேற்றுமை கிடையாது. இரு ஸம்ப்ரதாயத்தினரும் இரு அம்சங்களிலும் ஒருவருக்கொருவர் உதவியை நாடுவதும் புரிவதும் உண்டு. உதாஹரணமாய்— உபநிஷத்துக்களின் உட்கருத்து உணர்வதற்குத் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஸ்ரீரங்கராமாநுஜ பாஷ்யத்தை முக்கியமாகக் கொள்வதும், அருளிச் செயலில் பொதிந்துள்ள விசேஷாம்சங்களை அறிந்து அநுபவிப்பதற்கு வடகலை ஸம்ப்ரதாயத்தினர் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தையே நாடுவதும் நெடுநாளாக நிகழ்வன. ஆயினும் ஸம்ப்ரதாய — அநுஷ்டாநங்களின் உட்பிரிவுகளில் சிற்சில கருத்து வேற்றுமைகள் இருப்பது உண்மையே. உலகில் ஒரு குடும்பத்தில் உள்ள ஸஹோதரர்களுள் அபிப்ராய பேதம் ஏற்படுவ

இல்லையா? நாஸ்திகர்களும் புறசமயத்தினரும் நம் எம்பெருமானார் தர்சநத்துக்குப் பல இன்னல்களை விளைவிக்க முயலும் இந்நாளில் எம்பெருமானார் திருவடி நிழலிலே வாழும் அனைவரும் பற்பல பொது அம்சங்களில் சர்ச்சைகளை வளர்த்தாமல் ஒற்றுமையுடனிருப்பதுவே சிறக்கும்.

## 2. திருமண்காப்பு அணிதல்

நம் இனத்து இளைஞர்களின் நிலையை நினைக்கும்போது மனம் மிக்க வேதனையை அடைகின்றது. பலர் நெற்றியில் திருமண் அணிவதில்லை. திருமண் இல்லாத நெற்றியை இடுகாட்டுக்குச் சமமாய்ச் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. எம்பெருமானுடைய திருவடிச் சின்னமாகிய திருமண் காப்பை அணிந்து கொள்ளாதவனுக்கு எந்தச் செயலையும் செய்ய உரிமை இல்லை. சூன்யமான நெற்றியுடன் செய்யும் செயல்கள் அமங்கலச் செயல் வகுப்பிலே சேரும். சிலர் நெற்றியின் நடுவிலே ஸ்ரீசூர்ணத்தை மட்டும் ஒரு கோடாக இட்டுக் கடமையைச் செய்ததாய்த் திருப்தியடைகின்றனர். இதுவும் பயனற்ற செயலே. எம்பெருமானை விட்டுப் பிராட்டியைப் பிரித்து வைத்த பாவம் இதற்கு உண்டு. கிராப் வாருவதிலோ பவுடர் பூசுவதிலோ செலவிடும் காலத்தில் எட்டில் ஒரு பகுதி செலவிடுவதே திருமண் அணியப் போதுமானது. ஆதலின் இளைஞர்கள் அவரவர் ஸம்ப்ரதாயப்படி உரிய திருமண் காப்பை அணிந்து கொள்வது மிகவும் அவசியமாகும். திருமண் அணிவதால் உத்யோகத்துக்கு ஆபத்து இருப்பதாய்த் தெரியவில்லை.

நம் வகுப்பினரில் பலர் பஞ்ச ஸம்ஸ்காரங்கள் ஆகியிருந்தும் தம் பெற்றோரின் சிராத்த தினங்களிலும் தர்ப்பண தினங்களிலும் பன்னிரண்டு திருமண் அணியாமல் அக்கடமைகளைச் செய்வது வருந்துதற்கு உரியதாகும். மேலும் எல்லா மாதப் பிறப்புகளிலும் தர்ப்பணம் செய்ய இயலாமல் நான்கு மாதங்களில் மட்டும் தர்ப்பணம் செய்பவர்கள் தர்ப்பணம் செய்யாத மற்ற மாதப் பிறப்பு நாட்களில் இரவில் பலகாரம் உண்ணுமல் அன்னத்தையே உண்பது மஹாபாபமாகும். இவர்கள் மற்ற மாதங்களில் தர்ப்பணம் செய்யாவிடினும் பித்ரு தினங்களில் இரவில் அன்னம் உண்ணக் கூடாதென்ற சாஸ்த்ரம் இவர்களையும் கட்டுப்படுத்துமே!

## 3. புகைபிடித்தலின் தீமை

புகை பிடிக்கும் பழக்கம் நம் வகுப்பு இளைஞர்களையும் நன்கு பிடித்துக் கொண்டுள்ளது. புகைப்பிடித்தல் புற்று நோய் முதலியவற்றை விளைவிப்பதாக மேல் நாட்டினர் ஆராய்ச்சி செய்து நூல்களை எழுதியுள்ளனர். அதனின்று மேல் நாட்டினரில் பலர் இந்தத் தீய பழக்கத்தைக் கைவிட்டதாகச் செய்தித்தாள்களில் இருந்து அறிகிறோம். தமிழ்நாட்டில் மிகப் பிரபலமாய் விளங்கிவரும் ஒரு வாரப் பத்திரிகையில் புகைப் பிடித்தலால் வரும் பல தீங்குகளைப் பற்றி இரண்டு மலரில் மிக விரிவாய் அருமையான வியாசம் வந்திருப்பதை எல்லோரும் நிச்சமாய்க் கண்டிருப்பர். அந்த இரண்டு மலர்களும் விலையில்லா மாணிக்கம் போன்றவை. அதைப் படித்த சிலராவது இத்தீய பழக்கத்தை விட்டார்களா என்று ஆராய்தல் நமக்குப் பணியன்று. விட்டால் அவர்களின் உடம்பு பிழைக்கும். சாஸ்த்ரத்துக்காக வன்றேலும் சுகாதாரத்தைக் கருதியாவது இந்தச் தீயச் செயலைக் கைவிட்டால் சரீரம் கெடாமலிருக்கும். தீப்பெட்டியை எங்குசென்றாலும் தம் கையோடு எடுத்துச் செல்பவர் பலர். பிறர் ஊதுவதில் வைத்துத் தீயை உண்டாக்கித் தாமும் ஊதிக் கொள்பவர் பலர். கடைகளில் சாச்வதமாக வைத்திருக்கும் கயிற்றுத் தீயில் பற்ற வைத்துக் கொள்பவரும் பலர். இந்த ஆபாஸங்களையெல்லாம் பார்க்க நேரும் கண்களைப் பறித்து எறியலாமே! தம்மையே அழித்துக் கொள்ளும் இத்தகையரை எம்பெருமான்தான் காப்பாற்ற வேண்டும். நெடுநாள் பழகிவிட்ட ஒன்றை கைவிடுதல் கஷ்டம்தான். ஆனால் அதனால் உடலுக்கு வரும் தீமைகளைச் சிந்தித்துப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டாவது முற்றிலும் கைவிடுதல் சரீரத்தைக் காக்கும் செயலாகும்.

## ஒவ்வொரு சிகரெட்டும்
## 12 நிமிட ஆயுளைக் குறைக்கிறது !

சிகரெட் பிடிப்பது மிகக் கெடுதல், பல வியாதிகள் ஏற்படும் என்று புகை பிடிக்கும் ஒவ்வொருவருக்கும் தெரியும். ஆனால் யாரும் சிகரெட் புகைப்பதை நிறுத்துவதில்லை. மேற்கு ஜெர்மானிய நகர் மூனிக்கில் நடைபெற்ற சிகரெட் எதிர்ப்பு மாநாட்டில் சிகரெட் பிடிக்காதே என்ற இயக்கத்தை நடத்தாமல் சிகரெட் பிடிப்பவர்களிடம் மன மாறுதல் ஏற்படும் படியான பிரசார முறையை கையாள வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

சிகரெட் பிடிப்பவர்களில் பெரும்பாலோர் புற்றுநோய் ஏற்பட்டு அவதிப்படுகிறார்கள்; மூச்சு விடும் உருப்புக்கள் புகை பிடிப்பதால் பாதிக்கப் படுகின்றன; ஒரு சிகரெட் பிடித்தால் ஆயுள் காலத்தில் 12 நிமிஷம் குறைந்து விடுகிறது என்பதெல்லாம் எடுத்துக் காட்டப்பட்டன.

மியூனிக் நகர மனத் தத்துவ நிபுணர் ஒருவர் கூறுவதாவது:

''புகை பிடிப்பது குண விசேஷத்திறைலன்று. பிறரைப பார்த்துத் தானும் செய்ய வேண்டும் என்று விரும்புகிறார்கள். விளம்பரங்களால் சிகரெட் பிடிப்பது ஓர் அந்தஸ்து, கௌரவம் என்ற மனப்பான்மை ஏற்பட்டுள்ளது.''

''காரியாலயங்களிலும் வேறு பல பொது இடங்களிலும் புகை பிடிக்கக் கூடாது என்று தடுக்கப்பட வேண்டும். கான்டீன்களிலிருந்து சிகரெட் விற்கும் இயந்திரங்களை நீக்க வேண்டும். புகை பிடிப்பவர்கள் சூழ்நிலையில் உள்ள காற்றை அசுத்தப்படுத்துகிறார்கள் என்று விளம்பரங்கள் செய்யப் பட வேண்டும்.''

இவ்வளவு செய்த பின்பும் சிகரெட் பிடிப்பவர்கள் எண்ணிக்கை ஒரு சிறு அளவுதான் குறையும் என்று இம்மகாநாடு கருதியது. சிறு வயதிலேயே இப்பழக்கம் ஏற்படா வண்ணம் தடுக்கப்பட வேண்டும் என்று மகாநாடு வற்புறுத்தியது.

நன்றியுடன்: ''கல்கி'', 7—4—74 யூ.பி.எஸ்

## 4. காபி பருகுதல்

இந்த ஸம்ப்ரதாயத்தைப் பற்றி பேச வாய் இல்லை. இந்தப் பழக்கம் இல்லாத குடும்பத்தைக் காண்பது அரிதிலும் அரிது. வைதிகர் என வழங்குபவர் குடும்பத்திலும் இது நன்றாய் இடம் பிடித்துக் கொண்டது. இப்பழக்காத்தாலும் சில நோய்கள் வருவதாகப் பெரிய மருத்துவர்கள் கண்டு சில நோயாளர்களை இப்பழக்கத்தை விடுமாறு கூறுவதையும் காண்கிறோம். இருப்பினும் உலகத்தில் இதற்கு உள்ள செல்வாக்கையும் இது உலக முழுவதையும் வளைத்துக் கொண்டு ஆட்சி புரியும் பெருமையையும் நோக்கும்போது இதை விடுமாறு பிரசாரம் செய்பவரை உலகம் கீழ்ப் பாக்கம் மருத்துவமனைக்கு அனுப்பி விட்டே மறுகாரியம் பார்க்கும்.

ஆயினும் சில வரையறைகளை மட்டும் கூறிவிட்டு அதற்குக் கிடைக்கும் சவுக்கடிகளைப் பொறுமையுடன் நாம் தாங்கிக் கொள்வது நன்றேயாகும். இதில் பழக்கம் பலவகை. ஸ்நாநம் செய்து நித்யகர்மங்களைச் செய்து முடித்துவிட்டுக் காப்பியை அருந்துமவர் சிறந்த வைதிகரென இக்காலத்தில் கொள்ளப்படலாம். பல்தேய்த்து ஸ்நாநம் செய்யாமல் ஸந்த்யாவந்தனத்தைச் செய்துவிட்டு காப்பி பருகிப் பேபர் முதலியவற்றைப் படித்து ஸ்நாநம் செய்யச் செல்லுமவர் ஸந்த்யா வந்தனத்துக்குப் பிறகு காபி

பருகியதால் அரை வைதிகரெனப்படு வர். இவர்களிலும் முன்னேற்றமடைந்த வகுப்பினர் உண்டு. இவர்கள் அதி காலையில் பள்ளியிலிருந்து எழுந்திருக்கும் போதே காபி முன் வந்து நிற்க வேண் டும். அதைப்பருகிய பின்பே ஸாவகாச மாய்ந் தேக உபாதிகளைக் கழித்துப் பல் தேய்த்து நீராடிப் பிறகு நித்ய கர்மங் களைச் செய்வார்கள். ஸந்த்யாவந்தனம் செய்வதற்கு முன்பு எந்த ஆஹாரமும் கொள்ளக் கூடாதென்று சாஸ்த்ரம்விதித் துள்ளதே என்று இவர்களைக் கேட்பதா யின் அவர்கள் ஸூர்யன் உதிப்பதற்கு முன் முதல் நாள் கணக்காதலின் நேற்றைப் பொழுதைச் சேர்த்தது தாம் பருகியதென்று கூறிக் கேட்பவர் வாயை அடைத்துவிடுவார்கள். நம் அறிவுக்கு எட்டாமலும் பல சாஸ்த்ரங்கள் இருக் க்க கூடும். அந்தச் சாஸ்த்ரங்கள் அவர் களின் இச்செயலை அநுமத்திருக்கக்கூடு மென்று ஸமாதானம் செய்து கொள் வோமா! வேர்த்தபோது குளித்துப் பசித்தபோது உண்ணவேண்டும் என்ற கொள்கையை உறுதியாய்ப் பற்றிக் கொண்ட இளைஞர்களிடம் இந்தச்சாஸ்த் ரவாதங்களெல்லாம் விலைபோகுமா ? உண்பதிலும் உடுப்பதிலும் கூட எங்க ளுக்கு சுதந்திரம் இல்லையா? என்ற கேள்விக்கு நாம் விடை கூற முடியாது விழிக்க வேண்டும்.

## 5. கிருதா அலங்காரம்

சில காலமாய்ப் புதிய நாகரிகம் ஒன்று புகுந்துள்ளது. சிகை என்பது போய் கிராப் என்பது நம் ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்களிடம் பரவிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. வைதிக குடும்பங்களில் கூட இளைஞர்களிடம் இந்தக் கிராப் ஸம்ப்ரதாயம் பரவிப் பெரியோர்கள் அதை ஸகித்துக் கொள்ள வேண்டிய அவ சியமும் வந்துவிட்டது. இது கலியுக மன்றோ! அத்துடன் இப்பொழுது சிறி தும் பொறுக்க முடியாத ஓர் அலங்கா ரம் புதிதாகப் புகுந்து கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ இளைஞர்களையும் ஆட்டி வைக்கின்றது. இரு கன்னங்களிலும் மேற் பகுதி தொடங்கி மோவாய்க் கட்டை இருபுறம் வரையில் அரை அங்குல அக லத்துக்குக் குறையாது மூன்று அல்லது நான்கு அங்குல நீளம் 'கிருதா' என்ற திருநாமத்துடன் உலகப் புகழ்பெற்ற ஒரு தொற்றுநோய் 'நம் இனத்து இளை ஞர்களில் பெரும்பாலானவரிடம் ஆட்சி புரிகின்றது. சூழ்நிலையைச் சிந்தித்துக் கிராப்பைப் பொறுத்துக் கொண்டிருக் கும் குடும்பத் தலைவர்களுக்குக் கூட இந்த வேஷம் பொறுக்க முடியாததா கின்றது. ஆயினும் என்ன செய்வது? இளைஞர்கள் கண்ணுக்கு இந்த அலங் காரத்தால் தாங்கள் மன்மத வடிவுப் பெற்றதாகப் புலப்படுகின்றது. அவர் களுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி! லௌகிகம் கலந்த வைதிகர்குக் கூட இந்த வேஷம் அருவருப்பைத் தருகின் றது. என்ன செய்ய முடியும்? இதுவும் கலியின் ஒரு திருவிளையாடல்!

## 6. மீசையலங்காரம்

இதுவும் நம் இனத்து இளைஞர்களி டம் புகுந்துவிட்டது. இது அவர்கள் மூகத்தை எப்படி அழகுப்படுத்துகின்ற தென்பதை அவர்களிடம்தான் கேட்க வேண்டும். இதிலும் சிறிய அளவு—பெரிய அளவு என்ற வகைகள் ஏற்படுவது அவ ரவர் விருப்பத்துக்கு ஏற்றபடி இருக்கும். இந்த ஆபாஸ மெல்லாம் ஏன் செய்து கொள்ளவேண்டும்? என்று கேட்டால் இது ஆண்மைக்கு உரிய சின்னமன்றோ? என்று நமக்கு விடை தருகின்றனர். இந்த வேஷமில்லாத ஆண்களையெல் லாம் பெண்களாகவே மதிக்கின்றனர் போலும்! இந்தக் கூத்துக்களை யெல் லாம் சிந்திக்கும் குடும்பப் பெரியோர் கள் தங்கள் தலைவிதியையும் சேர்த்து சிந்திக்க வேண்டும்.

## 7. உடையுடுத்தல்

இதிலும் எத்தனையோ தலைவலி. விவாஹம் ஆனவர்களுக்கு அவசியமாய் நம் சாஸ்த்ரம் விதித்துள்ள கச்சம் என்பதே நம் இளைஞர்களுக்குத் தெரி யாத விஷயம். மணப்பெண்ணுக்கு விவாஹ காலத்தில் முதன் முதலாக

நாத்தனுர் கூறைச்சீலே உடுத்திவிடுவது போல் மணமகனுக்குத் திருமணத்தன்று பிருஹஸ்பதி ஸ்வாமி கூட இருந்து இரண்டொரு மணி காலத்துக்கு மட்டும் இருக்கும்படி ஏதோ கச்சமென்ற பெயரில் உடுக்கச் செய்கின்றுர். மணமகனே எப்பொழுது இந்த நிர்பந்தங்கள் கழிந்து சுதந்திரனுயிருக்கலாம் என்ற எண்ணத்திலே இருக்கின்றுன். திருமண நாளில் உள்ள சிறுபொழுது தவிரப் பின்பு எப்பொழுது கச்சம் கட்டிக் கொள்வானென்பது எம்பெருமானுக்கே வெளிச்சம். மணம் செய்துகொண்டவன் கச்சமின்றி ஆசமனம் செய்யக்கூடாதென்றெல்லாம் சாஸ்த்ரங்கள் விதித்துக் கொண்டே போகின்றன. அவற்றைப் பொருட்படுத்துபவனேதான் தேடித் தோல்வியடைய வேண்டியுள்ளது. ஸந்நிதிகளுக்குப் பகவத் ஸேவைக்குச் செல்லும்போதுகூடப் பலர் கச்சம் தரிப்பதில்லே. சட்டையைக்கூடக் கழற்ருமல் அப்படியே போய்ப் பெருமாள் ஸேவை நடக்கின்றது. இத்தகைய வேஷத்துடன் அச்சமின்றி வருபவர்களே எம்பெருமான் கண்ணெடுத்துப் பார்ப்பானு என்பது தெரியவில்லே. அரசாங்க ஆபீஸ்களிலோ கம்பெனிகளிலோ பணி புரிபவர்கள் பஞ்ச கச்சவுடை உடுத்திக் கொண்டு பன்னிரண்டு திருமண்களே அணிந்துகொண்டு சட்டை தரிக்காமல் தங்கள் அலுவலகங்களுக்குச் சென்ருல் உள்ளே புகவிடுவார்களா? அவ்வாறே உரிய உடையும் திருமண் காப்பு முதலிய சின்னங்களுமின்றி ஆலயத்தில் வழிபட வருமவர்களுக்குச் சட்டத்தால் தடையில்லே எனினும் பகவான் அவர்களேக் கடாக்ஷிப்பானு என்பதைச் சிந்திக்க வேண்டும். இவை அனைத்துக்கும் மேலாக நம் இனத்து இளைஞர் பலர் முகம்மதியர் அணிவதுபோல் கைலியையே அணிந்து கொண்டு தங்களே அவ்வினத்தராகக் காட்டிக் கொள்வதில் மகிழ்கின்றனர். எம்பெருமான் நேரில் வந்துதான் இவர்களுக்கு நற்புத்தி கூற வேண்டும். உடையுடுத்தலில் உள்ள சிக்கனம் பெண்கள் வகுப்பிலும் புகுந்து கொண்டது. திருமண ஸமயத்தில் உடுத்தும் கூறைச் சீலே ஒன்று தவிர மற்ற சீலேகளில் எல்லா வற்றிலும் சிக்கனம் வந்துவிட்டது. இதைப்பற்றி விரித்துரைக்கக் கூசுகின்றது.

## 8. உபநயநம்

உபநயநம் தொடங்கி ஸந்த்யாவந்தநம் பிடித்துக் கொள்ளுகிறது. பழய காலங்களில் ஏழாவது வயதில் உபநயநம் செய்வது ஸம்ப்ரதாயம். நாகரிகம் வளர வளர உபநயந வயதும் ஏறிக் கொண்டே போகிறது. இப்பொழுது இருபது வயதுக்கு மேல் ஏறிவிட்டது. பல இடங்களில் விவாஹத்தை நிச்சயம் செய்த பின் உபநயநம் சுருக்கமான முறையில் நடத்தப் பெறுவதையும் காண்கிறேம். இந்த மட்டிலாவது உபநயநம் நடக்கின்றதைக் கண்டு மகிழ வேண்டிய நிலே வந்துவிட்டது. 2 மணிகாலத்தில் உபநயநச் சடங்கை முடிக்க வேண்டிய நிர்பந்தத்தில் அகப்பட்டுக் கொண்ட பிருஹஸ்பதி ஸ்வாமியும் எல்லோருக்கும் முன் ஊருக்குப் புறப்பட வேண்டிய நிலேக்கு வந்துவிடுகின்றுர். பையன் தோளில் மூன்று புரி நூலே ஏற்றிவிட்டதோடு தன் கடமை தீர்ந்துவிட்ட திருப்தியில் உபநயநச் சடங்கும் மூட்டை கட்டிக் கொண்டு போய்ச் சேர்ந்தது. பின் பையனுக்கு ஸந்த்யாவந்தநத்தைப் பழக்கிக் கொள்ள வாய்ப்பு இல்லே. பெரும்பாலான பெற்றேர்கள் தங்கள் பையனுடைய நலனில் ஸந்த்யாவந்தநம் தவிர மற்ற நலன்களில்தாம் கண்ணும் கருத்துமாயுள்ளனர். ஐயோ! ஸந்த்யாவந்தநமே! உன் கதி இப்படியாஆயிற்று!!

## 9. ஸந்த்யாவந்தநம்

அந்தணர்கள் அவசியமாய் செய்தே தீர வேண்டியதாயுள்ளது ஸந்த்யாவந்தநம் என்பது. ஸந்த்யாவந்தநத்துக்கு முன்னும் பின்னும் அவசியம் செய்ய வேண்டியனவாய் விதிக்கப்பட்ட கடமைகளேப் பற்றி இக்காலத்து இளைஞர்களிடம் சிந்திப்பது பயனற்ற செயலாகும். ஸந்த்யாவந்தநமே ஊசலாடு

கின்றதே ! ஸந்த்யாவந்தநம் என்பது காலையிலும் மாலையிலும செய்ய வேண்டியிருப்பதுடன் நடுப்பகலில் செய்ய வேண்டிய மாத்யாஹ்நிகம் என்பதும் ஒன்று. இந்த மூன்றுள் ஒன்றை ஒரு பொழுதில விட்டாலும் பிராமணத் தன்மை கழிந்து விடுவதாய்ச் சாஸ்த்ரங்கள் ஒரு முகமாய முழங்குகின்றன. முற்காலத்துப பெரியோர்களும் இக்காலத்தில்கூட இரண்டொருவரும் ஆயிரத்தெட்டு முறை காயத்ரியை ஜபம் செய்வதுண்டு. இது நாமெல்லாம் நினைக்க முடியாததாகும். சிறுபான்மை 108 முறையும் பெரும்பாலும் 28 முறையும் காயத்ரியை அவரவர் சௌகரியப்படி செயவதுவே இப்பொழுது நடக்கும் முறை. ஆனால் இதனினும் குறைந்த வழியாக 10 முறை ஜபம் செய்வதையும சாஸ்த்ரம் விசேஷமான சூழ்நிலையில் அனுமதிக்கின்றது.

இப்பொழுது நாட்டில் அந்தண இளைஞர்களின் நிலையை நினைக்கும்போது உள்ளம் வெதும்புகின்றது. பற்பல இளைஞர்கள் ஆஸதிக புத்தியுடன் பகவானிடம் பக்தி கொள்கின்றனர். ஆனால் ஸந்த்யாவந்தநம் என்று ஒரு கடமை இருப்பதைச் சிந்திப்பதேயில்லை. சாஸ்த்ரங்களோ ஸந்த்யாவந்தநம் செய்யாதவனுக்கு மற்ற புண்ணியச் செயலெல்லாம் பயனற்றுப் போமென்றும் முழங்குகின்றன. ஒருவன் கோடிக் கணக்கில் செலவு செய்து பல தர்மங்களைச் செய்தாலும் அவன் ஸந்த்யாவந்தநத்தைக் கைவிட்டவனாயின் அவையனைத்தும் பயனற்றுப் போகுமாம். எம்பெருமான் அவன் செய்த தர்மங்களைப் பொருட்படுத்துவதில்லை; ஏற்றுக்கொள்வதில்லை, ஸந்த்யாவந்தநத்தைத் தவறாது செய்பவன் வேறு தர்மத்தைச் செய்யாவிடினும் அவன் உய்வதற்கு வழியுண்டு. பெற்றோர்களும் இளைஞர்களுக்கு ஸந்த்யாவந்தநத்தின் அவசியங்களைக் கூறித் தவறாது செய்யும்படி தூண்டுவதில்லை. உத்தியோகத்தில் உள்ள இளைஞர்களில் பெரும்பான்மையர் ஸந்த்யாவந்தநத்தைப் பற்றிய நினைவேயின்றி மற்ற புண்ணியச் செயல்களில் பொருள்களைச் செலவிடுகின்றனர். பயன் ஏதும் இல்லலையே! இப்போது காலம் போய்க்கொண்டிருக்கும் நிலையில் மற்றவற்றைச் செய்யாவிடினும் ஸந்த்யாவந்தநத்தை மட்டுமாவது விடாது செய்து வந்தால்-தான் தெய்வ தண்டனைக்குத் தப்பலாம். ஆலயங்களுக்குச் சென்று பகவானை ஸேவிக்காமலோ தர்ம காரியங்களைச் செய்யாமலோ இருந்துவிட்டால் அவற்றின் பலனைப் பெறாத குறையோடு நிற்கும். ஸந்த்யாவந்தநத்தை ஒரு பொழுது தவறினாலும் நரகம் முதலிய கடுந்தண்டனைகள் உண்டு. ஸந்த்யாவந்தநத்தை விட்டவன் தன் பெற்றோர்களுக்குச் சிராத்தம் முதலிய கடமைகளை மிகக சிரத்தையோடு பெருந்தொகை செலவிட்டுச் செய்தாலும் அவை பித்ருக்களுக்கோ அவர்களுக்கும் அந்தர்யாமியான எம்பெருமானுக்கோ சேர மாட்டா. பொருட் செலவும் தேகச் சிரமுமே அவற்றுக்குப்பயன். தனக்கு உள்ள காரிய மிகுதியில் ஸந்த்யாவந்தநம் செய்ய பொழுது கிடைப்பதில்லையென்று கூறுமவன் தன்னையே வஞ்சித்துக் கொள்பவனாவான். ஸந்த்யாவந்தநத்திற்காக 5 அல்லது 10 நிமிஷம் செலவழிக்கப் போகிறான். 108, 1008 காயத்ரியா ஜபம் செய்யப் போகிறான்? இந்தச் சிறு பொழுதைக் கூட அந்த முக்கியக் கடமைக்குக் கொடுக்க முடியாதவனைப் பற்றி அழுவதா சிரிப்பதா என்பது விளங்கவில்லை. ஆபீஸ் காரிய நெருக்கடியில் ஜல மலம் கழிக்கப் பொழுதில்லையென்று சொல்லுபவர் உண்டா? உணவு கொள்ள அவகாசமில்லையென்று கூற முடிகின்றதா? 'சாஸ்த்ரம் உண்டு, ஈச்வரன் உண்டு, புண்ய பாபங்கள் உண்டு' என்ற நம் பிக்கையுடைய அந்தணச் சிறுவர்கள் 3 வேளைகளுக்கும் சேர்த்து சுமார் 20 நிமிஷம் செலவிடுவதற்குப் பின் வாங்குவது நியாயமாகுமா? இந்தக் கடமையைத் தவறாது செய்தால்தான் பின் வரும் ஆபத்தினின்று தப்பிப் பிழைக்கலாமென்ற உறுதியுடன் செயல்படுத்து மாறு நல்லுரை கூறுகின்றோம். அவகாசம்கிடைக்காதவர்கள் காலையில் ஸந்த்யாவந்தநம் செய்தவுடனேயே நடுப்பகலில் செய்ய வேண்டிய மாத்யாஹ்நிகத்தையும் சேர்த்து செய்துவிட்டாவது லௌகிகக் கடமைகளைச் செய்வது நன்று.

## 10. விவாஹத்தின் கதி

பெண்வீட்டார் தங்கள் கிருஹத்திலேயே திருமணம் நடத்துவதென்ற ஸம்ப்ரதாயம் பெரும்பாலும் நீங்கி நெடுங்காலம் ஆகிவிட்டது. எங்காவது

கல்யாண மண்டபத்தை வாடகைக்குப் பேசிப் பிள்ளை வீட்டாரையும் அங்கு வரச்செய்து அதிகப் பொறுப்பின்றியே கடமையைச் செய்து முடித்துத் திருப்தி யடைவதே தற்கால முறை. பிள்ளை வீட்டாரை உபசரிப்பதில் சற்றுக் குறைவு ஏற்பட்டாலும் வந்த இடமாத வின் நேர்ந்த குறைகளைப் பொறுத்துக் கொள்ளும்படி பெண் வீட்டார் வேண்டிக் கொள்ளவும் அதற்குப் பிள்ளை வீட்டார் சற்று ஸமாதானம் அடைய வும் இதில் வாய்ப்பு உண்டு.

இந்நாளில் திருமண வைபவத்தில் முக்கியமான கடமையாய் விளங்குவன இரண்டு அம்சங்கள். ஒன்று போட்டோ எடுத்தல். மற்றொன்று தாலி கட்டியதும் நண்பர்கள் மணமகன் கை குலுக்கல். போட்டோ கிராபரின் ஆட்சிக்கும் அதி காரத்துக்கும் அகப்பட்டுத் தவிப்பவர்கள் முக்கியமாய் பிருஹஸ்பதி ஸ்வாமியும் அங்கு உள்ள சிறுபான்மையான வைதி கர்களுமே. பிருஹஸ்பதி மணமகனுக்கு அருகே நின்று மந்திரம் சொல்ல விடா மல் போட்டோ எடுப்பவர் கையில் காமி ராவுடன் நின்று அவரை அங்குமிங்கும் விலகச் சொல்லி வெருட்டும் காட்சி அந்தோ!! அப்பொழுது பிருஹஸ்பதி ஸ்வாமி கண்ணைக் கசக்கினுல் அது ஹோமப் புகை வீசியதன் விளைவன்று. படம் எடுப்பவரின் கையில் தவிப்பதனு லேயே வந்ததாகும். ஜானவாஸத்தில் தொடங்கும் போட்டோ வைபவம் மறு நாள் திருமணம் நடந்து படி கலையும் வரை தனது ஆட்சியைச் செலுத்தி முழு வெற்றியுடன் தலைகட்டப்பெறும்.

திருத்தாலி கட்டியாயிற்று. நாதசுரம் ஆநந்தத்தை ஒலிக்கத் தொடங்கு கின்றது. அந்தச் சமயத்தில் எலுமிச்சம் பழரஸம் சபையில் உள்ள அனைவருக்கும் கொடுத்தாக வேண்டுமென்று எந்த மஹர்ஷி எழுதி வைத்திருக்கிருரோ? பாத் திரத்தினின்று டம்ளரில் முகந்து அனை வருக்கும் கொடுத்துப் பருகச் செய்வது ஒரு நாகரிகம். உதட்டின் ஸம்பந்தத் தைப் பாத்திரம் பெற்ருல்தான் அதில் உள்ள ரஸம் இனிக்கும் என்பது ஒரு கொள்கை. ஒருவர் பருகியபின் அந்தப் பாத்திரத்தைக் கழுவிவிட்டு மற்றொரு வருக்குக் கொடுப்பது அநாகரிகமாகக் கருத்தப்படுகின்றது. எம்பெருமான் தான் துணை.

பின் கை குலுக்கும் வைபவம். மணமகன் தன்னுடையவும் மண மகளுடையவும் இல்லற வாழ்க்கை இனி தாக நடைபெறுவதற்காக எம்பெரு மானைப் பிரார்த்தித்து மந்திரங்களைச் சொல்லிச் செய்ய வேண்டிய ஹோ மத்தை நடத்த விடுவதில்லை நாகரிக நண்பர்கள். ஒவ்வொருவராய் வந்து மகிழ்ச்சியைக் காட்டிப் பரிசு கொடுத்து மணமகன் கையைக் குலுக்குவதும் அவர்களுக்கு மணமகன் நன்றியறிவித் தலுமாகிய வைபவம் எத்தகைய இடை யூறுமின்றிப் பரிபூரணமாய் நடைபெறு கின்றது. இப்படி ஹோமத்தின் இடத்தைக் கைகுலுக்கல் பிடித்துக் கொண்டது. அப்பொழுதெல்லாம் படி யிலேயே பிருஹஸ்பதி ஸ்வாமி இளைப் பாறுவார். இந்த நிகழ்ச்சி ஒருவாறு முடிந்து பிருஹஸ்பதி மந்திரத்தைச் சொல்லத் தொடங்கும்போது மணமகன் கைக்கடிகாரத்தைப் பார்ப்பான். பிரு ஹஸ்பதி இங்கிதம் அறிபவர். விரைவில் ஏதாவது வகையில் முடிக்க வேண்டிய சங்கடம் பிருஹஸ்பதிக்கு. மணமகனைக் கூட மந்திரம் சொல்ல எதிர் பார்க்க முடியாத சூழ்நிலை. பிருஹஸ்பதி ஸ்வாமி தாமே ஒருவாறு மந்திரங்களைச் சொல்லிக் கொண்டேபோய்த் தம் கடமையைச் செய்ததாய்த் திருப்தி பெற வேண்டிய நிர்பந்தம். ½ அல்லது 1 மணி காலத் துக்குள் கிருஹப்ரவேசம் வரை நடந்து படி கலைகின்றது. அடுத்து இரவிலேயே நடக்க வேண்டிய முகூர்த்தமும் பெரும்பாலும் அன்று இரவே ஏகாதசி பித்ருதினங்கள் முதலியவற்றை எல்லாம் பொருட்படுத்தாது நடந்து விடுகின்றது. இப்படி ஒரே நாளில் சில மணிக்குள் நடக்கும் வைபவங்களில் பொருட் செலவில் ஏதாவது குறைவு உண்டோ? ஐந்து நாள் நடக்கும் திருமணத்திற்கு ஆகும் செலவைப் போல் பன்மடங்கு அதிகமாகச் செலவிட்டுத்தான் ஒரு நாள் திருமணம் நடக்கிறது. நாள் குறைவு. செலவு அதிகம். மறு நாள் காலை மண்டபம் சூந்யம்.

கலியாணம் வந்தால் கிருஹத்தில் உள்ள பெருமாளுக்கு உபவாஸம். கலி யாண மண்டபங்களில் திருவாராதனமா நடக்கப் போகின்றது? அடுப்பில் பாகம் நடக்கும் போதே அவசரமாய் உண்டு செல்பவர் பலர். கலியாண மண்டபங் களில் இலைகளில் உண்டு எழுந்தபின் கிருஹங்களிற்போல் கோமயத்தையிட்டு உண்ட இடங்களைச் சுத்தம் செய்ய வேண்டிய சிரமம் இல்லாதது ஒரு

ஸௌகர்யம். பல கலியாண மண்டபங் களில் உண்ட பின் இலைகளை எடுத்துப் போட்டு நாகரிக முறையில் குஞ்சலம் கட்டிய மெல்லிய அலகுகளால் அந்த இடத்தைத் தடவிக் கொடுப்பதாலேயே தூய்மை பெற்றுவிடுவதான நம்பிக்கை இருப்பதும் ஒரு சௌகரியம் தானே! கிருஷ்ண! கிருஷ்ண!

## 11. பஞ்ச ஸம்ஸ்காரம் (ஸமாச்ரயணம்)

ஸ்ரீ வைஷ்ணவர்கள் எந்தச் சாதி யினராயினும் அவசியம் ஸமாச்ரயணம் செய்து கொண்டேயாக வேண்டும். ஒவ்வொருவரும் தம்மை எம்பெருமானைச் சேர்ந்தவராகவும் அவனுக்கு அடியார் களாகவும் எண்ணிக்கொண்ட போதிலும் எம்பெருமான் சின்னமாகிய திருவாழி யையும் திருச்சங்கையும் தோள்களிலே பொறிக்கப்பட்ட பின்பே எம்பெருமான் அவர்களைத் தன்னைச் சேர்ந்தவராகக் கருதுவான். ஸந்த்யாவந்தநம் செய்யா தவன் பிராமணனாக மாட்டாதது போல் இச்சின்னங்களைப் பெறாதவன் ஸ்ரீ வைஷ்ணவனாக மாட்டான். இச்சின்னங் கள் பொறிக்கப்படாதவன் க்ஷேமத்தை யடைய மாட்டானென்று வேதமும் ஓதுகின்றது. இந்தக் கடமையை ஓர் ஆசார்யனிடம் செய்து கொள்ள வேண் டும். அந்தணர்களுக்கு உபநயநத்திற்குப் பின்பும் அல்லதாருக்கு அவரவர் விருப் பப்படி இளமையிலும் செய்ய வேண்டிய சடங்கு இது. நம் இனத்தவர் தங்கள் பிள்ளைகளுக்கு உபநயநம் ஆனவுடன் இந்த வைபவத்தையும் அவசியம் செய்து வைக்கக் கடமையுடையர். தற்காலம் ஸ்ரீவைஷ்ணவ அந்தணர்களில் பல இளை ஞர்கள் இதைச் செய்து கொள்ளாம விருப்பது நமக்கு வெட்கத்தையும் வருத்தத்தையும் தருகின்றது. இந்தப் பெருமையைப் பெற்றபின்பே திரு மந்திரம்—த்வயம்—சரமசுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களையும் உபதேசிக்கப் பெறத் தகுதி பெறுகின்றனர். நம் ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்களை அவசியம் இந்தச் சிறப்பைப் பெறுமாறு கேட் டுக்கொள்கின்றோம்.

## 12. தற்காலப் பெண்களின் நிலை

நவ நாகரிகம் நம் ஆஸ்திகக் குடும்பங் களில் உள்ள பெண்களிடமும் வந்து சூழ்ந்து கொண்டுள்ளது. ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாகக் கல்வி நிலையங்கள் இருப்பினும் கூட்டுக் கல்வி முறையையே பல அறிஞர்களும் ஆதரிக் கின்றனர். கூட்டுக் கல்வியில் தொடங்கிய இருபாலரின் பழக்கம் படிப்படியாக நாளடைவில் வளர்ச்சிப் பெற்றுப் பெற்றோர்களுக்கு மணமகனைத் தேடும் கவலையும் திருமணச் செலவுமின்றி ஏகாந்தத் திருமணத்தில் கொண்டு போய்விடுவதையும் அவ்வாறே சில இடங்களில் நடப்பதையும் காண்கின் றோம். இதற்குமேல் இதைப் பற்றி விரிவாய்க் கூறுவது உசிதமன்று. ஒன்று இரண்டு அம்சங்களை மட்டும் கூற வேண்டியுள்ளது. பெண்களுக்கு மங்களச் சின்னமாக இரண்டு மூக்கிலும் அணிகள் தரிக்க வேண்டுமென்று சாஸ்த்ரம் கூறு வதுடன் தொன்று தொட்டு ஸம்ப்ர தாயமாகவும் அம்முறை நடந்து கொண் டிருந்தது. சில காலமாய் நவநாகரிகம் புகுந்து முதலில் ஒரு மூக்கின் அணியைப் பறித்துப் பின் மற்றொன்றையும் பறித்து இரு மூக்குகளையும் சூந்யமாக்கித் தாலி ஒன்றை மட்டுமே மங்களச் சின்னமாய் நிறுத்திவிட்டு வெற்றிக் கொடி நாட்டி விட்டது. மூக்குக்குச் சுமையை இப்படிக் குறைத்துவிட்டுக் கூந்தலுக்குப் பன் மடங்கு சுமையை ஏற்றிவிட்டது இந்த நாகரிகம். வட்டமாகவோ உருண்டை யாகவோ ஒரு சுமையை விலைக்கு வாங்கிக் கொடுத்துக் கூந்தலால் மூடி இயற்கை யலங்காரமாகக் காட்டிப் புரிந்த தனது ஆட்சியைத் தானே கண்டு மகிழ்கின்றது நவநாகரிகம். வயிரம்—பொன் இவற்றின் நினைக்க முடியாத விலையேற்றத்தைச் சிந்திக்கும் போது தற்காலத்து இளம் பெண்களின் செவிகள் தோடுகளையே மறந்து வட்ட வடிவமான கம்பிகளை ஏற்றுக் கொண்டதில் குறை கூறுவது தற்காலப் பொருளாதார நிலையை அறியாமையின் விளைவென நினைக்க இடம் தரும். இதற்குமேல் விவரிப்பது தகுதியன்று.

கிருஹங்களில் தலைவராயிருப்பவர் தளிகைகள் செய்து முடித்ததும் எம்பெருமானுக்குத் திருவாராதநம் செய்து அவனுக்கு அவற்றைச் ஸமர்ப்பித்துப் பிறகு எல்லோரும் உண்பதுவே சாஸ்த்ர விதியாகும். தற்காலத்தில் எத்தனையோ கிருஹங்களில் இத்தகைய திருவாராதநம் நடக்கின்றது? சிறுபான்மையான கிருஹங்களில் நடத்திவரும் புண்ணிய புருஷர்களைத் தலையால் வணங்குவோம். லௌகிக உத்யோகங்களில் இருப்பவர்களில் இலைகளில் உட்கார்ந்து ருசி கூடத் தெரிய இடமின்றி விரைவில் உணவை அள்ளிப் போட்டுக்கொண்டு தொழிலகத்துக்கு ஓடுமவர்களே பெரும்பான்மையர். பல இடங்களில் பெண்டிர்களே தளிகை முடிந்தவுடன் பெருமாள் ஸந்நிதியில் பதார்த்தங்களை வைத்து ஸேவித்து அவற்றை அமுது செய்யும்படி பிரார்த்தித்துப் பின் புருஷர்களுக்குப் பரிமாறும் நற்பழக்கம் நடந்து வருகின்றது. இதனால் ஓர் அளவுக்கு திருப்தி பெறலாம். எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்து அவன் ஸ்வீகரிப்பதால் ப்ரஸாதத்தின் ஒரு பகுதி குறையுமானால் அவனுக்கு ஸமர்ப்பிக்க எளிதில் மனம் வராது. இங்கு அவனுக்கு நிவேதநம் செய்வதால் வயலில் பன்மடங்கு தானியங்கள் செழித்து விளையுமே! திருமண வைபவங்களில் நடக்கும் ததீயாராதநங்களில் முதலில் பெருமாளுக்குத் திருவாராதநம் செய்து ஸமர்ப்பிப்பதென்பது நூற்றிலோ ஆயிரத்திலோ ஓர் இடமாகும். தளிகை நடந்து கொண்டிருக்கும்போதே பாகம் செய்பவர்கள் தாம் நல்ல பெயர் பெறுவதற்காக அடுப்பிலிருந்து ஒவ்வொன்றையும் எடுத்து 'உப்புப் போதுமா? புளிப்புப் போதுமா? தித்திப்பு அதிகமா?' என்றெல்லாம் முதலில் பரீக்ஷை பார்க்க வேண்டிய அவசியம் பெரும்பாலும் ஏற்பட்டிருக்கும் போது எம்பெருமானுக்கு அங்கு இடம் ஏது? எம்பெருமானுக்கு நிவேதநம் செய்யாமல் தங்கள் வயிற்றுக்காகவே சமைத்து உண்பவர்கள் பாபத்துக்குக் காரணமான பொருளையே உண்பதாகச் சாஸ்த்ரம் கூறும். இவற்றையெல்லாம் உள்ளத்துக் கொண்டு சுருக்கமான முறையிலாவது அவனுக்குத் திருவாராதநம் செய்து ஸமர்ப்பித்து உண்பதுவே நரகத்துக்குத் தப்பும் வழியாகும். ஆஹார ஸமயம் தவிர மற்றைப்பொழுதுகளில் எதாவது வஸ்துவை உண்ண நேரும்போதும் எம்பெருமானுக்கு மனத்தாலாவது ஸமர்ப்பித்து உண்பதுவேபுத்திமான்கள் செய்யும் நிபுணச் செயலாகும்.

## 14. காலத்தின் அருமை

காலம் ஒரு விலை மதிக்க முடியாத ஒன்றாகும். வேதத்தில் ஒரு புருஷனுக்கு கூறப்பட்ட வாழ்நாள் நூறு ஆண்டுகள். இந்தக் கலியுகத்தில் நூறு ஆண்டுகள் வாழ்பவர்கள் எத்தனை பேர்? அவரவர் கருமத்து எற்றவாறு சற்று முன்னும் பின்னுமாய்க் குறைந்த காலம் வாழ்பவரே பெரும்பான்மையர். வேதம் குறிப்பிட்ட காலமாகிய நூறு ஆண்டுகள் ஒருவன் வாழ்வதாகவே வைத்துக் கொள்வோம். அவன் காலம் எப்படிக் கழிகிறதென்று சிந்தியுங்கள். உறக்கத்தில் பாதி நாள் கழிந்துவிடும். எஞ்சிய ஐம்பது ஆண்டுகளில் வீணே கழியும் பருவங்கள் எத்தனை? கர்ப்பவாஸம் தொடங்கிக் குழந்தைப் பருவம் இளமைப்பருவம்—யௌவநப்பருவம்—நோய்களின் ஆட்சி—இந்திரியங்களுக்கு உணவூட்டல்—கிழப் பருவம்—பல கவலைகள்—பல கேளிகள்—பல கஷ்டங்கள் இப்படி எத்தனையோ வகைகளில் எஞ்சிய காலம் கழிந்துவிடுகின்றது. எம்பெருமான் கட்டளைப்படி கடமைகளைச் செய்யவோ மற்ற நற்பணிகளைச் செய்யவோ பொழுது இருக்குமா என்று சிந்தியுங்கள். நல்லெண்ணத்துடன் பெரு முயற்சி கொண்டு நற்கார்யத்தில் புகுவதானாலும் அதற்குக் கிடைக்கும் காலம் எவ்வளவு இருக்கும்? இவை அனைத்தையும் சிந்தித்துக் கிடைக்கும் சிறு பொழுதையாவது பாழ் செய்யாமல் நல்ல செயலில் பயன் படுத்துவது நிபுணச் செயலாகும்.

## 15. ஸாத்துவிகத் தியாகம்

எந்த நற்காரியத்தைச் செய்தாலும் அதைப் பக்தியுடன் எம்பெருமானிடம் ஸமர்பிப்பது முக்கியமான கடமை யாகும். இதில் ஏதாவது பொருட் செலவாவது தேகச் சிரமமாவது உண் டோ? உள்ளத்தால் செய்வதேயாகும். ஒரு காரியத்தைச் செய்தபின் ''கிருஷ் ணார்ப்பணம்' என்று உலகிலும் பலர் ஸமர்ப்பிப்பது வழக்கில் உண்டே! இதைச் செய்யும் முறையை மிக விரிவாகவும் எளிதாகவும் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்துள்ளார். 'ஸர்வேச்வரனான ஸ்ரீமந் நாராயணன் தனக்குச் சேஷனான அடியேனைக் கொண்டு தன் உடைமை யான கருவிகளைக் கொடுத்துத் தன் திருவுள்ளத்தின் உகப்புக்காகத் தன்னு டைய இந்தக்காரியத்தைத் தானே செய் விக்கின்றான்' என்று ஒரு செயலைத் தொடங்கும்போது அநுஸந்திக்க வேண் டும். அந்த நற்காரியம் முடிந்தபின் அந்த முறையையே பின்பற்றி எம்பெரு மான் தானே செய்வித்துக் கொண்டான் என்று இறந்த காலத்தை வைத்து அநு ஸந்திக்க வேண்டும். இதுவே ஸாத்து விகத் தியாகம் எனப்படும். இதைச் செய்வது காரியங்களின் நடுவில் நேரும் குறைகளுக்குப் பரிஹாரமு மாகும்.

## 16. முடிவுரை

இவ்வாறு எத்தனையோ அம்சங்கள் மேன்மேலும் எழுதிக் கொண்டே போக லாம். இதற்கு எல்லைதான் எது? கலி புருஷன் தன் முழு வல்லமையையும் காட்டிக்கொண்டு விளங்கும் இந்தச் சூழ் நிலையில் நாஸ்திகத் தன்மை ஒரு பக்கத் தில் தலையெடுத்துக் குதூகலிக்கும் இந்த சந்தர்ப்பத்தில் தெய்வ நம்பிக்கை— ஆசாரங்களில் சிரத்தை பகவத் பக்தி முதலியவற்றுடன் இயன்றவளவு தம் கடமைகளைச் செய்து வரும் சிலரை யாவது காண்பதைப் பாலைவனத்தில் அமுத நீர் பெற்றாற் போலே எண்ணி மகிழ வேண்டியது பெரியோர்களின் கடமையாகின்றது. எந்தச் சாதியில் பிறந்தவராயினும் தத்தம் சாதி வரை யறை மீறாது கடமைகளை இயன்ற வரை செய்து கொண்டு எம்பெருமானிடம் பக்தி கொண்டவராயின் அவர்களிடம் பெரு மதிப்பு கொண்டு நடந்து கொள் ளும்படி சாஸ்த்ரம் கட்டளையிடுகின்றது. பெற்றோர்கள் தங்கள் ஆண் பெண் குழந்தைகளை நன்கு கவனித்துத் தீய பழக்கங்களைக் கைக்கொள்ள விடாமல் கட்டுப்படுத்தி வந்தால் பிற்காலத்தில் தீய விளைவினால் மனம் கலங்காமல் இருக்க வழியுண்டு. நாம் நல்ல வழியில் இயன்ற வரை நடக்க முற்பட்டால் ஸர்வேச்வரனும் நமக்கு அநுகூலமான ஸங்கல்பத்தைச் செய்து காத்தருள்வான். 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்கிறபடி எல்லாச் செயல்களும் அவன் ஸங்கல்பப்படி நடப்பவையே என்ற பொது முறையைக் கொண்டு நாம் செய்யும் தீய செயலையும் அவன் தானே செய்விக்கிறான் என்று வேதாந் தம் பேசிக் கொண்டு அந்தச் சுமையை யும் ஈச்வரன் தலையிலே தள்ளி விட்டு அந்த நிலையில் ஒதுங்கித் தான் தப்ப முயல்வது கூடாது. சாஸ்த்ர முறை யுமன்று. நமக்கும் ஒரு சிறிய அளவுக்குச் சுதந்திரம் உண்டு. அந்தச் சுதந்திரமும் எம்பெருமான் கொடுத்ததே. ஆனால் நம் சிறு சுதந்திரத்தைக் கொண்டு தொடங்கும் செயல் நல்லதாயிருந்தால் அதற்கேற்றவாறு அவன் ஸங்கல்பித்துத் துணை புரிகின்றான். நாம் விபரீதச் செயலில் இறங்கினால் அதற்குத்தக்கவாறு விபரீத ஸங்கல்பம் கொண்டு அச்செய லிலேயே ஊக்கிக் கீழே தள்ளுகிறான். ஆதலின் அவன்மீதே சுமையைத் தள்ளி விட்டுத் தப்பிவிட முடியாது. இவ் வுண்மைகளை உள்ளத்துக் கொண்டு அவன் திருவடிகளை நம்பி நற்செயலிலே ஈடுபட்டு அவன் திருவருள் பெற்று நல் வாழ்வைப் பெறுவோமாக.

---

ஸ்ரீ:

## PREPARATION OF A SMALL BOOK FOR THE PURPOSE OF DAILY PRAYERS BY EACH SISHYA IN PRAISE OF HIS AACHARYA

It is no exageration to say that the Gnanam, Vairaagyam and Anushtaanam of Sri Ubhaya Ve. Vidwan, Siromani, Vidya Visaarada, Nyaya Vedanta Praveena, Sri Desika Darsana Dhurandara Vangeepuram Navaneetham Opiliyappankoil *Sriramadesikacharya* Swami is beyond description.

He is said to have thousands of Sishyas and so the Sishyas thought it fit to print a small book in regard to their own daily Anushtaanam.

This book is reproduced in full below so that the Sishyas belonging to other Aachaaryas can emulate this example. They are advised to buy a Students' Bound Note Book and copy out similar *prayers and directions with the help of any great scholar or Aacharya.*

Such a book should be preserved with extreme care and with Maha Visvaasam.

Then all shall be well with the Srivaishnavite World as a whole.

SARVE JANAAS SUKHINO BHAVANTHU I
LOKAASS SAMASTHAAS SUKIHINO BHAVANTHU I
SARVE BHADRAANI PASYANTHU I
SAMASTHA SANMANGALAANI SANTHU I
OM SAANTHIS SAANTHIS SANTHIHI I

*With prayerful greetings from: THE LIFCO PUBLISHERS, MADRAS*-600017.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

# முன்னுரை விண்ணப்பம்

அடியோம் பணிந்து செய்யும் விண்ணப்பம்

நம்மைப் போன்ற சேதநராசிகள் உஜ்ஜீவிப்பதற்கே அவதரித்ததாகக் கூறும்படி திருவிண்ணகர் என்னும் ஒப்பிலியப்பன் ஸந்நிதியில் ஜ்ஞாந வைராக்ய அநுஷ்டாந பக்தி சீலராய் எழுந்தருளியுள்ள நம் ஆசார்ய ஸ்வாமி ஸ்ரீதேசிக தர்சநம் தழைத்து ஓங்கும்படி ஸ்ரீ தேசிகனுடைய பிரபந்தங்கள்—ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்—ஸ்தோத்ரங்கள்—காவ்யங்கள்—சில்லரை ரகசியங்கள் முதலிய ஸ்ரீஸூக்திகளைப் பாமரர்களும் நன்கு உணர்ந்துகொள்ளுமாறு எளிய தமிழில் விரிவுரை விளக்கம் முதலியன வெளியிட்டு மஹோபகாரம் செய்தருளி வருவதை நாடு முழுதும் அறியும்.

ஸ்ரீஸ்வாமியின் வைதிக ஆசார அநுஷ்டாநங்களிலும் காருண்யம் ஸௌசீல்யம் வாத்ஸல்யம் ஸௌலப்யம் முதலிய திருக்குணங்களிலும் மிகவும் ஈடுபட்டுத் திருச்சி—சேலம்—தென்னாற்காடு—வட ஆற்காடு முதலிய மாவட்டங்களிலிருந்து ஆயிரக்கணக்கான ஆஸ்திகர்கள் ஸ்ரீஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்துப் பஞ்ச ஸம்ஸ்காரம் — பரந்யாஸம்—காலக்ஷேபம் முதலிய ஆத்ம கார்யங்களைச் செய்து கொண்டு நல்வாழ்வு பெறுகின்றனர்.

தினந்தோறும் அநுஸந்திப்பதற்கு நம் ஆசார்ய பரம்பரைத் தனியன்களும் ஏகாதசி முதலிய விரதங்களை அநுஷ்

டிக்கும் முறைகளும், ஆழ்வார் ஆசார்யர் திருநக்ஷத்திரங்களில் அருளிச்செயல் ஸேவாகாலம் சாத்துமுறை செய்யும் கிரமங்களும், பத்து நாள் உத்ஸவங்களில் அருளிச்செயல் நாலாயிரமும் ஸ்ரீதேசிகப் பிரபந்தமும் ஸேவிக்க வேண்டிய முறைகளும், திருநக்ஷத்திர காலங்களில் ஆசார்ய பரம்பரைக்கு ஸம்பாவனை செய்யும் முறைகளும் ஸ்ரீஸ்வாமி திருவடிகளைச் சார்ந்தவர்களின் ஸௌகர்யத்துக்காக இப்புத்தகத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

நம் ஸம்ப்ரதாயத்தில் தொன்று தொட்டு வரும் இந்த அம்சங்களெல்லாம் ஸ்ரீஸ்வாமி ஸந்நிதியில் விண்ணப்பம் செய்து ஸந்தேஹங்களைக் கேட்டுத் தெரிந்து அந்த நியமநம் பெற்றே இந்நூலை வெளியிடுகின்றோம். ஆசார அநுஷ்டான விஷயங்களில் மேலும் ஐயம் ஏதாவது ஏற்படின் ஸ்ரீஸ்வாமி ஸந்நிதிக்கு ஒரு கடிதத்தின் வாயிலாக விண்ணப்பம் செய்தால் மறுநாளே ஸ்ரீஸ்வாமி ஸந்நிதியிலிருந்து பதில் ஸ்ரீமுகம் எழுந்தருளி அந்த ஐயத்தைத் தீர்த்தருளும்.

இந்தக் கிரந்தத்தை ஸ்ரீஸ்வாமி திருவடிகளாயுள்ளவர்கள் பெற்றுப் பயன் பெறுவரேல், எங்கள் முயற்சி பலித்ததாக எண்ணி மகிழ்ந்து தந்யர்களாவோம்.

விரோதிகிருது—ஞு
புரட்டாசித்
திருவோணம்.

இங்ஙனம், அடியார்க்கடியோம்,
ஸ்ரீஸ்வாமி திருவடிகளான
சித்திரப்பட்டி,
**ராமஸ்வாமி தேசிகதாஸன்,**
சித்தேரி,
**பத்மநாப தேசிகதாஸன்**

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம :

---



ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

# (1) திருமண்காப்பு அணிந்ததும் அநுஸந்திக்க வேண்டியவை

| இடம் | திருமண் மந்திரம் | ஸ்ரீசூர்ண மந்திரம் |
|---|---|---|
| நெற்றி | கேசவாய நம: | ச்ரியை நம: |
| நடுவயிறு | நாராயணாய நம: | அம்ருதோத்பவாயை நம: |
| மார்பு | மாதவாய நம: | கமலாயை நம: |
| கழுத்துட்புறம் | கோவிந்தாய நம: | சந்த்ரஸோதர்யை நம: |
| வலவயிறு | விஷ்ணவே நம: | விஷ்ணுபத்ந்யை நம: |
| வலக்கை | மதுஸூதனாய நம: | வைஷ்ணவ்யை நம: |
| வலக்கழுத்து | த்ரிவிக்ரமாய நம: | வராரோஹாயை நம: |
| இடவயிறு | வாமனாய நம: | ஹரிவல்லபாயை நம: |
| இடக்கை | ஸ்ரீதராய நம: | சார்ங்கிண்யை நம: |
| இடக்கழுத்து | ஹ்ருஷீகேசாய நம: | தேவதேவ்யை நம: |
| அடிமுதுகு | பத்மநாபாய நம: | மஹாலக்ஷ்ம்யை நம: |
| பின் கழுத்து | தாமோதராய நம: | லோகஸுந்தர்யை நம: |
| சிரஸ் | வாஸுதேவாய நம: | ஸர்வாபீஷ்ட பலப்ரதாயை நம: |

1 அஸ்மத் குருப்யோநம: ।
2 அஸ்மத் பரமகுருப்யோ நம: ।
3 அஸ்மத் ஸர்வ குருப்யோ நம: ।
4 ஸ்ரீமதே வேதாந்த குரவே நம: ।
5 ஸ்ரீமதே ராமாநுஜாய நம : ।
6 ஸ்ரீமஹாபூர்ணய நம: ।
7 ஸ்ரீமத் யாமுன முனயே நம: ।
8 ஸ்ரீ ராம மிச்ராய நம: ।
9 ஸ்ரீ புண்டரீகாக்ஷாய நம : ।
10 ஸ்ரீமந் நாதமுனயே நம: ।
11 ஸ்ரீமதே சடகோபாய நம: ।
12 ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம: ।
13 ச்ரியை நம: ।
14 ஸ்ரீதராய நம: ।

அஸ்மத் தேசிகம் அஸ்மதீய பரமாசார்யாந் அசேஷாந் குரூந்
ஸ்ரீமல் லக்ஷ்மணயோகி புங்கவமஹாபூர்ணௌ முநிம் யாமுநம் ।
ராமம் பத்மவிலோசநம் முநிவரம் நாதம் சடத்வேஷிணம்
ஸேநேசம் ச்ரியம் இந்திரா ஸஹசரம் நாராயணம் ஸம்ச்ரயே ॥

---

என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவே அவர்குருக்கள் நிரை வணங்கிப்

பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி

நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்

இன்னமுதத் திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

---

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

# (2) ஒப்பிலியப்பன் ஸந்நிதி (திருவிண்ணகர்) நம் ஆசார்யஸ்வாமிகளின் திருவடிகளை ஆச்ரயிப்பவர்கள்

## அநுஸந்திக்கும் தனியன்கள்

1 ஸ்ரீக்ருஷ்ண ஸூரி குருவர்ய பதாப்ஜஸேவா—
லப்தாகமாந்த யுகளம் தநந்ய தைவம் ।
தத்பாதயோர் விநிஹிதாத்ம பரம் க்ஷமாப்திம்
ஸ்ரீராம தேசிக குருத்தமம் ஆச்ரயாம: ॥

2 ஸ்ரீமத் ஸ்ரீவாஸ ராமாநுஜ
முநி கருணாவாப்த வேதாந்தயுக்மம்
ஸ்ரீமத் ராமாநுஜார்யாம்புஜநிப
பதயோரர்ப்பித ஸ்வாத்மபாரம் ।
ஸ்ரீமத் வங்கீச வம்சாபரிமித
ஸுக்ருதஸ்ரீ மஹிம்நாऽவதீர்ணம்
ஸ்ரீக்ருஷ்ணார்யம் ப்ரபத்யே சரண
முருதயம் ஸ்ரீநிவாஸார்ய ஸூநும் ॥

3 ஸ்ரீமத் ஸ்ரீரங்கராமாநுஜ முநி
கருணா திவ்யகங்கா விஸர்ப்பத்
வீசீ நித்யாநு ஷங்கோல்லஸத்
உபயவிதாம்நாய சூடாரஹஸ்யம் ।
பர்யாப்தை: சாந்தி தாந்த்யாதிம குண
மணிபிர் திக்ஷு வித்யோதமாநம்
ஸ்ரீமத் ஸ்ரீவாஸராமாநுஜ முநி
மநகம் பாவயே பக்திநம்ர: ॥

4 ஸ்ரீரங்க லக்ஷ்மண முநி: ஸ்வக்ருத ப்ரபந்த
கூடார்த்த போதந க்ருதே ஸமபூத் யதாத்மா ।
வேதாந்த லக்ஷ்மண முநீந்த்ர பதாப்ஜ ப்ருங்கம்
ஸ்ரீரங்க லக்ஷ்மண முநிம் தமஹம் ப்ரபத்யே ॥

5 ச்ருத்யந்த ராமாவரஜௌ ப்ரபத்யே முநிசேகரௌ ।
கோபாலதேசிகம் வந்தே முநிம் வேதாந்தலக்ஷ்மணம் ॥

6 வந்தே ஸ்ரீரங்க நாதார்யம் ஸ்ரீரங்க பதிதேசிகம் ।
ஸ்ரீவீர ராகவாசார்யம் வேங்கடேசம் மஹாகுரும் ॥

7 ராமாநுஜம் அநந்தார்யம் தாதாசார்ய பராங்குசௌ ।
வரதாஹோபில மஹாதயாதீச குருத்தமாந் ॥

8 ஸ்ரீமத் வரத விஷ்ண்வார்யம் வாத்ஸ்யம் வரததேசிகம் ।
ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரார்யம் ஸ்ரீமத்வேதாந்ததேசிகம் ॥

9 வாதி ஹம்ஸாம்பு வாஹார்யம் ரங்கராஜ குருத்தமம் ।
ராமாநுஜார்யம் ஆத்ரேயம் ப்ரணதார்த்திஹரம் குரும் ॥

10 ஸ்ரீமல்லக்ஷ்மணயோகீந்த்ரம் ஸ்ரீபூர்ணம் யாமுநம் முநிம் ।
ஸ்ரீராம புண்டரீகாக்ஷௌ ஸ்ரீமந்நாத சடத்விஷௌ ॥

11 ஸேநேசலக்ஷ்மீ லக்ஷ்மீசாநபி யேஷாம் ப்ரஸாதத: ।
ரஹஸ்யத்ரயஸாரே மே ஸமுதஞ்சதி சேமுஷீ ॥

12 விகாஹே நிகமாந்தார்ய விஷ்ணுபாத ஸமுத்பவாம் ।
ரஹஸ்யத்ரய ஸாராக்யாம் த்ரிஸ்ரோதஸமகல்மஷாம் ॥

13 அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ।
ரஹஸ்யத்ரய ஸாராக்யம் பரம்ப்ரஹ்மாஸ்துமேஹ்ருதி ॥

14 சீரொன்று தூப்புல் திருவேங்கட முடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு

15 வைசாகே ரோஹிணீ ஜாதம் காச்யபாந்வயவாரிதே: ।
இந்தும் ஸ்ரீபுண்டரீகாம்சம் கோஷ்டீபூர்ணம் அஹம்பஜே ॥

---

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே க்ருஷ்ணார்ய மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ ராமானுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே கோபாலார்ய மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே பகவத் ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வகுளபூஷணாய நம:
ஸ்ரீமதே பூமிதேவீஸமேத ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

---

தினந்தோறும் காலையில் திருமந்திரம்—துவயம்—சரம சுலோகம் ஆகிய மூன்றையும் முடிந்தவரை ஜபம் செய்யவும்.

---

## ஒப்பிலியப்பன் ஸந்நிதி நம் ப்ராசார்யன் ஸ்ரீ க்ருஷ்ணார்ய மஹாதேசிகன் திருநக்ஷத்ரம் ஆடி மாதம் ஆயில்யம்

---

## நம் ஆசார்யன் ஸ்ரீ ராமதேசிகார்யமஹாதேசிகன் திருநக்ஷத்ரம் ஆடி மாதம் புனர்வஸு

---

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

# (3) விரதங்கள் அநுஷ்டிக்கும் முறை

மாதந்தோறும் ஆண்டுதோறும் வைஷ்ணவர்கள் அநுஷ்டிக்க வேண்டிய விரதங்கள் ஐந்து வகைப்படும். அவையாவன (1) ஏகாதசி (2) ச்ரவணத்வாதசி (3) ஸ்ரீராமநவமி (4) ஸ்ரீந்ருஸிம்ஹஜயந்தி (5) ஸ்ரீஜயந்தி என்பன.

புதுக்கோட்டை அல்லது ஸ்ரீரங்கம் பஞ்சாங்கத்தையே பின்பற்ற வேண்டும்.

(1) ஏகாதசி வ்ரதம்—விளக்கம்—மாதத்தில் இரு முறை வரும். பஞ்சாங்கத்தில் வைஷ்ணவ ஏகாதசி என்று பிரித்துப் போட்ட நாளிலும் பொதுவாய் ஸர்வ ஏகாதசி என்று போட்டிருக்கும் நாளிலும் நாம் ஏகாதசியை அநுஷ்டிக்க வேண்டும். ஏகாதசியன்று அன்னத்தை உண்ண விரும்புமவன் தன் பித்ருதேவர்களையும் சேர்த்துக் கொண்டு நரகத்தில் மூழ்குவதாகச் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆதலால் அன்று முழுதும் அன்னம் உண்ணுமல் சக்திக்குத் தக்கவாறு பலகாரங்களைச் செய்து திருவாராதநம் செய்து ஸ்வீகரித்துக் கொள்ளலாம்.

மறுநாள் த்வாதசி—காலையில் திருவாராதநம் செய்து 6 நாழிகைக்குள் பாரணை செய்வது விசேஷம். இரண்டொரு த்வாதசி பாரணை தினங்களில் பஞ்சாங்கத்தில் 'ஹரிவாஸரம்' என்று போட்டிருக்கும். அப்பொழுது மட்டும் எத்தனை நாழிகை ஹரிவாஸரம் போட்டிருக்கிறதோ, அந்த நாழிகைக் கழித்துத்தான் பாரணை செய்ய வேண்டும்.

(2) சிரவணத்வாதசி—வருஷத்துக்கு ஒருமுறை அபூர்வமாய் சிரவணத்வாதசி வரும். பங்சாங்கத்தில் முனித்ரய ச்ரவண த்வாதசி என்று போட்டிருக்கும். அதற்கு முதல் நாள் வழக்கம் போல் ஏகாதசி விரதம் இருந்து மறுநாளும் ஏகாதசி போலவே அன்னம் உண்ணுமல் பல காரம் மட்டும் செய்து கொண்டு 3வது நாள் காலை த்வாதசி மாதிரி பாரணை செய்ய வேண்டும்.

(3) ஸ்ரீராம நவமி—பஞ்சாங்கத்தில் பங்குனி அல்லது சித்திரை மாதத்தில் வைஷ்ணவ ஸ்ரீராம நவமி அல்லது முனித்ரய ஸ்ரீராமநவமி என்று போட்டிருக்கும். அன்று இராமபிரான் அவதரித்த திரு நன்னுள். ஏகாதசி போலவே அன்று முழுதும் அன்னம் உண்ணுமல் பலகாரமே செய்ய வேண்டும். பகல் 12 மணிக்குத் திருவாராதநம் செய்து, பழம்—சுண்டல்—பானகம்—நீர்மோர்-வெற்றிலைப் பாக்கு முதலிய உபசாரங்களை ஸமர்ப்பிக்க வேண்டும். திருவாராதன காலத்தில் பெருமாள் திருமொழி கடைசிப் பதிகம் 'அங்கணெடு மதிள்' என்று தொடங்கும் 11. பாசுரங்களையும் அநுஸந்திப்பது விசேஷம்.

ஸ்ரீராம நவமி விரதத்துக்கு மறுநாள் காலை துவாதசிபோலவே திருவாராதனம் செய்து பாரணை செய்ய வேண்டும்.

(4) ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஜயந்தி—நரசிங்கப் பெருமான் அவதரித்த திருநன்னாள். சித்திரை அல்லது வைகாசியில் வரும். அன்று முழுதும் ஏகாதசி போலவே அன்னம் உண்ணாமல் பலகாரம் மட்டுமே செய்ய வேண்டும். மாலை 6 மணிக்குச் சுண்டல்—பானகம்—நீர்மோர்—கனிவர்க்கங்கள்—வெற்றிலைப்பாக்கு முதலியவற்றுடன் திருவாராதநம் செய்ய வேண்டும். பெரிய திருமொழி 1-ம் பத்து 'அங்கண் ஞாலம்' என்று தொடங்கும் 7-வது பதிகத்தை ஸேவிப்பது விசேஷம்.

மறுநாள் காலை துவாதசி போலவே திருவாராதநம் செய்து பாரணை செய்ய வேண்டும்.

(5) ஸ்ரீஜயந்தி—பஞ்சாங்கத்தில் ஆவணி மாதத்தில் முனித்ரய ஸ்ரீஜயந்தி என்று போட்டிருக்கும் நாளே நமக்கு விரத தினமாகும். அன்று முழுதும் அன்னம் உண்ணக்கூடாது. பலகாரமே செய்து கொள்ளலாம். அன்று இராத்திரி 12 மணிக்கு மேல் போகாமல் 8 மணிக்கு மேல் ஸௌகர்யத்துக்கு ஏற்றகாலத்தில் திருவராதனம் செய்ய வேண்டும். கண்ணனுக்கு உகப்பான நாவற்பழம்—வெள்ளரிப் பிஞ்சு — மற்ற கனி வர்க்கங்கள்—வெண்ணெய் — வடை—அப்பம்—முறுக்கு—சீடை-எள்ளுண்டை—சிற்றுருண்டை முதலியவற்றை ஸமர்ப்பிப்பது விசேஷம். பெரியாழ்வார் திருமொழி 2-வது வண்ணமாடங்கள் பதிகம் தொடங்கி இயன்றவரை அநுஸந்திக்கலாம்.

ஸ்ரீஜயந்திக்கு மறுநாள் காலை துவாதசி போல் திருவாராதனம் செய்து பாரணை செய்ய வேண்டும்.

---

### (1) ஏகாதசி (2) ச்ரவணத்வாதசி (3) ஸ்ரீராமநவமி (4) ஸ்ரீந்ருஸிம்ஹ ஜயந்தி (5) ஸ்ரீஜயந்தி இந்த ஐவகை விரத தினங்களிலும் உள்ள வரையறைகள்:—

(1) அரிசியை உடைத்துக் களி—உப்புமா— தோசை—இட்டிலி—சப்பாத்தி—கஞ்சி—பால் முதலியவற்றில் இஷ்டமானதைப் பலகாரம் செய்யலாம்.

(2) ஷை நாள்களில் கத்தரிக்காய் சேர்க்கக் கூடாது.

(3) ஷை நாள்களில் சந்தனம் பூசிக் கொள்ளக் கூடாது. புஷ்பம் சூட்டிக் கொள்ளக் கூடாது. வெற்றிலை போடக் கூடாது. பெருமாள் பிரசாதமாயிருந்தாலும் அன்னத்தையோ சந்தனம் புஷ்பம் வெற்றிலை முதலியவற்றையோ தான் உபயோகிக்காமல் குழந்தைகளுக்கும் பசுவுக்கும் கொடுத்துவிடலாம். பக்தியுடன் வாங்கித் தனியிடத்தில் வைத்துவிடலாம்.

(4) ஷை தினங்களில் திருவாராதனம் செய்தபின் பெருமாள் தீர்த்தம் ஒரு முறைதான் எடுத்துக் கொள்ள வேண்டும். 3 தடவை கூடாது.

(5) ஷை தினங்களில் ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீகரிக்கக் கூடாது.

---

### ஷை விரத தினங்களுக்கு மறுநாள் பாரணைக்கு உள்ள வரையறைகள்:—

(1) பாரணைகளில் புளி சேர்க்கவே கூடாது. மோர்க் குழம்பு செய்யலாம். எலுமிச்சம் பழம் சேர்த்துக் கொள்ளலாம்.

(2) பாரணைகளில் கத்தரிக்காய் சேர்க்கவே கூடாது.

(3) அகத்திக்கீரை—சுண்டைவற்றல்—நெல்லிக்காய் இவற்றைப் பாரணைக்கு அவசியம் சேர்க்க வேண்டும்.

(4) பாரணை தினங்களில் ஞாயிற்றுக் கிழமை சேர்ந்தால் நெல்லிக்காய் சேர்க்கக் கூடாது. செவ்வாயோ வெள்ளியோ சேர்ந்தால் சுமங்கலிப் பெண்கள் மட்டும் நெல்லிக்காயை உபயோகிக்கக் கூடாது.

(5) பாரணை தினங்களில் பெருமாள் தீர்த்தம் 3 தடவை எடுத்துக் கொண்ட பிறகு ஆசார்யனுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை அவசியம் 3 தடவை எடுத்துக் கொள்ள வேண்டும். ஸ்ரீபாத தீர்த்தம் எடுத்துக் கொள்ள சுலோகம்—

"ஏதத் ஸமஸ்தபாபாநாம் ப்ராயச்சித்தம் மநீஷிபி: ।
நிர்ணீதமஸ்மதாசார்ய பாதோதக நிஷேவணம் ॥"

## சில பொது விதிகள்

(1) ஆசார்யனுடைய மாதத் திருநக்ஷத்ரங்கள், வர்ஷத் திருநக்ஷத்ரம், துவாதசி முதலிய பாரணை தினங்கள், அசுத்தி ஏதாவது தோன்றுதல்—இந்த ஸமயங்களில் அவசியம் ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீகரிக்க வேண்டும்.

(2) அமாவாஸ்யைகளில் கத்தரிக் காய் சேர்க்கக் கூடாது.

(3) தகப்பனை இழந்த ஆண்களும், விதவைகளும் அமாவாஸ்யைகளிலும் மாதப் பிறப்புக்களிலும் இரவில் அன்னம் உண்ணுமல் பலகாரமே செய்ய வேண்டும்.

(4) ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் இந்த ஐவகையான விரத தினங்களையும் அமாவாஸ்யை—மாதப்பிறப்பு—வருஷப்பிறப்பு—ஸங்க்ராந்தி முதலிய விரதங்களையும் தவிர வேறு ஸோமவாரம் சனிக்கிழமை முதலிய காம்யங்களான விரதங்களைக் கைக்கொள்ள வேண்டியதில்லை. அவைகளைக் கொள்வது நம் ஸ்வரூபத்துக்கும் ஏற்றதாகாது.

(5) ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் நேராக ஸரஸ்வதி பூஜையையோ, ஹயக்ரீவ ஆராதநமென்ற பெயரில் ஸரஸ்வதி பூஜையையோ செய்வதும் நம் ஸ்வரூபத்துக்கு ஏற்றதன்று. ஆனல் ஆவணி மாதம் திருவோணத்தன்று ஸ்ரீஹயக்ரீவன் திருநக்ஷத்திரத்தில் அருளிச் செயல்—ஸ்ரீதேசிக ஸூக்திகள் முதலிய கிரந்தங்களை அடுக்காக எழுந்தருளச் செய்து சந்தனம், புஷ்பம் முதலிய எல்லா உபசாரங்களும் ஸமர்ப்பித்து ஸரஸ்வதிக்கும் ஞானத்தை அருளிய ஸ்ரீ ஹயக்ரீவனை ஆராதித்து உத்ஸவமாகக் கொண்டாடுவது எம்பெருமானுக்கு உகந்ததும் நம் ஸ்வரூபத்துக்கு ஏற்றதுவுமாகும்.

(6) தச்சு—கொத்து முதலிய கைத்தொழிலைச் செய்யும் வைஷ்ணவர்கள் உலக வழக்கப்படி மஹாநவமியாகிய ஸரஸ்வதி பூஜையன்று எம்பெருமான் ஸந்நிதியில் கைத்தொழிற் கருவிகளை வைத்து அவற்றுக்குச் சந்தனம் முதலிய உபசாரங்களைச் செய்து ஆயுத பூஜை என்று உலக முறையில் கொண்டாடுவதில் தீங்கு ஏதுமில்லை. ஆனல் ஸரஸ்வதிக்கும் தெய்வமாகிய எம்பெருமானையே பரதேவதையாகக் கொண்ட உறுதி சிறிதும் பிறழாமல் வேறு தெய்வத்தின் தொடர்பு சிறிதும் இன்றி ஆயுத பூஜை நடத்துவதில் இடர்இல்லை.

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

---

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

# (4) திருநக்ஷத்ரங்களில் அருளிச் செயல் ஸேவிக்க வேண்டிய முறை

தனியன்— 1 ராமாநுஜதயா 5 பூதம் ஸரச்ச
2 லக்ஷ்மீநாத 6 குருமுகமந
3 யோநித்ய 7 மின்னர் தட
4 மாதாபிதா 8 பாண்டியன்

பல்லாண்டு பதிகம் 12.

(இருமுறை 1,2,11 பாசுரங்கள்)

தனியன்—1 தமேவ மத்வா 2 மண்டங்குடி.

திருப்பள்ளியெழுச்சி 10

(இருமுறை 1,9, 10 பாசுரங்கள்)

தனியன்—1 நீளாதுங்க 2 அன்னவயல் 3 சூடிக் கொடுத்த திருப்பாவை 28.

(இருமுறை—(1,3,16,18,23,24,27,28 பாசுரங்கள்)

காலையில் பொங்கல் தளிகை ஸமர்ப்பிப்பதாயிருந்தால் அமுது செய்வித்துவிட்டுத் திருப்பாவை 29, 30 பாசுரங்களை இருமுறை நின்று கொண்டு சாத்துமுறை செய்துவிட்டுக் கோஷ்டி விநியோகம் ஆனபிறகு மறுபடி 'ராமாநுஜதயா' தனியன் தொடங்கிப் பல்லாண்டுப் பதிகத்தில் முதல் கடைசிப் பாசுரங்களை மட்டும் ஸேவித்துவிட்டு மேலே ஸேவை நடத்தவும்.

திருப்பாவை சாத்துமுறை காலையில் தனியாகச் செய்யாவிட்டால் திருப்பாவை 28–வது பாசுரம் ஸேவை முடிந்தபின்பு—

தனியன் — 1 அவிதித விஷயா 2 வேறொன்றும்
கண்ணிநுண் சிறுத்தாம்பு – 11 பாசுரம்
தனியன் — 1 பக்தாம்ருதம் 4 ஏய்ந்த பெருங்
2 திருவழுதிநர் 5 வான் திகழும்
3 மனத்தாலும் 6 மிக்க இறை

## கோயில் திருவாய்மொழி

1. உயர்வற 11
2. வீடுமின் 11
3. கிளரொளி 11
4. ஒழிவில் கால 11
5. ஒன்றும் தேவு 11
6. ஆராவமுதே 11
7. நல்குரவும் 11
8. உலகமுண்ட 11
9. கங்குலும் 11
10. நெடுமாற்கு 11
11. மாலை நண்ணி 11
12. சூழ்விசும்பு 11
13. முனியேநான் 9

## இராமானுச நூற்றந்தாதி

தனியன்—1 முன்னை வினை 2 நயந்தரு 3 சொல்லின் தொகை
பூமன்னுமாது 1 முதல் செழுந்திரைப் 105 வரை

(இராமானுச நூற்றந்தாதி முழுதும் ஸேவிக்க அவகாசம் இல்லாதபோது பாசுரங்கள் 1, 2, 7, 11, 21, 31, 41, 51, 61, 71, 81, 91, 101, 105 ஆகியவற்றை மட்டும் ஸேவிப்பதும் உண்டு.)

## ஸ்ரீதேசிகப் பிரபந்தம்

தனியன்—சீரொன்று
'அதிகார சங்கிரகம் 54 பாசுரம்'
தனியன்— 1ஆரண நான்கின் 2 ஆதிமறை
பிரபந்தசாரம் 16 பாசரம்
தனியன்—சீரார் தூப்புல்
பிள்ளையந்தாதி 18 பாசுரம்.

(திருவயிந்திரபுரத்துக்குப் பக்கத்தில் உள்ளவர்கள் ஸ்ரீ தேசிகப் பிரபந்தத்தில் மும்மணிக்கோவை, நவமணிமாலை இவற்றையும் ஸேவிப்பது ஸம்ப்ரதாயம்.)

---

## சாத்துமுறை

தளிகை கண்டருளியபின் ஸ்ரீதேசிகனுக்குத் திருமாலை பரியட்டம் அருளிப்பாடு ஆனபிறகு கோஷ்டியாய் நின்று கொண்டு—

சிற்றஞ்சிறுகாலே 2 } காலையில் திருப்பாவை சாத்து
வங்கக் கடல் 2 } முறை ஆகாமலிருந்தால்

| | தடவை | | தடவை |
|---|---|---|---|
| 1 சூழ்ந்தகன்று | 2 | 11 பூமன்னு | 1 |
| 2 அவாவறச் | 2 | 12 பல்லாண்டு | 1 |
| 3 உயர்வற | 1 | 13 அடியோமோ | 1 |
| 4 வேறொன்றும் | 1 | 14 வானுளமர்ந் | 2 |
| 5 கண்ணிநுண் | 2 | 15 வெள்ளைப்பரி | 2 |
| 6 அன்பன்தன் | 2 | 16 வையகமெண் | 2 |
| 7 கண்ணிநுண் | 1 | 17 அந்தமிலா | 2 |
| 8 இருப்பிடம் | 2 | 18 தொண்டருகக் | 2 |
| 9 இன்புற்றசீ | 2 | 19 வடிவழகார் | 2 |
| 10 அங்கயல் | 2 | 20 மாமலர்மன் | 1 |

[ஆசார்யன் திருநக்ஷத்ரமாயிருந்தால் இந்த ஸமயத்தில் எம்பெருமான் தொடங்கி ஆசார்யன் வரை ஸம்பாவனை செய்துவிட்டுப் பின்பு வாழித் திருநாமம் அநுஸந்திக்க வேண்டும்.]

| | |
|---|---|
| ஸர்வதேச | வாழியிராமானுச |
| ராமாநுஜார் | வஞ்சப்பல |
| ஸ்ரீமந்ஸ்ரீரங் | நானிலமும் |
| நமோ ராமா | வாழியணி தூப் |
| ராமாநுஜ தயா | |

திருவோணமாயிருந்தால் 'வாதாசனவரர்' என்று தொடங்கும் நாள் பாட்டை அநுஸந்திக்கவும்.

[பெருமாள் தீர்த்தம் ஸ்ரீசடாரி கோஷ்டிக்கு ஆன பிறகு ஆசார்யன் திருநக்ஷத்ரமாயிருந்தால் ஆசார்யன் ஸ்ரீபாததீர்த்தம் தனியாக எடுக்க வேண்டும்.]

பின் கோஷ்டியாக உட்கார்ந்து ஸ்தோத்ர பாடம் ஸ்ரீதேசிகமங்களம் அநுஸந்திக்க வேண்டும்.

# (5) 10 நாள் உத்ஸவமானால் அருளிச்செயல் நாலாயிரமும் ஸ்ரீதேசிகப்பிரபந்தமும் ஸேவிக்கும் முறை

**1வது உத்ஸவம்**
பெரியாழ்வார் திருமொழி 1,2, பத்து
இயற்பா முதல் திருவந்தாதி
திருவாய்மொழி 1ம் பத்து
அமிருதரஞ்சனி

**2வது உத்ஸவம்**
பெரியாழ்வார் திருமொழி முடிய
இரண்டாம் திருவந்தாதி
திருவாய்மொழி 2ம் பத்து
அமிருதாசுவாதினி

**3வது உத்ஸவம்**
திருப்பாவை
நாச்சியார் திருமொழி
மூன்றாந் திருவந்தாதி
திருவாய்மொழி 3ம் பத்து
பரமபத சோபானம்

**4வது உத்ஸவம்**
பெருமாள் திருமொழி
திருமாலை
திருப்பள்ளியெழுச்சி
அமலனாதிபிரான்
கண்ணிநுண்சிறுத்தாம்பு
நான்முகன் திருவந்தாதி
திருவாய்மொழி 4ம் பத்து
பரமதபங்கம்

| | |
|---|---|
| 5வது உத்ஸவம் | பெரிய திருமொழி 1,2 பத்து<br>திருவிருத்தம்<br>திருவாய்மொழி 5ம் பத்து<br>மெய்விரதமான்மியம் |
| 6வது உத்ஸவம் | பெரிய திருமொழி 3,4 பத்து<br>திருவாசிரியம்<br>பெரிய திருவந்தாதி<br>திருவாய்மொழி 6ம் பத்து<br>அடைக்கலப் பத்து<br>அருத்த பங்சகம் |
| 7வது உத்ஸவம் | திருச்சந்த விருத்தம்<br>பெரிய திருமொழி 5.6 பத்து<br>திருவாய்மொழி 7ம் பத்து<br>ஸ்ரீ வைணவதினசரி<br>திருச்சின்னமாலை<br>பன்னிரு நாமம் |
| 8வது உத்ஸவம் | பெரிய திருமொழி 7, 8, 9, பத்து<br>திருவெழுகூற்றிருக்கை<br>திருவாய்மொழி 8ம் பத்து<br>திருமந்திரச் சுருக்கு<br>த்வயச் சுருக்கு<br>சரமசுலோகச் சுருக்கு<br>கீதார்த்த சங்கிரகம் |
| 9வது உத்ஸவம் | பெரிய திருமொழி 10, 11 பத்து<br>திருக்குறுந்தாண்டகம்<br>திருநெடுந்தாண்டகம்<br>திருவாய்மொழி 9ம் பத்து<br>மும்மணிக்கோவை<br>நவமணிமாலை |
| 10வது உத்ஸவம் | சிறிய திருமடல், பெரிய திருமடல்<br>திருவாய்மொழி 10ம் பத்து<br>இராமானுச நூற்றந்தாதி<br>அதிகார சங்கிரகம்<br>பிரபந்த சாரம்<br>பிள்ளையந்தாதி |
| விடாயாற்று உத்ஸவம் | பல்லாண்டு<br>கண்ணிநுண்<br>கங்குலும் பகலும்<br>அடைக்கலப் பத்து<br>பிள்ளையந்தாதி |

ஸ்ரீமதே ஸ்ரீராதேசிகார்ய மஹாதேசிகாய நம:

---

## (6) ஆசார்யபரம்பரை - ஸம்பாவனை செய்யும் முறை

*பிள்ளையந்தாதி சாத்துமுறை முடிந்ததும் 'ஸர்வதேசதசா' சொல்வதற்கு முன் ஸம்பாவனைகள் செய்யவேண்டும்.*

*ஒரு பெரிய தட்டில் இரண்டு தேங்காய், பழங்கள், புஷ்பம், வெற்றிலை பாக்கு வைத்து எடுத்துக்கொண்டு—*

## (1) பெருமாள்—பிராட்டி

'கண்ணன் கழலிணை நண்ணும் மன முடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே'.

திருவிண்ணகரப்பன் பூமிநாச்சியார் ஸம்பாவனை
பெரியபெருமாள் ஸ்ரீ ரங்கநாச்சியார் ஸம்பாவனை
அடியவர்க்கு மெய்யன் செங்கமல நாச்சியார் ஸம்பாவனை.

(அவரவர் ஊருக்கு அருகேயுள்ள பெருமாள் பிராட்டியைச் சொல்லிக்கொள்க)

## (2) ஆழ்வார்

''அருள்கொண்டாடு மடிய வரின்புற
அருளினனவ் வருமறையின் பொருள்
அருள் கொண்டாயிர மின்தமிழ்ப் பாடினன்
அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே.''

ப்ரபந்நஸந்தாந கூடஸ்த்தரான ஆழ்வார் ஸம்பாவனை.

## (3) எம்பெருமானார்

''ஆரணநூல் வழிச்செவ்வை அழித்திடுமைதுகர்க்கு ஓர்
வாரணமாயவர் வாதக்கதலிகள் மாய்த்த பிரான்
ஏரணிகீர்த்தி இராமானுசமுனி இன்னுரைசேர்
சீரணி சிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே''

தர்சநஸ்த்தாபகரான எம்பெருமானார் ஸம்பாவனை.

## (4) ஸ்ரீதேசிகன்

'அன்றிவ்வுலகினையாக்கி அரும்பொருள் நூல்விரித்து
நின்றுதன் நீள்புகழ் வேங்கடமாமலை மேவியும்பின்
வென்றிப்புகழ்த் திருவேங்கடநாதனெனும் குருவாய்
நின்று நிகழ்ந்து மண்மேல் நின்றநோய்கள் தவிர்த்தனனே'.

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்ய — ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய— ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம— ஸ்ரீ தூப்புல் நிகமாந்த மஹாதேசிகன் ஸம்பாவனை.

## (5) திருக்குடந்தை தேசிகன்

'வேதாந்தலக்ஷ்மணமுநி சரணம்புஜ ஷட்பதம் ।
கோபால தேசிகம்வந்தே சாந்திதாந்தி தயா நிதிம்' ॥

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்யாணும், உபய வேதாந்தாசார்யாணும், ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக ஸம்ப்ரவர்த்தித ஸத்ஸம்ப்ரதாய நிர்வஹண தூர்வஹாணும், ஜ்ஞாந வைராக்யாநுஷ்ட்டாந சேவதி ஸ்ரீமத் வேதாந்த ராமாநுஜ மஹா தேசிக திவ்ய கடாக்ஷ லப்த ஸார்வஜ்ஞ்யாநாம் ஸ்ரீமதாம் ஸ்ரீகோபாலார்ய மஹாதேசிகாநாம் ஸம்பாவநா.

## (6) கேதாண்டபட்டி ஸ்ரீமத் ஸ்வாமி

'வேதாந்த ராமாவரஜ பாதம்புஜ மதுவ்ரத: ।
ரங்கராமாநுஜமுநிர் ஜீயாதாசந்த்ர தாரகம்' ॥

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்யாணும், உபயவேதாந்தாசார்யாணும், பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யாணும், ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக

ஸம்ப்ரவர்த்தித ஸத்ஸம்ப்ரதாய நிர்வஹண துரர்வஹாரணும், ஸ்ரீமத் வேதாந்த ராமாநுஜ மகாதேசிக திவ்ய கடாக்ஷலப்த ஸார்வஜ்ஞ்யாநாம் ஸ்ரீமதாம் ஸ்ரீரங்கராமாநுஜமஹா தேசிகாநாம் ஸம்பாவநா.

## (7) திருவயிந்திரபுரம் ஸ்ரீமத் ஸ்வாமி

ரங்க ராமாநுஜ முநிக்ருபாத்தஜ்ஞாந ஸம்பதம் I
ஸ்ரீவாஸ லக்ஷ்மணமுநிம் வந்தே சாந்திபயோநிதிம் II

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்யாணும், உபய வேதாந்தாசார்யாணும் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யாணும் ஸ்ரீபகவத்ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம், ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகஸம்ப்ரவர்த்தித ஸத்ஸம்ப்ரதாய நிர்வஹண துரர்வஹாரணும், ஸ்ரீமத் ரங்கராமாநுஜ மஹாதேசிக திவ்ய கடாக்ஷலப்த ஸார்வஜ்ஞ்யாநாம் ஸ்ரீமதாம் ஸ்ரீநிவாஸ ராமாநுஜ மஹா தேசிகாநாம் ஸம்பாவநா.

## (8) திருவிண்ணகர் ப்ராசார்ய ஸ்வாமி

ஸ்ரீவாஸ ராமாவரஜ முநி பாதாப்ஜ ஷட்பத: I
ஸ்ரீ க்ருஷ்ணார்ய குரு: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேSஸ்து பூயஸே II

ஸ்ரீமத் வேதாமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்யாணும், உபய வேதாந்தாசார்யாணும், ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம், ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிக ஸம்ப்ரவர்த்தித ஸத்ஸம்ப்ரதாய நிர்வஹண துரர்வஹாரணும், ஸ்ரீமத் ஸ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேசிக திவ்ய கடாக்ஷலப்த ஸார்வஜ்ஞ்யாநாம் ஸ்ரீமதாம் ஸ்ரீக்ருஷ்ணார்ய மஹாதேசிகாநாம் ஸம்பாவநா.

## (9) திருவிண்ணகர் நம் ஆசார்ய ஸ்வாமி

ஸ்ரீ க்ருஷ்ண ஸூரி குருவர்ய பதாப்ஜ ஸேவா
லப்தாகமாந்த யுகளம் ததநந்ய தைவம் I
தத்பாதயோர் விநிஹிதாத்ம பரம் க்ஷமாப்திம்
ஸ்ரீ ராமதேசிக குருத்தம மாச்ராயம : II

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்ட்டாபநாசார்யாணும், உபய வேதாந்தாசார்யாணும், ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக ஸம்ப்ரவர்த்தித ஸத் ஸம்ப்ரதாய நிர்வஹண துரர்வஹாரணும், ஸ்ரீமத் க்ருஷ்ணார்ய மஹா தேசிக திவ்ய கடாக்ஷலப்த ஸார்வஜ்ஞ்யாநாம் ஸ்ரீமதாம் ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாநாம் ஸம்பாவநா

உபஹாரத் தட்டை மேடையில் வைத்து விட்டு 'ஸர்வதேச தசா' தொடங்கி வாழித் திருநாமம் அநுஸந்திக்கவும். இப்பொழுது பெருமாள் தீர்த்தம், ஸ்ரீபாத தீர்த்தம் எல்லாம் எடுக்கவேண்டும்.

ஸ்ரீமதே ஸ்ரீராமதேசிகார்ய மஹாதேசிகாய நம:

---

## THE ROLE OF AN ACHARYA

The role an Acharya plays is exceptionally good. He retrieves the embodied soul from the whirl of Samsara by revealing God and showing the right path to reach Him. Swaddled by ignorance the Jivatma suffers countless trials and tribulations. Enslaved by the mind that is swayed by the pulls of sensory organs, it gets deeply involved in the cycle of births and deaths helpless to break away from it. What the preceptor does is to impart knowledge about the Supreme Being explain the eternal relationship that exists between Him and the Jivatma, and educate one on the correct way to reach the Lord. This spiritual initiation brings solace to the tormented soul apart from the ultimate benefit of liberation. So, a person who has been fortunate to secure the guidance and belessing of an Acharya need have no doubt about his salvation. He cannot adequately re compense for the help his Guru renders. Anjaneya's part in Raamayyanam is generally compared to that of an Acharya, Sri Sita Herself representing the individual soul held captive by the mind (Ravana).

Sri Pattabhirama Dikshitar, in a discourse at the Aswamedha Maha Mandapam, West Mambalam, said it was significant that Anjaneya before setting out on his search mission, paid obeisance to Surya (Sun-God), from whom he learnt the Shastras, to Indra the chief of the Devas and Vayu, his own father. Before starting a venture it was always advisable to invoke the blessings of one's Guru and elders because their benediction would ensure victory.

29-3-1977 —*THE HINDU*

# ஜகத்குரு அருள் வாக்கு

### *எல்லோரும் இன்புற்றிருக்க ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அருளியது*

*தினசரி கோபுர தரிசனம் செய்து சற்று நேரமாவது கடவுளைத் தியானிக்க வேண்டும். வாரத்துக்கு ஒருமுறையாவது ஆலயங்களுக்குச் சென்று, நாம பாராயணமோ, பஜனைகளோ செய்ய வேண்டும். இப்படிச் செய்து வந்தால், சாசுவத நன்மைகளை அடையலாம்.*

*மனிதன் தன் தவறுகளை நினைத்துப் பார்க்கவேண்டும். அவற்றை உணர்வதே புண்ணியம். ஒருவன் நல்வழிப்பட்டால் அதுவே சமூகத்துக்குக் கௌரவம். நாட்டுக்கு நலம்.*

*வழிகள் பலவிதம். வாகனங்களும், பலவிதம். அநேக மதங்கள் ஏற்பட்டாலும் எல்லாம் ஒரே இடத்தில்தான் போய்ச் சேருகின்றன. ஆகையால் மதத்தின் பெயரால் சண்டைப் போடத் தேவையில்லை.*

* * *

*கஷ்டம் நம்முடன் கூடப் பிறந்தது போல் தோன்றுகிறது. கஷ்டம் என்ற பாரத்தை ஞானம் என்ற நீரில் அமிழ்த்தி அதன் பளுவைக் குறைக்க வேண்டும்.*

*நமது மதம் எக்காலத்துக்கும் மனித குலத்துக்கு நன்மை செய்து கொண்டிருக்கவேண்டும் என்று நாம் விரும்பினால் இந்த மதத்தைப் பின் பற்றும் நாம் நல்லொழுக்கமுடையவர்களாக இருக்கவேண்டும்; பக்திமான்களாக இருக்கவேண்டும்; நல்லவர்களாக இருக்க வேண்டும்: நமது சிந்தனையிலும் செயலிலும் வைதிக மதத்தின் கோட்பாடுகளை உறுதியாகத் தொடர்ந்து பின்பற்றி வரவேண்டும்.*

*உண்மைச் சோஷலிஸம் ஆடம்பர வாழ்க்கை முறையை தவிர்த்துச் சிக்கனமான வாழ்வை நடத்துவதன் மூலமே ஏற்படக்கூடும். வாழ்க்கை முறை எளிய அளவிலே இருப்பதுதான் எல்லாருக்கும் நலம். அப்போது எல்லாரும் இன்புற்றிருக்கத் தேசத்தில் போதிய செல்வம் இருக்கும்.*

நல்ல உயர்ந்த பண்பட்ட மனத்திலிருந்துதான் தன்னலமற்ற கடமையுணர்ச்சி தெய்வ பக்தி எல்லாரிடமும் அன்பு, நல்லெண்ணம் முதலிய நற்குணங்கள் பிறக்கின்றன. இந்த நற்குணங்களுக்குத்தான் பண்பாடு, கலாசாரம் என்று பெயர்.

ஆண்டவனுக்குப் படைக்காமல் வயிற்றுக்காக மட்டும் பொருள்களை நாம் உண்டால், நம்மை உயர்த்துவதற்குப் பதிலாக நாம் தாழ்ந்து விடுவதற்கு இவை வழி ஏற்படுத்திவிடும். நாம் ஆடம்பரங்களைவிட்டு, மிக்க அவசியமான தேவைகளுடன் மட்டும் நிறுத்திக்கொண்டு, கருணாமூர்த்தியான இறைவனின் பிரஸாதங்களாக இவற்றை நன்றியுடன் உபயோகிப்போமானால் நாம் வீழ்ச்சியுறுவது தடுக்கப்படுவதுடன் ஆன்மிக உயர்வு பெறலாம்.

சமய நெறிகள், குலாசாரங்கள் இவற்றின் உண்மைத் தத்துவங்களையும் பிரயோஜனங்களையும் உணர்ந்து, ஒவ்வொருவரும் தம் மதத்தின் தத்துவத்தை அனுபவத்தில் கொண்டு வருவதாலும், தம்முடையவும் தம் சமூகத்தினுடையவும் க்ஷேம நலன்களோடு பிற சமூகத்தினர் கஷ்டங்களைத் தீர்ப்பதையும் தம் முதற் கடமை என்று எண்ணி வந்தோமானால் இவற்றின் பேரால் ஏற்படும் பூசல்களும் சண்டைகளும் நீங்கி ஆத்ம க்ஷேமமும் சமூக நலனும் ஏற்படும்.

With grateful acknowledgments to :
MAADHA JOHIDAM-PINGALA PURATTASI ISSUE

---

## MINIMUM EXPENSES ON MARRIAGES: KANCHI ACHARYA'S CALL

An appeal to the public to reduce to the minimum the expenses on marriages was made by His Holiness Sri Jayendra Saraswathi of Kanchi, addressing the Lions Club of Salem Main here on Thursday. He said that there were hundreds of needy families, who were unable to perform the funeral rites due to poverty and voluntary organisations like Lions Clubs could give the lead in creating a fund for helping such needy people.

Mr. S. Duraisami, President of the Club, was in the chair.

—Our Staff Reporter.

—With grateful acknowledgments to THE HINDU, dated 25-7-1977

---

ஸ்ரீ ராமசந்த்ராய நம:

## அந்த நன்னாள் எந்நாளோ!

### கலியாணம், ஸீமந்தம்... செலவுகளைக் குறைத்திடுக

நம் வாழ்நாளில் நற்காலத்தைக் காணமுடியுமா ? என்று ஏங்குகின்றனர் பலர்! இக்காலமோ மக்கள் பணவெள்ளத்தில் நீந்தும் காலமாக இருக்கிறது! பணத்தை செலவிடுவதில் வரம்பே இல்லாமல் போய்விட்டதே ! ஆற்றில் கொட்டினாலும் அளந்து கொட்ட வேண்டும் என்ற பழமொழியும் மறைந்து விட்டதா? எந்தச் செயலிலும் ஆசாரமும் அக்கறையும் குறைந்துவிட்டனவே! பணம் ஒன்றுதான் கண்முன் நிற்கிறது! செல்வத்தைக் கொண்டே வாழ்க்கையை உயர்த்தி நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும் என்றால் செல்வம் நிலையானதன்றோ ! செல்வம் சரிந்தால் வாழ்க்கை என்னவாகும் ?

ஏழைப் பெற்றோர்கள் தம்தம் மகளுக்கு ஏராளமாகப் பணத்தைச் செலவிட்டுத் திருமணம் செய்து வைக்க முடியாமல் தவிக்கிறார்கள். தன் மகளுக்கு நல்லவரனைக் கிடைக்க வேண்டுமே என்று கவலை! வரன் கிடைத்ததும்

பணம் கிடைக்க வேண்டுமே என்று கவலை! இரண்டும் கிடைத்து விட்டால் கலியாணம் செய்ய நல்ல இடம் (கல்யாண மண்டபம்) கிடைக்குமா? என்று கவலை! கல்யாணம் செய்து கொடுத்த பிறந்தத் தன் மகள் புக்ககத்தில் துன்பமில்லாமல் வாழ வேண்டுமே என்று கவலை! பெற்றோர்களுக்கு ஏற்பட்டிருக்கும் இக்கவலை நீங்க வழியே இல்லையா?

பெண்ணுக்குத் திருமண வயது வந்தவுடன் திருமணத்தைச் செய்து வைத்துவிட வேண்டும். காலம் கடந்து விட்டால் பாலும் புளிப்பது போல் பிறந்தகத்து வாழ்க்கையே சிறை வாழ்க்கையாக மாறிவிடும். திருமணம் செய்து வைப்பதற்கு முன் பெண்ணின் மனப்பாங்கையும் அறிந்து செயல்படுவது மிகவும் முக்கியம்.

பெற்றோர்கள் தன் மகளுக்குக் கண்ணனின் பெருமைகளைக் கூறிக் கொண்டே இருந்தார்கள். நாளடைவில் மகள் கண்ணனின் அழகில் ஈடுபட்டு அவனையே மணாளனாகக் கொள்ள ஆசைப்பட்டாள். இது தாய் தந்தையருக்குத் தெரியவில்லை. கண்ணனோடு சேர்த்து வைக்கவில்லை. திருமணம் செய்து வைக்கவில்லை. மகள் கண்ணனிடம் சென்றுவிட முடிவு செய்தாள். தாய் தன் மகளுக்கு ஊரறிய, நாடறிய சிறந்த திருமணத்தைச் செய்து வைக்க ஆசைப்பட்டாள். அதுவும் தம் வீட்டிலேயே நடத்தவும் விரும்பினாள். ஆனால் பெண்ணின் முடிவு மாறவே இல்லை. தாய் உறவினர்களை அழைத்துப் பெண்ணின் நிலையைக் கூறினாள். ''மருத்துவன் பக்குவமறிந்து மருந்து செய்வது போல தாயும் மகளின் மனப்பாங்கை அறிந்து செயல்பட வேண்டும். மகளோ கண்ணனிடம் அன்பு கொண்டுள்ளாள். குல ஸம்பந்தமும் ஏற்றதாக இருக்கிறது! ஆதலால் இப்போதே உம் மகளைக் கண்ணனிடம் கொண்டு விடுங்கள்!'' என்று உறவினர் கூறினர். தாயும் 'ஒருப்படுத்திடுமின் இவளை உலகளந் தானிடைக்கே' என்றாள்.

பெருப்பெ ருத்தகண் ணாலங்கள்செய்து
பேணிநம் இல்லத் துள்ளே
இருத்துவா னெண்ணி நாமிருக்க
இவளுமொன் றெண்ணு கின்றாள்,
மருத்து வப்பதம் நீங்கினா
ளென்னும் வார்த்தை படுவதன்முன்,
ஒருப்ப டுத்திடு மின்இவளை
உலகளந் தானி டைக்கே.

—பெரியாழ்வார் திருமொழி 3—7—10

திருமணம் முதலிய சுப காரியங்களை ஆடம்ரபமாகச் செய்வதை மாற்றிக் கொள்ள வேண்டும். உறவினர்களாக இல்லாதவர்கள் எல்லோரையும் அழைக்கும் முறை மாற வேண்டும். திருமணக் காலத்தில் அவசியமில்லாத செலவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவற்றை நீக்கி வைதீக (காரியங்களுக்கு)ச் செலவுகளைத் தாராளமாக நடத்திவிட வேண்டும். திருமணத்தைத் தம்தம் இல்லங்களிலேயே நடத்திட வேண்டும். அதனால் கல்யாண மண்டபங்களுக்குக் கொடுக்கும் ஏராளமானப் பணம் மிச்சமாகும்! அவசியமற்ற கூட்டங்களையும் செலவையும் குறைத்தால் வீட்டிலேயே திருமணத்தை நடத்தலாம்!

தர்ப்பம், மாவிலை, அரிசி, நெய், ஸமித், அம்மி இவையே திருமணத்திற்குப் பயன்படும் பொருள்கள்! பெரியோர்கள் திருமணம் செய்யும் முறையை எப்படி அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள்! வைதீகச் செலவும் உணவுச் செலவும் சேர்ந்து கொள்ளுகின்றன! ஆதலால் பெற்றோர்கள் தம்சக்திக்கும் தகுதிக்கும் சேர உபநயனம், ஸீமந்தம், திருமணம் முதலிய காரியங்களைக் குறைந்த செலவிலேயே தத்தம் இல்லங்களில் நடத்த முற்பட வேண்டும்! இதுவே வீட்டிற்கும் நல்லது! நாட்டிற்கும் நல்லது! இவ்வாறு உலகம் திருந்தும் நாள் எந்நாளோ!

In this connection, we are giving below an extract from a Sreemukham (letter) received recently from a great gentleman :

*"...At last a Government Order has enforced a very necessary change which all of us very much wished to bring about but had not the courage to do so. The practice of posting more than a thousand invitations, the "Janu Vasam", Reception and the costly hire of a Kalyana Mantap are innovations of just about 3 decades. Some persons who wanted to show off started it and the rest followed suit. Honestly, the sending of invitations and the trouble and inconvenience of the invitees to respond, are very much in the nature of a burden which the host and the invitees would wish to be spared from. I wish Government Orders will be promulgated in this regard also as we dare not act on our own. Prior to about 1930, invitations were sent only to the closest relatives and friends in the village or town where the wedding was celebrated–and the place of this *sacrament* was the bride's residence and not a Kalyana Mantap......"

SRI RAMAJAYAM

## ABOUT THE SOULABHYAM OF GREAT PEOPLE

### About the Spiritual Aspect of the Hindu Weddings

That Dasaratha was the greatest of Emperors is well known.

Being a great Seer and a greater and most capable, devout, pious and sympathetic Ruler of peoples, he wanted that the people of Kaliyuga should realise that one must have **Soulabhyam** however high placed one may be and one must give the greatest IMPORTANCE TO THE MANTRAAS **of the wedding and that the wedding must be done with the least number of invitees.** Probably, to impress the present over-populated India about these aspects, Chakravarthy Dasaratha did **not** invite even Bharatha's maternal uncle for the wedding. But, this uncle when he came to *Ayodhya,* of his own accord, to see his nephew i.e., Bharatha, having heard that his wedding is taking place at *Mithila,* **even though there was no invitation to him,** he immediately rushed to Mithila where he was received with great honour and affection by Dasaratha. We also know that during Bharatha's regime of 14 years, people were all quite prosperous and quite devout. **These are all due to the maternal uncle's Soulabhyam and Aseervatham.** Thus, we are reproducing below Sarga 73 of Bala Kaandam in support of this statement and we appeal to our readers to do propaganda to conduct weddings inviting only closest relatives, **of course including maternal uncle or uncles,** and they can be sure that such a wedding shall be a grand success and **prices of all stuffs shall automatically come down.** That is to say, now-a-days, we are spending more on secular aspects of the weddings, viz., Janu Vaasam, Photography, Shaking of hands, Distribution of Cool Drinks, etc etc.

**அம்மான் ஆசீர்வாதம் பெரிய ரக்ஷை**

### பால காண்டம் ஸர்க்கம் 73

## ஸீதா விவாஹம்

யஸ்மிம்ஸ் து திவஸே ராஜா சக்ரே கோதாந முத்தமம் I
தஸ்மிம்ஸ்து திவஸே சூரோ யுதாஜித் ஸமுபேயிவாந் I I

எந்தத் தினத்தில் தசரதர் தன் செய்தாரோ அன்று கேகய ராஜ புத்திரர்களுக்கு விரத ஸமாவர்த்தனம் புத்திரனும் பரதனுக்கு மாமனுமான

---

* This was written about 2 years ago. Since then, we regret they say the control order has been rescended. (1-4-1978)

யுதாஜித் மிதிலைக்கு வந்து தசரதரைக் கண்டு க்ஷேமம் விசாரித்து, ''மகாராஜ! தாமும், இன்னும் யாருடைய க்ஷேமத்தைக் கோருகின்றீர்களோ, அவர்களும் ஸௌக்கிய மென்று கேகயாதிபதி வெகுப் பிரீதியுடன் தெரிவிக்கிறார். என் சகோதரியின் மகனைப் பார்க்க விரும்பி அயோத்யைக்கு வந்தேன். நீங்களெல்லோரும் விவாஹ காரியமாய் மிதிலைக்குப் போனதாகக் கேள்விப் பட்டு இங்கே மிக வேகமாக வந்தேன்'' என்றார். தனக்கு வெகு பிரியமான தன் மைத்துனனைக் கண்டு தசரதர் ஸந்தோஷித்துத் தகுந்தபடி உபசரித்தார்.

மறுநாட் காலை அவர் நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு பந்து பரிவார மந்திரி வர்க்கங்களுடன் மகரிஷிகளை முன்னிட்டுக் கொண்டு யாகசாலைக்குச் சமீபத்திலுள்ள விவாஹ மண்டபத்திற்குப் போனார். அவருடைய குமாரர்கள் விவாஹத்திற்குப் பூர்வாங்கமான வைதிக லௌகிக காரியங்களை முடித்து வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளை முன்னிட்டுத் தசரதருடைய ஸமீபத்தில் உட்கார்ந்தார்கள். பிறகு வஸிஷ்டர் ஜனகரிடத்தில் வந்து, ''ராஜசிரேஷ்ட! அயோத்தியாதிபதி தன் புத்திரர்களுக்கு ஸகல விவாஹ பூர்வாங்கங்களை முடித்து, கன்னியாதானம் செய்யும் உமது ஸௌகரியத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார். கொடுக்கிறவரும் பெற்றுக் கொள்கிறவரும் எவ்விதத்திலும் உத்தமமானவர்களாகையால் ஸகல க்ஷேமங்களுமுண்டாகும். இந்த சிலாக்கியமான விவாஹத்தைச் செய்து உமது வார்த்தையை நிறைவேற்றும்'' என்றார். உத்தம தர்மங்களை அறிந்தவரும், வெகு கம்பீர ஸ்வபாவமுள்ளவருமான ஜனகர் அதைக் கேட்டு, ''என் அரண்மனை வாசலில் தங்களைத் தடுக்கும் காவலாளர் யார்? இங்கே வருவதற்கு யாருடைய உத்தரவைக் கேட்க வேண்டும்? தங்களுடைய கிருஹத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கத் தடையென்ன? அயோத்யை உங்களுக்கு எவ்வளவு ஸ்வாதீனமோ அவ்வளவு இந்த மிதிலையும் ஸ்வாதீனமல்லவா? விவாஹ ஸம்பந்தமான ஸகல மங்கள காரியங்களையும் என் புத்திரிகளுக்குச் செய்து முடித்தேன். கொழுந்து விட்டெரியும் அக்னி ஜ்வாலைகளைப் போல் அவர்கள் ஸகல வஸ்திராபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு மங்கள வேஷத்துடன் அக்னி வேதிக்கு ஸமீபத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். நான் ஸித்தமாக இருக்கிறேன்! உங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அரண்மனையின் வாசலில் ஏன் தங்க வேண்டும்? கால தாமதமில்லாமல் வந்து விவாஹத்தை நடத்த வேண்டும்'' என்றார். தசரதர் புத்திர மித்திர பந்து மந்திரி புரோஹித மகரிஷி பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தில் பிரவேசித்தார்.

ஜனகர் அவர்களுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து ஆஸனம் கொடுத்து, ''வஸிஷ்டமஹரிஷே! ஸகல லோகங்களுக்கும் பரமானந்தத்தைக் கொடுக்கும் ராமனுடைய விவாஹ மஹோத்ஸவத்தை தர்மஸ்வரூபியான தாங்களும் மற்ற ரிஷிகளும் நடத்தும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்றார். வஸிஷ்டர் அப்படியே ஆகட்டுமென்று விசுவாமித்திரரையும் சதானந்தரையும் மற்ற மஹரிஷிகளையும் முன்னிட்டுக்கொண்டு விவாஹ மண்டபத்தின் நடுவில் விதிப்படி வேதியை அமைத்து, அதைச் சந்தனம், புஷ்பம், தங்கப் பாலிகைகள், கிண்டிகள், சங்கபாத்திரங்கள், முளைத்த விதைகளுள்ள மடக்குகள், தூபத்தால் நிறைந்த பாத்திரங்கள், ஸ்ருக், ஸ்ருவம், மஞ்சள் கலந்த அக்ஷதைகள், நெல் பொரிகளும் அர்க்கிய ஜலமும் நிறைந்த பாத்திரங்கள் முதலியவைகளால் அலங்கரித்தார். பிறகு அதன் மேல் ஒரே அளவுள்ள தர்ப்பங்களைப் பரப்பி மந்திரங்களுடன் அக்னிப் பிரதிஷ்டை செய்து தம்பதிகளின் க்ஷேமத்திற்காக ஹோமம் செய்தார்.

பிறகு ஜனக மஹாராஜா ஸர்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையை அக்னிக்கு ஸமீபத்தில் ராமனுக்கெதிரில் நிறுத்தி, கௌஸல்யையின் ஆனந்தத்தை விருத்தி செய்யும் ரகு வீரனைப் பார்த்து, ''இவள் பூமியிலிருந்து கிடைத்ததால் ஸீதை என்று பெயருள்ளவள். நான் வெகுப் பிரீதியுடன் இவளை என் பெண்ணாக வளர்த்து, ஸகல தர்மங்களையும் உபதேசித்திருக்கிறேன். நீ எந்த தர்மத்தை அனுஷ்டிக்க விரும்புகிறாயோ அதைத் தானும் கூட இருந்து அனுஷ்டிப்பாள். இவளை நான் உனக்குப் பார்யையாகக் கொடுக்கிறேன்; பெற்றுக்கொள். உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். உன் கையால் இவளுடைய கையைப் பிடி.

இவள் மஹா பதிவிரதையாக இருப்பாள். மஹா பாக்கியசாலி, உன் நிழலைப்போல் உன்னைவிட்டுப் பிரியாதவள்'' என்று மந்திரங்களால் பரிசுத்தமான ஜலத்தை அவருடைய கையில் வார்த்தார். அப்பொழுது தேவர்களும் மஹரிஷிகளும் 'நல்லது, நல்லது' என்று கொண்டாடினார்கள். தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. ஆகாசத்திலிருந்து புஷ்பமாமாரி பொழிந்தது. பிறகு ஜனகர், ''லக்ஷ்மணா! என்னால் கொடுக்கப்படும் ஊர்மிளையைக் காலதாமத மில்லாமல் பாணிக்கிரஹணம் செய்; உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்'' என்றார். பிறகு பரதனைப் பார்த்து, ''ரகுநந்தன! மாண்டவியை பாணிக்கிரஹணம் செய்'' என்றார். பிறகு சத்ருக்னனைப் பார்த்து, ''பராக்கிரம சாலியே! சுருதகீர்த்தியைப் பாணிக்கிரஹணம் செய். நீங்களெல்லோரும் பிரஹ்மசரிய விரதத்தைப் பூர்ணமாய் அனுஷ்டித்தவர்கள்; மதுரமான ஸ்வபாவமுள்ளவர்கள். கிருஹஸ்தாசிரமத்தை அனுஷ்டியுங்கள். காலதாமதம் வேண்டாம்'' என்றார்.

உடனே அந்த நான்கு ராஜ புத்திரர்களும் வஸிஷ்டருடைய அனுமதியால் அந்த நான்கு ராஜ புத்திரிகளைப் பாணிக்கிரஹணம் செய்தார்கள். பிறகு அவர்கள் அக்னியையும் ஜனகரையும் ரிஷிகளையும் பிரதக்ஷிணம் செய்து தங்களுடைய வைத்திரப்படித் தனியாய் அக்னிப் பிரதிஷ்டை செய்து விவாஹ ஹோமத்தை நடத்தினார்கள். அந்த ஸமயத்தில் தேவதைகள் புஷ்பமாரி பெய்தார்கள். துந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் மதுரமாய்ப் பாடினார்கள். மங்கள வாத்தியங்களை வாசித்தார்கள். ஆனந்தமாய் நர்த்தனம் செய்தார்கள். ரகுகுல சிரேஷ்டர்களான அந்த ராஜகுமாரர்களுடைய விவாஹ காலத்தில் இவ்விதமான ஆச்சர்யங்கள் நடந்தன. இப்படி வாத்திய கோஷங்களுடன் ராஜபுத்திரர்கள் அக்கினியை மூன்று தடவை பிரதக்ஷிணம் செய்து விவாஹ ஹோமத்தை முடித்து, பத்னிகளுடன் தங்களுடைய அரண்மனைக்குப் போனார்கள். தசரத மஹாராஜா தன் பந்து பரிவாரங்களோடும் மஹரிஷிகளோடும் அவர்களைப் பார்த்துக் கொண்டே ஆனந்தப் பரவசராய்ப் பின் சென்றார்.

அதோபகார்யாம் ஜக்முஸ் தே ஸபார்யா ரகு நந்தநா: ।
ராஜாப்யநுயயௌ பச்யந் ஸர்ஷிஸங்க: ஸபாந்தவ: ॥ (40)

---

விவாஹமாகாதவர்க்கு சீக்கிரம் விவாஹம் நடக்க மேற்படி பாலகாண்டம் 73—வது ஸர்க்கத்தை ஸ்ரீபரமேச்வரன் ஸ்ரீ பார்வதி தேவிக்கு உபதேசம் செய்திருப்பதாய் உமா ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ள கீழ்க்கண்ட முறைப்படி பாராயணம் செய்யவேண்டும்.

## உமா ஸம்ஹிதை ச்லோகம்

கந்யார்தீ ச வடு: கந்யாப்யநுரூப வரார்த்திநீ ।
ஸீதாவிவாஹ ஸர்கம் து படேத் ப்ராத: ப்ரயத்நத: ॥
க்ஷவ்யம் நிவேதயேத் க்ஷீரம் ஸத்யோ துக்தம் சுசிஸ்தலே ॥

கலியாணமாகாமலிருப்பது, கலியாண தம்பதிகள் மனக்கசப்பினால் பிரிந்திருப்பது, நியாயமான முறையில் வாழ்க்கைக்கு இன்றியமையாத சில சுகங்கள் கிட்டாமற்போவது போன்றவை நீங்கி, தம் கோரிக்கை பூர்த்தியாவதற்கு, ''ஸீதாகல்யாண'' கட்டமுள்ள பாலகாண்டம் 73—வது ஸர்க்கத்தைக் காலையில் பாராயணம் செய்யவேண்டும்.

நிவேதனம்: அப்போது கறந்த பசும்பால்.

## ஸங்கல்பம்

ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத்ஸமேத
ஸ்ரீ ராமசந்த்ர ப்ரபோ: ப்ரஸாதேந
....நாம்நயா: கந்யாயா:/....நாம்ந: வரஸ்ய
சீக்ரமேவ விவாஹஸித்யர்த்தம் ''ஸ்ரீஸீதா

விவாஹாத்மக'' ஸ்ரீமத் ராமாயணகட்ட
பாராயணம் அஹம் கரிஷ்யே I

என்று ஸங்கல்பம் செய்துகொண்டு பாராயணம் செய்யவேண்டும்.

[குறிப்பு: 'ஆஹார நியமத்திற்கும்' உணவு பண்டங்களின் விலை குறைவதற்கும் சம்பந்தமிருப்பதால், லோகமாதா ஸ்ரீ ஸீதா தேவியின விவாஹத்தை ஸர்வ லோக யோக க்ஷேமத்திற்காக் உள்ளம் உருகி ப்ரார்த்தித்து இங்கு சேர்த்துள்ளோம்.]

திரு ஆதனூர் திவ்ய தம்பதிகள்திருவடிகளே சரணம்.

3–10–1976 —லிப்கோ பதிப்பகத்தார்.

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும், நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையி னுல்வந் தெடுத்தளித்த
அருந்தவன், எங்கள் இராமா னுசனை அடைபவர்க்கே.

—இராமாநுச நூற்றந்தாதி–32

திருவரங்கத்தமுதனுர் திருவடிகளே சரணம்

## வரதட்சணை என்ருல் என்ன ?

''....நமது ஹிந்து மத நூல்களில் கல்யாண முறைகளைப் பற்றிச் சொல்லுகையில் எட்டு விதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

''இந்த எட்டு விதமான கல்யாண முறைகளிலும் வரதட்சிணை என்பதைப் பற்றிய பேச்சே கிடையாது. ஆர்ஷ: என்று சொல்லக்கூடிய விவாகத்திலும், ஆசுரம் என்று சொல்லக்கூடிய கல்யாண முறையிலும் வரனிடமிருந்து (கல்யாணம் செய்து கொள்ளப்போகும் பையனிடம் இருந்து) தனம், பொருள் முதலியவைகளைப் பெற்றுக் கொண்டு பெண்ணிற்கும், பெண் வீட்டாருக்கும் கொடுப்பது என்று கூறப்பட்டுள்ளது. பொதுவாக, வரதட்சிணை என்ற சொல் வரனிடமிருந்து பெண் வீட்டார் சிறிது தட்சிணை பெறுவது என்ற பொருளில் தான் குறிப்பிடப் பட்டிருக்கிறது. வரனுக்கு பணமோ பொருளோ கொடுத்து பெண் விவாகம் நடந்ததாக நமது மத நூல்களிலும் பழக்கத்திலும் இருந்ததில்லை. . . .''

—With grateful acknowledgments to 'Dinamani', 16—1—1973 (Extract)

---

# எழுபத்து நான்கு ஸிம்ஹாஸனுதிபதியர்

1. ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி அவர் குமாரர் என்னுச்சான் அவர் குமாரர் பிள்ளையப்பன்
2. பெரியநம்பி குமாரர் புண்டரீகர்
3. திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான்
4. திருமலையாண்டான் குமாரர் சுந்தரத் தோளுடையார்
5. பெரிய திருமலை நம்பி குமாரர் கந்தாடையாண்டான்
6. கூரத்தாழ்வான் குமாரர் பட்டர் சீராமப்பிள்ளை
7. முதலியாண்டான் குமாரர் கந்தாடையாண்டான்
8. நடுவிலாழ்வான்
9. கோமடத்தாழ்வான்
10. திருக்கோவலூராழ்வான்
11. திருமோகூராழ்வான்
12. பிள்ளைப் பிள்ளையாழ்வான்
13. நடாதூராழ்வான்
14. எங்களாழ்வான்
15. அநந்தாழ்வான்
16. மிளகாழ்வான்
17. நெய்யுண்டாழ்வான்
18. சேட்டலூர்ச்சிறியாழ்வான்
19. வேதாந்தியாழ்வான்
20. கோயில் ஆழ்வான்
21. உக்கலாழ்வான்
22. அரணபுரத்தாழ்வான்

23. எம்பார்
24. கிடாம்பியாச்சான்
25. கணியனூர் சிறியாச்சான்
26. ஈச்சம்பாடியாச்சான்
27. கொங்கிலாச்சான்
28. ஈச்சம்பாடி ஜீயர்
29. திருமலை நல்லான்
30. சட்டம்பிள்ளை ஜீயர்
31. திருவெள்ளரை ஜீயர்
32. ஆட்கொண்ட வில்லிஜீயர்
33. திருநகரிப்பிள்ளை
34. காரஞ்சி ஸோமயாஜியர்
35. அலங்கார வேங்கடவர்
36. நம்பி கருந்தேவர்
37. சிருப்பள்ளி தேவராஜ பட்டர்
38. பிள்ளையுரைந்தையுடையார்
39. திருக்குருகைப் பிரான் பிள்ளான்
40. பெரியகோவில் வள்ளலார்
41. ஆசூரிப்பெருமாள்
42. திருக்கண்ணபுரத்தாச்சான்
43. முனிப்பெருமாள்
44. அம்மங்கிப் பெருமாள்
45. மாருதியாண்டான்
46. மாறொருன்றில்லா மாருதியாண்டான்
47. ஸோமாஜியாண்டான்
48. ஜீயராண்டான்
49. ஈஸ்வராண்டான்
50. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்
51. பெரியாண்டான்
52. சிறியாண்டான்
53. குரிஞ்சிபுரம் சிறியாண்டான்
54. அம்மங்கியாண்டான்
55. ஆளவந்தாராண்டான்
56. அருளாப் பெருமாள் எம்பெருமானார்
57. தொண்டனூர் நம்பி
58. மருதூர் நம்பி
59. மழுவூர் நம்பி
60. திருக்குறுங்குடி நம்பி
61. குருவ நம்பி
62. முடும்பை நம்பி
63. வடுக நம்பி
64. வங்கிபுரத்து நம்பி
65. ஸ்ரீ பராங்குச நம்பி
66. அம்மங்கியம்மாள்
67. பருத்திக் கொல்லையம்மாள்
68. உக்கலம்மாள்
69. சொட்டையம்மாள்
70. முடும்பையம்மாள்
71. கொமாண்டூர் பிள்ளை
72. கொமாண்டூர் இளையவல்லி
73. கிடாம்பிப் பெருமாள்
74. ஆற்காட்டுப் பிள்ளான்

[குறிப்பு:—தென் ஆற்காடு ஜில்லா, திருவஹீந்திரபுரம் என்கிற திவ்ய தேசத்தில் ஒரு சிறிய மலை இருக்கிறது. அந்த மலையில் கருடன், வேணுகோபாலன், யோக ந்ருஸிம்ஹன், ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவர் ஸேவை தருகிறார்கள். இவர்களை ஸேவிக்க 74 படிக்கட்டுகளையும் 74 ஸிம்ஹாஸனாதிபதிகள் கட்டித் தந்ததாகச் சில பெரியவர்கள் சொல்லக் கேள்வி.]

(காட்டு மன்னார் கோயில் வீராணம் ஏரியையும் 74ஸிம்ஹாஸனாதிபதிகள் தான் கட்டினார்களாம். இந்த புனிதமான ஏரி ஜலம் என்று சென்னை வருமோ ! காட்டுமன்னார் கோயில் திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்.)

பிற்காலத்தில் ஸ்ரீ வைஷ்ணவ சமுதாயத்தை (எம்பெருமானார் தரிசனத்தை) காப்பாற்றி வருவதற்காக உடையவர் எழுபத்து நான்கு ஸிம்ஹாஸனாதிபதியரை நியமித்தார். இவர்களது பாதுகாப்பில் (ஸ்ரீ வைஷ்ணவம்) எம்பெருமானார் தரிசனம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

இந்த 74 ஸிம்ஹாஸனாதிபதிகளையும் ஸ்ரீ பெரும்பூதூரில் ஒரே ஸன்னிதியில் ஸேவிக்கலாம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம.

# Vadakalai Thenkalai Amity



(Mrs. Vishnu Priya Chariar, M.A.,B.Sc.)

திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தாதியில் 'இராமாநுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத்தாடும் இடம் அடியேனுக்கிருப்பிடமே' என்று

கூறி இராமாநுசன் திருவடிகளே சரணம் என்று இருக்கக்கூடிய ஸ்ரீவைஷ்ணவர் களின் பெருமையைப் பரக்கப் பேசி இருக்கிறார். நம் ஆசார்ய வள்ளலாகிய எம்பெருமானார், நாமெல்லோரும் உய்ய அருளிச் செய்த பிரபந்தாமிருதத்தில் இரண்டு முக்கியமான விஷயங்களைப் பற்றிக் கூறியிருக்கிறார். அவை அநவர தமும் த்வய மந்த்ரத்தை ஜபிப்பது கொள்ளத்தக்கது என்றும் பாகவத அபசாரம் என்பது விலக்க வேண்டியது என்பனவாகும். ப்ராதான சதகத்தில் ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் ''ஆநுகூல்யஸங் கல்ப ப்ராதிகூல்யவர்ஜனங்களிலே ப்ராதி கூல்யவர்ஜனமே பிரதானம்'' என்று ஸாதித்தருளியிருக்கிறபடி ஸ்ரீவைஷ்ண வர்கள் விலக்க வேண்டியதை முக்கிய மாகக் கவனிக்க வேண்டும். ஸ்ரீவைஷ்ண வர்கள் எல்லோரும் ஓர் குலம். எம் பெருமானுடைய பரத்வத்தில் முழு நம்பிக்கையுடன் அவனையே உபாயமாக வும், உபேயமாகவும் பற்றி நிற்பவன் ஸ்ரீ வைஷ்ணவன். அவர்களுக்குள் ''கலை'' பேதங்கள் ஆத்மா வரையில் ஸம்மந்தப்படக்கூடாது. நீறு பூத்த நெருப்பு போல எந்த ஸ்ரீ வைஷ்ணவன் எந்த அளவு ஆத்ம குணங்கள் நிறைந்த மஹனீயராக இருப்பாரோ நமக்குத் தெரியாது. இங்கனமிருக்க 'வடகலை தென்கலை' அன்பர்கள் தமக்குள் ஒருவரை யொருவர் குறைவாக நினைப்பதோ, பேசுவதோ நடத்துவதோ பெரிய அப சாரமாகும். ஒரு வைஷ்ணவனைக் கண் டால் இன்னொரு வைஷ்ணவன் தெண்ட னிட்டுக் கொள்வது சாஸ்த்ரவிகிதம். இப்படி வைஷ்ணவனுக்கு உயர்ந்த ஸ்தானம் தரப்பட்டிருக்கிறது.

இப்படியாயின் ஆசார்ய புருஷர் களைப் பற்றி சொல்ல வேண்டுவதில்லை. பிரபந்த பாரிஜாதத்தில் நடாதூர் அம்மாள் அவர்கள் ''ஆசார்ய புருஷர் கள். எம்பெருமானுடைய விபவாவ தாரங்கள்; அவர்களை ஸாமான்ய மனி தர்களாக நினைப்பது மகத்தான அபா சார மாகும்'' என்பதாலும் ''எம்பெரு மான் நவீன தசாவதாரங்களை செய் தருளி'' என்று ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் ஆழ்வாராதிகளைப் பற்றி குறிப்பதாலும் ஆசார்ய புருஷர்கள் எம்பெருமானே ஸ்வயம் அவதரித்ததாக நாம் கொள்ள வேண்டியது தெள்ளெனத் தெளிகிறது. ஸ்ரீமணவாள மாமுனிகள் தென்கலை அன்பர்களின் ஆசார்ய புருஷர். அவ ருடைய மகிமை சொற் சக்திக்கு அப் பாற்பட்டது. பாதுகாஸஹஸ்ரத்தின் முதல் ச்லோகத்தில்'' த்வத: ஸ்ரீரங்கப் ருத்வீச சரணத்ராண சேகரா: ஜயந்தி புவனத்ராண பத பங்கஜ ரேணவ:'' என்பதால் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் ஸ்ரீரங்க நாதனுடைய ஸ்ரீ சடாரியை சிரஸில் வகித்து உலகையே உய்யச் செய்கிறான் என்கிறது. அங்கனமாயின் ஸ்ரீ ரங்க நாதனே உகந்தருளி தனியன் ஸாதித்து தன் பக்கலிலேயே அநவரதமும் உய்யச் செய்த மாமுனிகளிடம் வடகலை அன் பர்கள் அபசாரப் படுவது பற்றி விளங்கக் கூற வேண்டிய அவசியமில்லை.

அதேபோல் பிரதிவாதி பயங்கரம் அண்ணன் தன் 'ஸப்ததி ரத்ன மாலிகா' வில் ஸ்ரீ ஸ்வாமி தேசிகனிடம் அபசாரப் படுபவர்களின் பக்கம் ஸ்ரீ ராமநுசரின் கருணை திரும்பாது; ஸ்ரீ ராமானுசரின் கருணையைப் பெறுதவன் நரக வாதனை யைப் பெறுகிறான் என்று ஸாதித்திருப்ப தால் ஸ்ரீ ஸ்வாமி தேசிகனிடம் அபசாரப் படுவதன் விளைவுகள் ஸ்வத: ஸித்தம். அவர்கள் இருவருமே எம்பெருமானின் ஸங்கல்பத்தால் குறிப்பிட்ட கைங்கர்ய விசேஷங்களுக்காக அவதாரம் செய்த மஹனீயர்கள். அவர்களைக் குறைத்து பேசுவதோ, அவர்களின் அருளிச் செயல் களைக் குறைத்து மதிப்பிடுவதோ, அவர்கள் அருளிச் செய்யாத கிரந்தங்களை அவர்கள் செய்ததாகக் கொள்வதோ மகத்தான அபசாரமாகும். ஸ்ரீ நம்மாழ் வாரின் 'அவரவர் தமதம தறிவறி வகை வகை' என்ற பாசுரத்திற்கிணங்க பிறப் பால் நமக்கு விதிக்கப்பட்டிருக்கும் ஸம்ப்ரதாயத்தைக் கடைப்பிடிப்பது நமது தர்மம். அது உயர்ந்த கடமை. அதை விடுத்து இதர ஸம்ப்ரதாயஸ் தர்களை தூஷிப்பது பாவமாகும். வட இந்திய மஹனீயர் நரஸிம்ம மேதா தன் பாடலில் ஸ்ரீ வைஷ்ணவரின் ஆத்ம குணங்களைப் பற்றி பரக்கப் பாடியிருக் கிறார். முக்கியமாக 'பரந்த நோக்கு' உள்ளவன் அப்படிப்பட்ட நல்லவரை தரிசிப்பது எழுபத்தொரு தலைமுறைகளை நரகமடையாமல் காப்பாற்றப் போது மானது என்கிறார். இத்யாதி காரணங் களால் வடகலை தென்கலை அன்பர்கள் இருவரும் பரஸ்பரம் ஒற்றுமை, சகோ தர வாஞ்சை, சிரத்தை இவைகளைக் கைக்கொண்டு ஒழுகுவது நம்மை மட்டும்

அல்லாது நம் பாரத வாசிகளையும் உய்யச் செய்வதாகும்.

மேலும் கோயில்கள் எந்த ஸம்ப்ரதாயத்தை ஒட்டியது என்பதில் தகராறுகள் இருந்து கொண்டே வருகின்றன. ஸரியோ தவறோ கோயில்களில் வடகலையோ அல்லது தென்கலையோ ஸம்பிரதாயத்தை ஏற்கனவே கைக்கொண்டுவிட்டார்கள். அதைப்பற்றி சண்டையிடுவதால் என்ன பிரயோஜனம்? பக்தர்களின் உளமார்ந்த 'ஆசாஸனத்தால்' 'கோவிந்தா' 'கோவிந்தா' என்று அரற்றுவதால் எம்பெருமானுக்கு ஸாந்நித்யம் உண்டாகிறது என்பது பெரியோர் கண்ட உண்மை. அவ்வாறாயின் வடகலை கோயில்களில் ஸ்ரீ மணவாள மாமுனிகளையும் தென்கலை கோயில்களில் ஸ்ரீ ஸ்வாமி தேசிகனையும் மங்களாசாஸனத்திற்கு அனுமதிக்காமல் இருப்பதன் நோக்கமென்ன? ஸாதாரண பக்தர்களின் மங்கள ஆசாஸனத்தால் எம்பெருமானுக்கு ஸாந்நித்யம் விருத்தியாகிறது என்றால் ஆசார்ய புருஷர்களின் மங்கள ஆசாஸனத்தின் மஹிமை சொல்லில் அடங்காது. ஸ்ரீ பராசர பட்டர் 'ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில்' "ஒரு நாய் நுழைந்துவிட்டதால் ஹோமங்கள் செய்து கோயிலைப் பரிசுத்தப்படுத்த பரிகாரம் தேடுகிறார்களே. நாயேனாகிய அடியேனின் கைங்கர்யத்தை ஸ்வீகரித்து வருகிறாயே இதைப்போக்க என்ன பிராயச்சித்தம் செய்வது" என்று நைச்யாநுஸந்தானம் செய்கிறார். இதுபோல ஸ்ரீ மணவாள மாமுனிகளோ அல்லது நிகமாந்த மஹாதேசிகனோ மங்களாசாஸனம் செய்தால் பிராயச்சித்தம் எதாவது தேவையா? நம் கொள்கைக்கான காரணம் வேறு என்ன? இதுவெல்லாம் நமக்கு மகத்தான அபசாரத்தைத் தேடித்தரும். ஆகவே ராமாநுஜ தாஸர்களாகிய நாம் இருகலையாரும் ஸஹோதரர்கள். ஆசார்ய புருஷர்கள் இருவரும் எம்பெருமானே. அவர்கள் இருகலை ஸம்ப்ரதாய கோயில்களில் மங்களாசாஸனம் செய்வது நமக்கு உயர்வைத்தரும். ஆகவே குறுகிய மனப்பான்மையைக் கைவிட்டு நாம் ஒற்றுமையுடன் அவரவர் ஸம்ப்ரதாயத்தைக் கொண்டு ஒழுகி வருவதே ராமானுசருடைய திருவுள்ளத்திற்கு உகப்பாகும்.

## AMITY BETWEEN VADAGALAIS & THENGALAIS

In these days, many are anxious. to put an end to caste differences. Speaking about Vaishnavites particularly, there is an age-long difference of opinion between Vadagalais and Thengalais. The irony of it is that most of them do not wear the respective Thirumanns and yet they are fighting wtith each other. It is still another irony that when a Vadagalai and a Thengalai fight with each other, if Vadagalai pays some money as a help to the Thengalai, the latter receives it without any objection ; so also if a Thengalai offers help to a Vadagalai, the latter takes advantage of it. In other words, there is no consistency, but there is every chance of our doing 'apachaaram' to both Acharyas. It should be very clearly noted that, supposing Sriman Nigamatha Maha Desika and Sri Periya Jeeyar were alive today, they will not tolerate such a difference and such a fight.

People, especially asthika-minded Vaishnavites, do know that when one dies, one's 'punyam' and 'paapam' alone accompany the soul; one can never carry any property with him when death comes. When such is the case, why should there be a fight at all? Why not we live like brothers? Why should we not allow both Paathrams to be uttered, with all humility and fervour in every Vaishnavite shrine, so that all our Acharyas i.e., those belonging to Thengalai and those belonging to Vadagala shall feel much pleased?

Vaishnavites should also make it a point to help the poor and the down-trodden as best as they can.

—V. K. Sarma.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



**உபய கலையாரும் பேதமின்றி பரஸ்பர ஒற்றுமையுடனும் மரியாதையுடனும் நடந்துகொண்டு அன்யோன்யமாக வாழ்ந்துவந்தால் உடையவர் திருவுள்ளத்துக்கு மிகவும் உகப்பாக இருக்கும்.**

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

''குழாங்களா யடியீருடன் கூடிநின் றுடுமினே.'' —நம்மாழ்வார்
''கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.'' —ஸ்ரீ ஆண்டாள்

''. . . . .மதத்தில் வடகலே, தென்கலே என்பது பல பெரிய பிரச்னேயில் கொண்டுபோய் உள்ளது. அப்பொழுது ஆழ்வார்கள் பாசுரங்களே மனதில் கொண்டு மனத்தை அடக்க வேண்டும். சில கோயில்களில் தேசிகர் உற்சவமும், மணவாளமாமுனி உற்சவமும் ஒன்ருய் நடக்கின்றன. ஆகவே, நீங்கள் யாவரும் ஒற்றுமையாய் கோயில் கைங்கரியத்தில் ஈடுபட்டு பகவானின் அருளேப் பெற வேண்டும்'' என்று ஸ்ரீ முஷ்ணத்தில் மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் கேட்டுக் கொண்டார்.

*14—6—1962*

இந்தக் கோரிக்கை ஈடேற ஸ்ரீ தேசிகனும் ஸ்ரீ மணவாள மாமுனிகளும் கருணை புரிவார்களாக. ஸ்ரீபெரும்பூதூர் வள்ளல் அநுக்ரஹம் பண்ணவேண்டும்.

—லிப்கோ பதிப்பகத்தார்.

ஸர்வேத்ர ஸுகிந: ஸந்து
ஸர்வே ஸந்து நிராமயா: ।
ஸர்வே பத்ராணி பச்யந்து
மா கச்சித் துக்கபாக் பவேத் ।।

இவ்வுலகிலுள்ள மக்கள் எல்லோருமே சுகமாக இருக்கட்டும்; எல்லோருமே நோயற்றவர்களாக இருக்கட்டும்; எல்லோருமே நன்மைகளேக் காணட்டும்; ஒருவரும் துன்பத்தை அடையவேண்டாம்.

## ஸ்ரீ முஷ்ணம் காட்டும் மதங்களின் ஒற்றுமை

தென் ஆற்காடு ஜில்லா, விருத்தாசலம் ஜங்ஷனிலிருந்து 12 மைல் தொலைவில் உள்ளது ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரம். இங்கு ஸ்ரீ பூவராஹமூர்த்தி எழுந்தருளியுள்ளார். இந்த கோயிலுக்குள் வடகலை தென்கலை பேதம் கிடையாது. இருவரும் தம்தம் 'பாதரங்களை' ஸேவிக்கலாம். மாத்வர்களும், ஸ்மார்த்தர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் கலந்து வேதபாராயணம் செய்கிறார்கள். மத்வமததைச் சேர்ந்த உத்தராதி மடம் ஸ்வாமிகள் எழுந்தருளினால் அவர் பூவராஹ மூர்த்திக்குப் பூஜை செய்யலாம். பஞ்சாங்கபடனம், ஸங்கீதம் முதலியவைகளை ஸ்மார்த்தர்கள் செய்து வருகிறார்கள். இப்படி அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்னும் மும்மதமும் இந்த ஸந்நிதியில் இருப்பதை ஆதர்சமாகக் கொண்டு, மற்ற கோயில்களிலும் பொது விஷயங்களில் மும்மதஸ்தர்களும் அன்போடு கலந்து ஆஸ்திகம் தழைப்பதற்கு முயற்சிப்பார்களாக!

[ஆதாரம்:—விருத்தாசலம் வக்கீல் ஸ்ரீ R. ஸ்ரீநிவாஸராகவாச்சாரியர் ஸ்வாமி பதிப்பித்த 'ஸ்ரீ முஷ்ண மாஹாத்மியம்' என்னும் நூல். (1973 Edn.) இந்த ஸ்வாமிக்கு மிகவும் க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறோம்.]

# PRAYER AND GOD

"More things are wrought by PRAYER than this world dreams of."
—*TENNYSON MORTE D'ARTHUR*

### Prayers do reach God

"Wireless makes many things easy to understand. Prayer, for instance We might have wondered how the voices or thoughts of thousands could possibly reach the Almighty. Yet, now the voice of one wafted through space reaches the thousands. The inversion of the miracle seems simple."
—*HERBERT ADAMS*

### Seven Reasons Why a Scientist Believes in God
(FROM A. CRESSY MORRISON'S Book
*'Man Does not Stand Alone'*!

1. By unwavering mathematical law we can prove that our universe was designed and executed by a great engineering intelligence.
2. The resourcefulness of life to accomplish its purpose is a manifestation of all-pervading Intelligence.
3. Animal wisdom speaks irressistibly of a good Creator who infused instinct into otherwise helpless little creatures.
4. Man has something more than animal-instinct—the power of reason.
5. Provision for all living is revealed in phenomena which we know to-day but which Darwin did not know–such as wonders of genes.
6. By the economy of nature, we are forced to realise that only infinite wisdom could have foreseen and prepared with such astute husbandry.
7. The fact that man can conceive the idea of God is in itself a unique proof.

ஸ்ரீ:

## பிறவிப் பெரும் பயன்

ஸர்வேச்வரன் மனிதனுக்குக் கண், வாய், கைகள், நாக்கு முதலிய புலன்களைப் படைத்தான். எதற்காக? அவனுடைய திருநாமங்களைப் பாடவும், அவனுடைய திருமேனி அழகைக் கண்டு களிநடனம் புரியவும்தான். மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் பகவானைப் பாடினார்கள். தெய்வத் திருப்பதிகள் தோறும் சென்று ஆர்ச்சாமூர்த்திகளின் அழகைக் குளிரக் கண்டு களிப்புற்று ஆனந்தக் கூத்தாடினார்கள். குறிப்பாக

திருமங்கையாழ்வார் தன் பெரிய திருமொழி 11–7–ல் (''நீணாகம்'' என்று ஆரம்பித்து 10 பாசுரங்கள்) ஒவ்வொரு அவயமும் செய்யவேண்டிய நற்பணியைத் தெளிவாகக் கூறுகிறார்.

பக்திக்காகவே, பெரும் பதவியைத் துறந்த குலசேகராழ்வார், இவ்வுலகத்தோர் உய்வதற்காக, விலை மதிக்க வொண்ணா முத்துக்கள் போன்ற 40 சுலோகங்கள் கொண்ட ''முகுந்த மாலை'' என்ற திவ்ய ஸ்தோத்ரத்தை அருளியிருக்கிறார். இதன் 16–வது சுலோகம் இங்கு காண்க:

''ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் சேதோ! பஜ ஶ்ரீதரம்
பாணித்வந்த்வ! ஸமர்சயாச்யுதகதா: ச்ரோத்ரத்வய! த்வம்ச்ருணு
க்ருஷ்ணம் லோகய லோசநத்வய! ஹரேர் கச்சாங்க்ரியுக்மாலயம்
ஜிக்ர க்ராண! முகுந்த பாததுலஸீம் மூர்த்தந்! நமாதோக்ஷஜம்! !''

மேற்படி சுலோகத்தின் பொருள்தான் என்ன?

''வாராய் நாக்கே! கேசவனை ஸ்தோத்திரம் செய்!
நெஞ்சே! முராசுரனைக் கொன்ற கண்ணனைத் தியானம் செய்!
கைகளே! திருமாலை ஆராதியுங்கள்!
காதுகளே தன்னையடைந்தவர்களை ஒருகாலும் நழுவ
விடாதவனான கண்ணனுடைய கதைகளைக் கேளுங்கள்!
கண்களே! கண்ணனைக் கண்டு அனுபவியுங்கள்!
கால்களே! எம்பெருமான் திருக்கோயிலுக்குச் செல்லுங்கள்!
மூக்கே! முகுந்தனுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்த துலஸியை நுகரு!
தலையே! எம்பெருமானை வணங்கு!''

என்றெல்லாம் ஆழ்வார்கள் அநுபவித்தார்கள்.

இவர்களுக்குப் பின்னுளர்களாய் தாஸ ஸம்ப்ரதாயத்தவர்களான புரந்தர தாஸர் போன்றோர் ''கண்களித்யாதகோ கஸ்தூரி ரங்கன நோடதே'' கஸ்தூரிரங்கனைப் பார்க்காத கண்கள் இருந்தென்ன பயன் என்ற வகையில் பாடினார்கள். இவருக்கும் பின் அவதரித்த த்யாகராஜ ஸ்வாமிகள், ''விருலசே பூஜிஞ்சனி கரமுலேலே'' ஜாஜி, சம்பகம், புன்னாகம், இருவாக்ஷி, இப்பேர்ப்பட்டதான உயர்ந்த ஜாதி புஷ்பங்களால் பகவானை அர்ச்சிக்காத கைகள் என்ன கைகள் என்றார். மற்றுமோர் கவி ''ராகவனைக் காணாத கண்ணையும் கண் என்றால் புண்என்பதெதுவோ அறியேன்'' என்றார்.

எனவே, நம் அவயவங்கள் ஸர்வேச்வரனுடைய கல்யாண குணங்களை அனுபவிப்பதற்கும், அர்ச்சாவதார மூர்த்திகளின் கைங்கர்யத்திற்கும் பயன் படுத்துவோமாக.

## 1. THE NEW PRIME MINISTER

Sir, For the first time in the history of independent India we got a Prime Minister who wants blessings from God and the people of India. It is the duty of us all to pray to God to bless him with long life and strength to lead India on the path of progress.

Snehlata Goyal,
Trivandrum.

With grateful acknowledgments to The HINDU—Letters to Editor Colunns, dated 29-3-1977.

## 2. FAITH IN GOD

"....The reason for the decisions I made and the risks I took so easily was that from my childhood I had an unshakable faith in God. Till I was 25-27 years old this faith was instinctive, but after that it got strengthened because of my life's experiences. From these I was convinced that no one can stop what happens according to the laws of God. The things that happen to one are the results of one's past actions. A

man has to undergo what has been determined by his past actions. A man who faces his task gladly should not make any attempt to escape difficulties. If a man has faith in God, he can remain cheerful and peaceful even in the most difficult circumstances. As a result of this he gets additional strength and his life becomes richer. He also gets inspiration to be useful to others."

—From Morarji Desai's "The Story of My Life" (Preface)

—With grateful acknowledgments to The "HINDU"

## Morarji & "HAND OF GOD"

Story Behind Choice of New Prime Minister—By Inder Jit.

"....He, therefore, refused to do anything in regard to the leadership issue, cooly telling his supporters and admirers: "Well, God wanted me to lead my party in the poll battle and I did so with His blessings. If HE now wants me to lead the Government, His will be done..."Notwithstanding the tension and excitemement outside, Morarjibhai is going ahead with his task *with a spirit of humility, dedication* and what is more *'an unshakable faith in God*". He is particularly anxious to establish healthy conventions ........

—Extracts—With grateful acknowledgments to The MAIL.

## GOD NEVER OVERLOOKS A MISTAKE

"The Chess board is the World, the pieces are the phenomena of the universe, the rules of the game are what we call the Laws of Nature. The Player on the other side is hidden from us. We know that HIS play is always, *fair, just and patient*. But also we know, to our cost, that *He never overlooks a mistake or makes the smallest allows for ingnorance.*"

—by HUXLE

NOTE: Note, if a Baktha, sincerely repents for his past sins and begs of Him for forgiveness, and behaves in the rightful path from then on, He is ready to excuse us. And so, SRI HARIHI SARANAM NAHA. SRI RAMAHA SARANAM MAMA.

Rama, the ancient idol of the heroic ages, the embodiment of truth, of morality, the ideal son, the ideal husband, the ideal father, and above all, the ideal king, this Rama has been presented before us by the great sage Valmiki.

—Swami Vivekananda.

**"Rama lore and Krishna lore are the two great axes around which the life of the Indian people, particularly the life of our village folk, has been revolving all through the centuries."**

—Dr. Rajendra Prasad.

With grateful acknowledgments to The Bhavan's journal issue dated 14—8—1977.

## மரக்கறியின் மேன்மை

உணவுவகைகளில் மரக்கறி உணவே கொள்ளத்தக்கது என்றும் அல்லாத உணவுகள் தள்ளத்தக்கவை என்றும் நம்பெரியோர் நிர்ணயம் செய்துள்ளனர்

நாம் உட்கொள்ளும் உணவு உடல் வளர்ச்சியை மட்டும் உத்தேசித்து நிர்ணயிக்கப்பட்டதன்று. ஒருவனின் நற்பண்புக்கும், ஆன்மீக வளர்ச்சிக்கும் தார்மீக சிந்தனைக்கும் அவன் உட்கொள்ளும் உணவேதான் முக்கிய காரணமாகும். மற்ற உணவுகள் உடல் வளர்ச்சிக்கு உதவுவதாக இருக்கலாம். ஆனால் ஆன்மீக வளர்ச்சிக்கு அது

ஒருபோதும் உதவாது. மரக்கறி உணவு உட்கொள்வோர் பலமற்றவர் என்பது சிலர் கருத்து. மரக்கறி உணவுக்கு நிகரான, ஏன் அதற்கும் மேலான சத்து மரக்கறி உணவுகளிலேயே கிடைக்கும் என்பது அனுபவபூர்வமான உண்மை. சாஸ்திர ரீதியாக மட்டுமின்றி சுகாதார ரீதியிலும் நோக்கின், மரக்கறி உணவே சிறந்ததாகும். எங்ஙனெனில், மரக்கறி உணவு உண்பவர்களைவிட மற்ற உணவை உட்கொள்ளுபவர்களே நோய் நொடிகளுக்கு எளிதில் இலக்காகிறார்கள் என்பது புள்ளி விவரங்களுடன் நிரூபிக்கப்பட்டுள்ளது.

மரக்கறி உணவுகளிலும் கொள்ளத் தக்கதை உண்டு, ஸத்வ குணத்தை விருத்தி செய்து, கருத்துக்களை நன்னெறிகளில் செலுத்தி ஸத்வகுண ஸம்பன்னார் களாக விளங்குவோமாக.

# POPULARISATION OF VEGETARIANISM SUGGESTED

MADRAS, July 18: Mr. V. Karthikeyan, Chief Secretary to the Government, urged members of the Bhagwan Mahaveer Ahimsa Prachar Sangh to popularise vegetarianism by continuous propaganda.

Inaugurating the afternoon session of the Jeevakarunya conference yesterday, organised by the Sangh he wanted the members to create the necessary awarness among the masses.

Mr. M. Bhaktavatsalam, former Chief Minister, praised the good work done by the Sangh.

Mr. Ravi Shankar Maharaj, a close associate of Gandhiji, advised people to follow the path of non-violence.

The conference adopted resolutions urging the State Government to drop the proposal to construct a modern slaughter house in Koduvalli village near Red Hills and requesting the Central Government to amend the prevention of Cruelty Act of 1960 so as to make it more effective by inclusion of the services of social workers and to prevent cruelty to animals and birds while they were transported particularly for export.

The Sangh requested the Government to arrange to hand over aged cows to the Mahaveera Ahimsa Prachar Sangh for maintenance at a nominal price instead of selling them in auction.

—With grateful acknowledgments to The "MAIL", dated 18-7-1977

# பிராணி வதை தடுப்பு சங்க ஆண்டு விழா

சென்னை. மார்ச். 6—பிராணிவதை தடுப்பு சங்கத்தின் 99வது ஆண்டு விழா சென்னையில் சனிக்கிழமையன்று நடந்தது. தமிழ்நாடு கவர்னரின் ஆலோசகர் ஆர். வி. சுப்ரமண்யம் இவ் விழாவிற்குத் தலைமை தாங்கினார். சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி ஏ. டி. கோஷல் சிறப்புரை நிகழ்த்தினார்.

பிராணிகள் துன்புறுத்தப்படுவதற்கு நவீன கல்வி முறையையே குறை சொல்ல வேண்டும் என்று நீதிபதி கோஷல் கூறினார். "எப்படி மனிதாபிமானத்துடன் நடந்து கொள்வது என்பது பற்றி கல்லூரிகளில் மாணவர்களுக்குப் பயிற்சி தரப்படுவதில்லை; நவீன கல்வி முறை, மனிதர்களை யந்திரங்களாக மாற்றி வருகிறது. கல்வி, மனிதனுக்கு மகிழ்ச்சியை அளிப்பதாகவும் இல்லை; வறுமையையும், துயரையும் துடைப்பதாகவும் இல்லை" என்று நீதிபதி கூறினார்.

சங்கத் தலைவர் நீதிபதி டி. ராமப்பிரசாதராவ் வரவேற்புரை ஆற்றினார். செயலாளர் சி. டி. வாசுதேவன் நன்றி கூறினார். இந்த சங்கம் நடத்திய பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு செட்டிநாடு குமார ராணி பரிசுகளை வழங்கினார்.]

—நன்றி: தினமணி, 7—3—1977.

## The following is an extract from a Novel by the World Famous ARTHUR HAILEY in his Novel 'In High Places'.

Surprised, Alan said, "You're a vegetarian, Captain?"

"For many years. Some think it a...." He stopped. "What is the English word?"

"A fad," Alan said, then wished he had spoken less quickly.

Captain Jaabeck smiled. "That is what is sometimes said. But untruly. You do not mind, if I continue ............"

"Oh, yes, please do."

The captain munched several forkfuls of the mixture steadily. Then, pausing, "The vegetarian belief, I expect you know, Mr. Maitland, is older than Christianity."

"No," Alan said, "I didn't."

The captain nodded. "By many centuries. The true follower holds that life is sacred. *Therefore all living creatures should have the right to enjoy it without fear*."

"Yes, Mr. Maitland, I do." The captain helped himself once more. He appeared to consider. "The entire matter, you see, is very simple. Mankind will never live in peace until we overcome the savagery existing within us all. It is this savagery which causes us to kill other creatures, which we eat, and the same savage instinct propels us into quarrels, wars, and perhaps, in the end our own destruction."

## அஹிம்ஸை

அஹிம்ஸை என்பது எல்லோருக்கும் வேண்டியது. ஓர் எரும்பைக் கூட நாம் கொல்லக் கூடாது. யாருடைய சரீரத்துக்கும் ஒரு கஷ்டத்தையும் உண்டு பண்ணக் கூடாது. அதுதான் அஹிம்ஸை. இந்த அஹிம்ஸையானது மநுதர்ம சாஸ்திரத்தில் ஸாமான்ய தர்மங்ககளுள் ஒன்றாகச் சொல்லப் பட்டிருக்கிறது. யோகசாஸ்திரத்தில் யோகத்திற்கு அங்கமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அதன் முக்கிய ப்ரயோஜனம் சித்தம் அடங்குவது. அஹிம்ஸை திரிகரணங்களாலும் ஸாதித்து விட்டோமானால் நமக்கு எதிரில் யாவரும் சாந்தமடைவார்கள் இது நமக்கு மற்றோர் ப்ரயோஜனம்.

—நன்றி சிவபுராண ஞானபூஜகரின் தொகுப்பான ''அருள்மொழிக் கோவை''

குறிப்பு: ''அஹிம்ஸை'' என்ற தர்மத்தைக் கடைப்பிடித்த மஹாத்மா காந்தியாலன்றோ நம் இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைத்தது.

## அன்பும் அருளும்

''அன்பு'' என்பது நம்முடன் தொடர்புடையாரிடம் நாம் காட்டும் பரிவு. ஆனால், அருள் என்பதோ, இயல்பாகவே எவ்வுயிரிடத்தும் உண்டாகும் ஒப்பற்ற கருணை. இதனால்தான் ''அருள் என்னும் அன்பு ஈன் குழவி'' (குறள் 757) என்றார் பொய்யா மொழிப் புலவர். உயிர்கள் யாவும் பரமனுடைய வெவ்வேறு உருவங்களே.

காட்டு மிருகங்களும், விஷ ஜந்துக் களும்கூட அவன் படைப்பன்றோ! அவற்றிற்குத் துன்பம் தராமலிருந்தால் அவை ஒன்றும் செய்யா.

எனவே, எல்லா உயிரினங்களையும் துன்புறுத்திச் சித்திரவதை செய்யாமல் அன்புடன் பழகுவோமாக.

---

ஸ்ரீ:

# நிம்மதியாகத் தூங்க வேண்டுமா?

## (A DIVINE CURE FOR INSOMNIA)

மயர்வறமதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்த ஸ்ரீஸூக்திகளை மஹாவிச்வாஸத்துடன் சில பாசுரங்களையாவது இரவில் அநுஸந்திக்கவேண்டும்.

மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி,
ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுதொட்டில்,
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்,
மாணிக் குறளனே தாலேலோ,
வைய மளந்தானே தாலேலோ.

—பெரியாழ்வார் திருமொழி ***1–3–1***

ஸ்ரீ:

## கோயிலாழ்வார்



**இரவில் பகவான் யோகநித்திரை செய்யும் வண்ணச் சிறு தொட்டில்**

*பக்தர்களே!—*

*தூக்கமே இல்லாமல் துடிக்கிறீர்களா? பலவிதக் கவலைகளால் தூக்கமே வருவதில்லையா? இரவு விழிப்பு ஏற்பட்டால் பிறகு தூக்கம் வராமல் கவலைகளுடன் தன் 70—ஆவது வயது வரை துடித்து*

வாழ்ந்த ஒரு பெரியவர் பிறகு தன் எஞ்சிய வாழ்நாள் முழுவதும் கவலையின்றி தூங்கினார். எப்படி? பகவானுக்கென்று ஒரு தொட்டில் செய்வித்து அதில் [illegible] பெருமாளை அமைத்து இரவில் தன் சாளக்ராம மூர்த்திகளை, ஆசாரத்துடன், அந்தத் தொட்டிலில் எழுந்தருளப் பண்ணி மஹாவிச்வாஸத்துடன் சில பாசுரங்களை அநுஸந்தித்து பகவானை நித்திரை செய்வித்து விட்டுத் தானும் படுக்கச் செல்ல ஆரம்பித்தார். அது முதல், அவன் கருணையால், நன்றாகத் தூங்குகிறார். தன் கடைசி மூச்சுவரை "[illegible] போக [illegible]" ப்ரார்த்தித்து வந்தார். அவர் அநுஸந்தித்த பாசுரங்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன. இவைகளில் ஏதாவது ஒன்றை அவர் அநுஸந்திப்பது வழக்கம்.

(1) பெரியாழ்வார் திருமொழி 1-3-1-லிருந்து 10 பாசுரங்கள்

(2) பெருமாள் திருமொழி 8-1 லிருந்து 11 பாசுரங்கள்.

குறிப்பு:— (1) இரவில் இப்படிப்பட்ட பாசுரங்கள் எவையேனும் ஒரு சிலவற்றை அநுஸந்தித்த பிறகு, பகவான் போக நித்திரையில் இருக்கிறார் என்ற மனோபாவத்துடன் மனதிற்குள்ளேயே "ஸ்ரீ க்ருஷ்ணாய நம:", "சக்ரவர்த்தித் திருமகன் திருவடிகளே சரணம்" போன்ற திருநாமங்களை சுமார் 10 தடவையாவது ஜபித்து விட்டு படுக்கச் செல்லவேண்டும்.

(2) மறுநாள் காலை, நீராடித் தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச் செய்த திருப்பள்ளியெழுச்சியில் முதல் பாசுரமாவது அல்லது ஸ்ரீ விச்வாமித்ர மஹரிஷி அருளிய 'கௌஸல்யா ஸுப்ரஜா ராம' போன்ற ச்லோகங்களையாவது ஸேவித்து, பகவானை எழுப்புவதாக பாவித்துக் கொண்டு, பால் அல்லது பழம் அமுது செய்விக்க வேண்டும்.

(3) தூக்கமின்மையால் அவதியுறும் பக்தர்கள் கீழ்க்காணும் திவ்ய தேசங்களில் (எத்தனை திவ்ய தேசங்கள் முடியுமோ அத்தனையிலும்) ஸேவை ஸாதிக்கும் எம்பெருமான்களை சரணமடைந்து உள்ளம் உருக ப்ரார்த்தித்தலும் நலம். அத்தகைய க்ஷேத்ராடனமும், ஸந்நிதிகளில் ப்ரார்த்தனை செய்தலும் தூக்கமின்மையை நிவர்த்தி செய்து மற்றெல்லாவிதமான நல்ல பயனையும் கொடுக்கும் என்பது பல பெரியோர்கள் கருத்து. மேலும், ஆழ்வார்களால் மங்களாசாஸநம் செய்யப்படாததும், புராதனமானதும், புனிதத்தன்மை வாய்ந்ததுமான திருக்கோவில்கள் பல உள. இவற்றில் எம்பெருமான் சயனத் திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்கும் ஸந்நிதிகளில் ப்ரார்த்திப்பதாலும் அதே பலனை அளிக்க வல்லதாம். உதாரணமாக தென்னாற்காடு ஜில்லா, கள்ளக் குறிச்சி தாலுகாவிலுள்ள திருவரங்கம் திவ்ய க்ஷேத்ரத்திலும், தஞ்சை ஜில்லா [illegible] திவ்ய தேசத்திலும் ஸ்ரீரங்கநாதர் சயனத் திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்கிறார். இவை ஆழ்வார்களால் மங்களாசாஸநம் செய்யப்பட்டவை அல்ல. எனவே, எங்கு ப்ரார்த்தித்தாலும் சரி, மஹா விச்வாஸமும் ஆழ்ந்த பக்தியுமே முக்கியம் தேவை என்பது குறிப்பிடத்தக்கது.

கோயில் (ஸ்ரீரங்கம்), திருமலை (கீழ்த் திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் ஸந்நிதி) பெருமாள் கோவில் (சொன்ன வண்ணம் செய்த பெருமாள் ஸந்நிதி) திரு அநந்தபுரம், திரு அல்லிக்கேணி, திரு அன்பில், திரு ஆதனூர், திரு இடவெந்தை, திரு இந்தளூர், திரு எவ்வுள், திருக் கடல்மல்லை, திருக் கரம்பனூர், திருக் கவித்தலம், திருக் குடந்தை, திருக் கோட்டியூர், திருக் கோளூர், திருச் சித்ரகூடம், திருச் சிறுபுலியூர், திருத் தெற்றியம்பலம், திரு நீர்மலை, திருப் பிரிதி, திருப் புளிங்குடி, திருப் புள்ளம் பூதங்குடி, திருப் பேர் நகர், திரு வல்லிபுத்தூர், திரு வெஃகா, திரு வெள்ளியங்குடி.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கவலைகள் நீங்கி நெம்மதியாக வாழ கீழ்க்கண்ட பாசுரங்களை மஹாவிச்வாஸத்துடன் அடிக்கடி அநுஸந்திக்கலாம்

திருமாலிருஞ்சோலை திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்

"கோங்கலரும்பொழில்மா—
லிருஞ்சோலையில் கொன்றைகள்மேல்

தூங்குபொன் மாலைகளோ—
டுடனாய்நின்று தூங்குகின்றேன்,
பூங்கொள் திருமுகத்து
மடுத்தூதிய சங்கொலியும்,
சார்ங்கவில் நாணொலியும்
தலைப்பெய்வதெஞ் ஞான்றுகொலோ!''
—நாச்சியார் திருமொழி 9—9

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

---

சொன்னவண்ணம் செய்த திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்

''நிற்பதும்மொர் வெற்பகத்தி ருப்பும்விண்கி டப்பதும்,
நற்பெருந்தி ரைக்கடலுள் நானிலாத முன்னெலாம்,
அற்புதன னந்தசயன னாதிபூதன் மாதவன்,
நிற்பதும்மி ருப்பதும்கி டப்பதும்என் நெஞ்சுளே.''
—திருச்சந்தவிருத்தம் —65

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்

---

திருப்புளிங்குடி திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்

''கிடந்தநாள் கிடந்தாய் எத்தனை காலம்
கிடத்தியுன் திருவுடம் பசைய,
தொடர்ந்துகுற் றேவேல் செய்துதொல் லடிமை
வழிவரும் தொண்டரோர்க் கருளி,
தடங்கொள்தா மரைக்கண் விழித்துநீ யெழுந்துன்
தாமரை மங்கையும் நீயும்,
இடங்கொள்மூ வுலகும் தொழவிருந் தருளாய்
திருப்புளிங் குடிக்கிடந் தானே!''
—திருவாய்மொழி 9—2—3

நம்வாழ்வார் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**கவலைகள் நீங்கி நெம்மதியாக வாழ கீழ்க்கண்ட பாசுரங்களை மஹாவிச்வாஸத்துடன் அடிக்கடி அநுஸந்திக்கலாம்.**

**சொன்னவண்ணம் செய்த திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்**

வெய்யவாழி சங்குதண்டு வில்லும்வாளு மேந்துசீர்க்
கைய, செய்ய போதில்மாது சேருமார்ப நாதனே,
ஐயிலாய வாக்கைநோய றுத்துவந்து நின்னடைந்து,
உய்வதோரு பாயம்நீயெ னக்குநல்க வேண்டுமே.
—திருச்சந்தவிருத்தம்—97

திருமழிசையாழ்வார் திருவடிகளே சரணம்

---

**காய்சினவேந்தன் திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம்**

**''காய்சினப் பறவை யூர்ந்துபொன் மலையின்
மீமிசைக் கார்முகில் போல,
மாசின மாலி மாலிமான் என்றங்
கவர்படக் கனன்றுமுன் னின்ற,**

காய்சின வேந்தே! கதிர்முடி யானே!
கலிவயல் திருப்புளிங் குடியாய்,
காய்சின ஆழி சங்குவாள் வில்தண்
டேந்தியெம் இடர்கடி வானே!''

—திருவாய்மொழி 9—2—6

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---



## ஆண்டவனே அருமருந்து

வ்யாதியால் பிடிக்கப்பட்டவர்களும், தூக்கம் வராதவர்களும் ஸ்ரீ தந்வந்தரி பகவானை அடிக்கடி த்யானம் செய்வது சாலச்சிறந்தது என்று பெரியோர் சொல்வதுண்டு.

### த்யான சுலோகம்

சங்கம் சக்ரமுபர்யதஸ்ச கரயோர்
திவ்யௌஷதம் தக்ஷிணே
வாமேநாந்ய கரேண ஸம்ப்ருத
ஸுதா கும்பம் ஜலூகாவலிம்|
பிப்ராண: கருணாம்ருத: ஸுககர:
ஸர்வாமய த்வம்ஸக:
க்ஷிப்ரம் மே துரிதம் நிஹந்து
பகவான் தந்வந்தரி: பாது ந:||

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

---

ஸ்ரீ:

# சில ஸத்விஷயங்கள்

## ஆஸ்திக மஹான்களுக்கு ஒரு விண்ணப்பம்

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களை ஸ்ரீ கூரத்தாழ்வான் திருநக்ஷத்ர திவ்யதினமான தை மாதம் ஹஸ்தத்தன்று ஆரம்பித்து, அடுத்த தமிழ் வருடம் திருமங்கையாழ்வார் திருநக்ஷத்ர திவ்ய தினமான கார்த்திகை மாதம் கார்த்திகைத் திருநாள் வரை உருக்கமாகப் பாராயணம் பண்ணி வந்தால் ஸர்வலோக யோக க்ஷேமம் உண்டாகும் என்றும், பாராயணம் செய்பவர்களும் நலம் பெற்று நீடூழி வாழ்வது திண்ணம் என்பதும் பெரியோர்கள் அபிப்பிராயம்.

திருக்கார்த்திகையிலிருந்து தொடங்கி தை மாத ஹஸ்தம் வரை அனத்யயன காலமாதலால் நாலாயிரத் திவ்யப் பிரபந்த அனுஸந்தானம் கூடாது என்பதும் அவர்களுடைய அபிப்பிராயம். ஆனால், திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, இராமானுச நூற்றந்தாதி, தேசிகப் பிரபந்தம், உபதேச ரத்தின மாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஞான ஸாரம், பிரமேயஸாரம், ஸப்த காதை இவைகளை வருஷம் பூராவும் பாராயணம் செய்யலாம்.

—லிப்கோ பதிப்பகத்தார்

## கோமாதாவைக் கௌரவியுங்கள்



'கோப்ராஹ்மணேப்ய : சுபமஸ்து நித்யம்' என்பது நம் முன்னோர்களின் பிரார்த்தனை. பசுவும் பிராமணனும் சுகமாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது இந்த வசனத்தின் பொருள். பசுமாடு பால், தயிர், நெய் முதலியவற்றால் நம்மை யெல்லாம் காப்பாற்றுகின்றது. அந்தணன் தன் அநுஷ்டானங்களைச் சரிவரச் செய்து, 'ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து' என்ற பிரார்த்தனையுடன் தெய்வத்தை பூஜிக்கிறான்.

பசுவை எல்லோரும் பூஜிப்பது அவசியம். அது எங்காவது வழியில் நின்றிருந்தால் சற்று சிரமமாக இருந்தாலும் பசுவை ப்ரதக்ஷிணமாகச் செல்லவேண்டும். அதன் பின்புறம் ஸ்ரீமகாலக்ஷ்மியின் வாஸஸ்தானமாதலால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்வதால் க்ஷேமம் உண்டாகும். பசு மூத்திரம் விடுவதைக் கண்டால் அதை அலட்சியம் பண்ணாமல் பக்தியோடு கையில் ஏந்தி சிறிது தலையில் தெளித்துக் கொள்வதும் ஆசமனம் செய்வதும், கண்களைத் துடைத்துக் கொள்வதும் அவசியம். அது கங்கையைக் காட்டிலும் தூயது. நம் இடையே நடமாடிவரும் இந்த தெய்வீகப் பிராணியை நாம் கௌரவிக்க வேண்டும். அந்த நன்னாள் வந்து, என்று எல்லாரும் கோமாதாவைக் கௌரவிக்கிறார்களோ அன்று நம் நாட்டில் பசியும் (பட்டினியும் பற்றாக் குறையும்) பறந்தே போய் விடும் என்பது திண்ணம்.

—லிப்கோ பதிப்பகத்தார்.

## கோயில் யானைகளை உள்ளன்புடனும் பக்திச்ரத்தையுடனும் ரக்ஷித்தலின் அவசியம்





### ஒரு பழம் பக்தர் கூறுகிறார்

கோயில்களில் யானை அழகுக்காக இல்லை. கோயில் இருக்கும் ஊருக்கே தீமை நேராமல் காக்கும் மாபெரும் ரக்ஷை அது. எனவே, கோயில் அதிகாரிகள் அதற்கு முழு உணவும் பரிவோடு தந்து நீராட்டி அதன் நெற்றியில் பளபள என்று சின்னங்களை இட்டு அதைப் போஷித்துப் பூஜித்து வருவது மிக மிக அவசியம். இதற்கு வசதி இல்லாதவர்களும் யானை முரடாக இருந்தாலும், தக்க வேறு இடத்திற்கு அதை அனுப்பிவிடுவதுதான் சரி.

அதாவது யானையை வைத்து அதை சரிவர ஸம்ரக்ஷிக்காவிட்டால் அந்த

ஊருக்கே பல இடர்கள் வரும். எனவே, உள்ளூர் பக்தர்களும் யானை விஷயத்தில் பக்தி ச்ரத்தையைக் காட்டி வருவது மிகமிக அவசியம். அம்மாதிரியே கோயிலின் வாயில்லா ப்ராணிகளையும் போஷித்து வருவதும் மிக முக்யம் என்பதைக் கூறவும் வேண்டுமோ?

## கோயில் கைங்கர்ய பரர்கட்கு ஒரு வேண்டுகோள்

கோயிலுக்கு வரும் ஸேவார்த்திகளிடம் அர்ச்சகர்கள் ஏழை பணக்காரர்கள் என்ற வித்யாசமின்றி மிகவும் அன்புடனும் வினயத்துடனும் நடந்து கொள்ள வேண்டும். குறிப்பாக ஏழைகளிடம் மிக மிக அன்புடன் பழக வேண்டியது வெகுமுக்கியம். தவிர, நம் கோயில்களின் புனிதத் தன்மைக்கு ஏற்ப கோயிலில் உள்ள எல்லா ஸந்நிதிகளையும் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டியதும் மிக மிக அவசியம். முக்கியமாக பகவானுக்குத் திருவாராதனம் செய்யும் வட்டில் முதலியவைகளையும் நிவேதனம் செய்யும் ப்ரஸாதங்களைத் தயார் செய்யும் பாத்திரங்களையும் அடிக்கடி நன்றாகத் தேய்த்து சுத்தம் செய்ய வேண்டியதன் அவசியத்தை கூறத் தேவையில்லை.

மிகவும் அருவருக்கத்தக்க தோற்றத்தையுடைய கரப்பான் பூச்சி என்பது கோயில் மடப்பள்ளிகளிலும் சில சமயங்களில் கர்ப்பக்ருஹத்தின் உள்ளேயும் கூட்டம் கூட்டமாக இருப்பதைச் சில கோயில்களில் ஸாதாரணமாகக் காணலாம். இவைகள் பாத்திரங்களின் மீதும் உணவுப் பண்டங்களின் மீதும் ஸ்பர்சித்துவிட்டால் அதனால் ஏற்படக் கூடிய விபரீதங்களை பின் வரும் பத்திரிகைக் குறிப்பிலிருந்து நன்கு அறியலாம்.

## AN INSECT THAT IS EVIL EVEN WHEN DEAD

"The cockroach, now dismissed as a harmless domestic insect, has been found capable of spreading food poisoning.

"An American scientist who made extensive tests on the cockroach over a period of a dozen years says that his findings conclusively prove that the insects are well capable of acquiring, harbouring, and spreading Salmonella food poisoning—symptoms of which involve acute diarrhoea, abdominal crams, vomiting, prostration, and sometimes death.

"Prof. Theodore Olson's tests revealed that some cockroaches harboured Salmonella bacteria in their bodies for as long as about two months. This, says the Minnesota University scientist, is a significant discovery.

"Even when a roach is dead, his evil may live. While walking over food and dishes, he contaminates these objects so that they are dangerous to eat." - UNI.

—THE HINDU, 8-4-1970.

இவைகள் விருத்தியாவதற்கு அழுக்கும், அசுத்தமுமே காரணம். மனித சமூகத்திற்குக் கெடுதல் விளைவிக்கக் கூடிய இத்தகைய ஜந்துக்களை ஒழிக்க வேண்டுமானால் நம் இருப்பிடங்களையும் உபயோகிக்கும் பாத்திரம் பண்டங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். பல ஆயிரம் மக்கள் புழங்கும் கோயில்களில் சுகாதாரமின்மை காரணமாக இத்தகைய ஜந்துக்களால் கெடுதி ஏற்பட்டது என்ற பழிச்சொல்லுக்கு இடம் கொடுக்காவண்ணம் கோயில்களையும் அங்கு உபயோகப்படுத்தப்பட்டு வரும் பாத்திரங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளும்படி கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்களையும் கைங்கர்ய பரர்களையும் மீண்டும் மீண்டும் கேட்டுக் கொள்கிறோம்.

## அவசியம் செய்யவேண்டியவை

கலியுகத்தில் நாம் கடைதேறுவதற்குக் கீழ்க்கண்ட எட்டு நியமங்களையாவது குறைந்த பக்ஷமாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்று பரம பாகவதரான நாராயண பட்டாத்ரி பாகவத ஸாரமான நாராயணீயத்தில் சொல்லுவதாவது:

''கீதா கங்காச காயத்ர்யபி துலஸிகா
கோபிகாசந்தநம் தத்
ஸாலக்ராமாபிபூஜா பரபுருஷ
ததைகாதசீ நாமவர்ணு: ।
ஏதாந்யஷ்டாந்யயத்நாதபி கலியுகே
த்வத்ப்ரஸாதாய பூயாத்'' ॥

அதாவது,

1. பகவத் கீதா பாராயணம் 2. கங்கா தீர்த்த ஸ்நான பானங்கள் 3. காயத்ரீ ஜபம் 4. துலஸீ பூஜை 5. திலகதாரணம் 6. ஸாளக்ராம பூஜை 7. ஏகாதசி வ்ரதம் 8. பகவந்நாம ஸங்கீர்த்தனம். இந்த எட்டு நியமங்களையாவது விடாமல் அனுஷ்டிக்க வேண்டும்.

## ஸ்ரீ ஆழ்வார்—ஆசார்யர் திருநக்ஷத்திரங்கள்

அந்த அந்த ஆழ்வார்கள் ஆசார்யர்கள் அவதரித்த திருநக்ஷத்திர தினத்தன்று, அவர்களுடைய அருளிச் செயல்களை ஸேவிப்பதுடன் சாத்துமுறையும் செய்ய வேண்டும். அந்த அந்த வருஷத்துப் பஞ்சாங்கத்தைப் பார்த்து இந்தத் திருநக்ஷத்திரங்கள் வரும் சரியான தினங்களைக் குறித்து வைத்துக் கொண்டு அதன்படி அனுஷ்டிக்க வேண்டும்.

## முக்கிய அறிவுரைகள்

1. ஸ்நாத்வா புஞ்ஜீத—கூழானாலும் குளித்துக் குடி!
2. பிறர் காணுமாறு உணவை உண்ணாதே!
3. வெங்காயம் முருங்கையை விட்டிடுக!
4. காலம் கடந்து தோன்றும் பொருளை வாங்காதே!
5. மனத்தைக் கெடுக்கும் உணவுகளை விட்டிடுக!
6. பகவான் அமுது செய்த உணவே அமுத உணவு!
7. பக்தி தரும் உணவையே பெறுக!
8. வெளுத்ததெல்லாம் பாலென்று நினையாதே!
9. குற்றமறிந்ததும் பற்றினை விடுக!
10. தேனும் நெய்யும் தூய்மையளிக்கும்!

## இனிய பேச்சு தானம்

தாழ்ந்த குரலில் அன்புடன் இனிமையாகப் பேசினால் எல்லாப் பிராணிகளும் மகிழ்ச்சியடைகின்றன. (பாயவரும் பசுவை, ''பா, பா'' என்று அன்புடன் அழைத்துத் தட்டிக் கொடுத்தால் நாக்கால் நம்மை நக்கிக் கொடுக்குமன்றோ!) ஆகவே, இனிமையாகப் பேசுதலென்ற தானத்தைச் செய்ய வேண்டும்; இனிய பேச்சுக்கென்ன ஏழ்மை வந்துவிட்டது?

நம்மால் ஏழை எளியவர்களுக்கு எதுவும் தர முடியாவிட்டாலும் பிறர் ஈவதைத் தடுக்காமலும், எளியோர்களைக் கொடுஞ் சொற்களால் சுடாமலுமாவது இருக்க வேண்டும். எனவே, எவரும், எப்பொழுதும் இன்சொலாளர்களாகவே இருத்தல் வேண்டும்.

## வாக்களிக்குமுன் நிதானிக்க !

ஏழை, எளியவர்க்கு வாக்களித்தபின் செயலாற்றுவதில் விரைவு தேவை.

வாக்களித்த பின்னர் அதை நிறைவேற்றாமல் தவறி விடுவது நேர்மையன்று. மாறாக, வாக்களிக்காமல் இருப்பதே தர்மமாகும். எனவே, 2, 3.... பல முறைகள் எண்ணித் துணிக. வாக்களித்த பின்னர், அதை விரைவாகவும் முழுமையாகவும் முடித்துத்தர வேண்டுவனவற்றை உறுதியுடன் செய்க.

## அன்னதான மகிமை

துரக சத ஸஹஸ்ரம் கோகஜாநாம் ச லக்ஷம்
கநக ரஜத பாத்ரம் மேதிநீம் ஸாகராந்தாம்।
விமலகுல வதூநாம் கோடிகந்யாஸ்ச தத்யாத்
நஹி நஹி ஸம மேதை: அந்நதாநம் ப்ரதாநம்॥

லக்ஷம் குதிரைகள், லக்ஷம் பசுக்கள், லக்ஷம் யானைகள், தங்கப் பாத்திரங்கள், வெள்ளிப் பாத்திரங்கள், சமுத்திரம் வரை பரவிய பூமண்டலம், நல்ல குலத்தில் பிறந்த கன்னிகைகள் இவைகளைத் தானம் செய்தாலும் இவைகளெல்லாம் ஓர் அன்ன தானத்திற்குச் சமானம் ஆகாது.

## ஏழைகட்கு கஞ்சி வார்த்தல்

''நாறு நறும்பொழில்மா
விருஞ்சோலை நம்பிக்கு, நான்
நூறு தடாவில் வெண்ணெய்
வாய்நேர்ந்து பராவிவைத்தேன் . . .''

—நாச்சியார் திருமொழி 9—6

மேற்படி போல ''வெண்ணெய்'' அமுது முடியாவிட்டாலும், ஆழ்வார் ஆசார்யர்கள் திருநக்ஷத்ர தினங்களில் ஆஸ்திக சபைகள் அந்தந்த ஊர்களில் ஏழைகட்குக் கஞ்சி வார்த்துக் கோடி புண்யம் தேடிக் கொள்ளலாமே. ''அன்னதானத்தை'' விடச் சிறந்தது உண்டா?

தவிர பிராணிகளை ஹிம்ஸிக்காதீர்கள்!

## நன்றி மறவாதீர்

இந்நாளில் மக்களிடையில் தன்னம் பிக்கையும், நன்றியும் குறைந்து காணப் படுகின்றன. நமக்குப் பிறர் செய்யும் உதவியைக் குறைத்து மதிப்பிடலாகாது. தினையளவு நன்றி செய்தாலும் அதைப் பனையளவாகக் கொள்ள வேண்டும். செய்நன்றியை மறக்கலாகாது. எந்த நற்செயலை மறந்தாலும் அதற்குப் பரிஹாரம் உண்டு. செய்ந்நன்றியை மறந்தால் பரிஹாரமே இல்லை. நன்றி கெட்டவன், நன்றி கொன்றவன் என்று உலகம் கூறும். பரதன் கோசலையிடம் 'செய்த உதவியை மறப்பது போன்ற பாவம் வேறு இல்லை' என்கிறான். நன்றி மறவாதீர்.

## சிக்கன வாழ்வே சீரான வாழ்வு

உதவி செய்யுங்கள் என்று கேட்பவருக்குச் செய்யும் உபகாரமும் உதவியே. பிறர் கேட்காமல் இருக்கும் போதே மனம் அறிந்து உபகாரம் செய்வதும் உதவியே. உதவி செய்யும் போது பிரதி பலனை (பதிலுதவியை) எதிர் பாராதீர். செல்வம் வந்த காலத்தில் உற்றுருறவினரை மறந்து விடாதீர். விலைவாசிகள் அளவுக்கு விஞ்சி ஏறும்; இறங்கும்; இறங்காமலும் இருக்கும். நம் வாழ்க்கைமட்டும் சிக்கனமாகவும் சீராகவும் இருக்க வேண்டும்.

## பெரியோர்களை அணுகும் முறை

வயது, அறிவு, அனுபவம் ஆகியவற்றில் முதிர்ந்தவர்கள் இருக்கிறார்கள். ஞானம் அனுட்டானம் ஆகியவற்றில் சிறந்த பெரியோர்களிடம் பய பக்தியோடு செல்ல வேண்டும். வெறுங் கையோடுசெல்வது நல்லதன்று. பழங்கள் வாங்கிச் செல்ல வேண்டும். அஷ்டாங்கமும் பூமியில் படும்படி வணங்க வேண்டும். கை கட்டி வாய்புதைத்து அறிவுரைகளைப் பெற வேண்டும்.

**மடாதிபதிகளுக்கும், அறநிலைய நிறுவனத்தார்களுக்கும், தனவான்களுக்கும்**

# ஒரு வேண்டுகோள்

மக்களுக்கு ஏற்படும் பலவகையான இன்னல்களைக் குறைக்க உதவவேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்தோடு, நம் நாட்டில் நெடுங்காலந்தொட்டு, மடாதிபதிகளும், அறநிலையத்தார்களும் பேருள்ளம் படைத்த தனவான்களும், தத்தம் வழிகளில் அருந்தொண்டாற்றி வருகின்றனர். எனினும் வினாடிக்கு வினாடி பெருகிவரும் ஜனத்தொகையின் தேவைகளைக் கால மாறுபாட்டின் சூழ்நிலைக்கேற்ப, அவர்களால், ஈடு செய்ய முடிவதில்லை. அன்றியும், தேவைப்படும் பலருக்கும் அவை கிட்டுவதில்லை. மேலும், புதுப்புதுத் துறைகளில் தேவைகளும் முளைக்கின்றன.

இக்காலத்தில், கிராமவாசிகளுக்கு அதிகம் உண்டாகாத, இரு புதுப்பிரச்னைகள், நகரவாசிகளுக்கு—குறிப்பாகச் சென்னை போன்ற பெருநகரங்களில் வசிப்பவர்களுக்கு எதிரிட்டு, அவர்களைப் பெரிதும் கவலைக்குள்ளாக்கி வருகின்றன. ஒன்று, தம்மக்களுக்குத் திருமண வைபவத்தைச் செய்விப்பதற்குரிய இடவசதியின்மை. மற்றொன்று, பரகதியடைந்துவிட்டவர்களுக்காற்றவேண்டிய நீத்தார் கடன்களை—உத்தரக்கிரியைகளைச் செம்மையாகச் செய்வதற்குரிய இடவசதியின்மை. இவ்விருதுறைகளிலுமுள்ள குறைபாடுகளால், ஏழைகளும் நடுத்தரவகுப்பாரும் அடைந்து வரும் இன்னல்கள் ஒரு பெரும் சோகக் கதை.

மேலும் இப்போது சிறிய பெரிய நகரங்களில், கல்யாண மண்டபங்கள் ஏற்பட்டு, முதல் பிரச்னையினை ஓரளவுக்குத் தீர்வு கண்டு வருகின்றன. ஆனால், நகரங்களில் உத்தரக்கிரியைகளைச் செய்வதற்கு, இடவசதி அறவேயில்லை. பல இலக்கம் மக்களைக் கொண்ட சென்னை நகரில்கூட, இரண்டோரிடங்கள் உள்ளனவேயன்றி தேவைக்கு ஈடுகொடுக்கும் அளவுக்கில்லை.

இங்குத் தர்மவான்கள் நினைவுக்கு ஒரு செய்தியினைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். திருமணம் செய்வதற்குக் கல்யாண மண்டபங்கள் கிடைக்காவிட்டால் திருமணங்களைக் கோயில்களில்கூட நடத்திவிடலாம். ஆனால் உத்தரக் கிரியைகளைக் குறிப்பிட்ட இடங்களிலன்றி வேறிடங்களிற் செய்ய அனுமதி கிடைக்காது. அதனால், சாமானிய மக்கள், கிரியைகளைச் செய்யத் துடிப்பும், சிரத்தையுமிருந்தும், தக்க இடம் கிடைக்காத காரணத்தால், கர்மாவினை நழுவவிடவோ, ஏதோ செய்தோமென்று, 'காமா, சோமா' என்று அரை குறையாக, மனநிறைவின்றி செய்து விடவோ முற்படுகின்றனர்.

மேலும் திருமணம் போன்ற சுப காரியங்களைச் செய்வதில், இடவசதியின்மை போன்ற குறைபாடுகள் ஏற்பட்டாலும், அவை அவ்வளவாகப் பாராட்டப் பெற மாட்டார். ஆனால் அபரக்கிரியைகளாற்றுவதில் குறைகள் உண்டாயின், அவை கர்த்தாக்களையும் பிதுர்க்களையும் மிகவும் பாதிக்கும். கல்யாண மண்டபங்களைக் கட்ட முன் வரும் பலர், உத்தரக்கிரியைகளைச் செய்வதற்குரிய இடங்களையமைக்க அவ்வளவாக முன்வருவதில்லை. அசுப காரியங்களுக்கான இடங்கட்டிக் கொடுத்தால் அது தமது குடும்பத்துக்கும், சந்ததிக்கும், அசுபத்தையுண்டாக்கும் என்ற, ஆதாரமற்ற அச்சமே காரணம் போலும். இதனைவிட விபரீதமான வேறு கருத்து இருக்க முடியாது. சாஸ்திரங்களில் நம்பிக்கையுள்ள எந்த ஆஸ்திகனும், பரோபகாரியும் அங்ஙனம் நினைக்கமாட்டான். அனுதப்பிரேத ஸம்ஸ்காரம் செய்வதும், உத்தரக்கிரியைகள் செய்ய இடவசதி செய்து கொடுப்பதும் ஆயிரம் வேள்விகள் செய்ததனாலுண்டான புண்ணியத்தைவிட மேலான புண்ணியத்தைத் தருவதுடன், இக, பர, தேவலோக வாசிகளின் நல்லாசிகளையும் பெற்றுத் தரும். இவற்றைச் செய்வதைக்காட்டிலும், மேலான அறப்பணி, இக்காலத்தில் வேறொன்றுமிருக்க முடியாது. எனவே, மடாதிபதிகளும், கனதனவான்களும், தங்கள் தங்கள் மரபின்படி, உத்தரக்கிரியைகள் செய்வதற்குரிய, இடங்கள் கட்டித்தரும் விஷயத்தில் விரைவாகக் கவனம் செலுத்த வேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கரம்கூப்பிச் சிரம் தாழ்த்தி வேண்டிக் கொள்கிறோம்.

—லிப்கோ பதிப்பகத்தார்

## எவருக்கும் கேடு செய்யக்கூடாது

''ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்'' என்பது பழமொழி. அம்மாதிரியே பிறர்க்குக் கெடுதல்கள் செய்தால் பகவான் நம்மை தண்டிப்பான்.

பன்றியு மாமையு மீனமு மாகிய
பார்க்கடல் வண்ணா, உன்மேல்
கன்றி னுருவாகி மேய்புலத் தேவந்த
கள்ள வசுரர் தம்மை,
சென்று பிடித்துச் சிறுகைக ளாலே
விளங்கா யெறிந்தாய் போலும்,
என்றுமென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள்
அங்ஙன மேயா வார்களே.

—**பெரியாழ்வார் திருமொழி 3-3-7**

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:

## "DO IT NOW"

### VALUE OF TIME

"TIME brings Everything" — PLATO
"TIME is the soul of the world" — PYTHAGORAS
"TIME is man's ANGEL". — SCHITTER

"That great mystery of TIME, were there no other; the illimitable, silent, never-resting thing called TIME, rolling, rushing on, swift, silent, like an all-embracing ocean-tide, on which we and all the Universe swim like exhalations (Evaporation; puff of breath; mist) like apparitions which ARE, and then ARE NOT: this is forever very literally a miracle; a thing to strike us dumb,– *for we have no word to speak about it.*"

—CARLYLE

## READ

What our Chief Minister Mr. M. G. Ramachandran says about the

## "SECRET OF HIS GOOD HEALTH

MADRAS, Oct. 21 : What is the secret of the "goodhealth" of the Tamilnadu Chief Minister, Mr. M. G. Ramachandran?

Mr. Ramachandran, said he himself did not know the secret.

The Chief Minister, who was speaking at a function at the Gujarati Sahaykari Hospital this morning said a Gujarati journalist had asked him about the secret of his good health. He had told him he himself did not know.

Mr. Ramachandran however, pointed out that if they thought about what they could do for others, it would be good for the mind and the body. On the other hand, if they always thought only about themselves and how they could acquire more money and wealth, they would have no peace of mind and sleep even if they took sedatives. He wanted people to think about their past, and about the assistance they had received and try to render all possible assistance to others keeping always in mind, the welfare of the country.

—With grateful acknowledgments to The MAIL dated 21-10-1977.

ஸ்ரீ:

## ஸ்ரீ ஹமாப்ஜ நாயிகா ஸமேத
## ஸ்ரீ தேவநாதஸ்வாமி தேவஸ்தானம்

திருவஹீந்திரபுரம்

நடுநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றுகிய திருவஹீந்திரபுரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் அடியவர்க்கு மெய்யன் தெய்வநாயகனே என்பதை 'தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்சத்தண் திருவயிந்திர புரத்துமேவு சோதி'' என்று திருமங்கை மன்னனும், ''நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே'' என்று ஸ்ரீ ஸ்வாமி தேசிகனும் மங்களாசாஸனம் செய்திருப்பதினுல், விசேஷமாக நிருபிக்க வேண்டியதில்லை.

மேற்படி திருக்கோயிலில் கல்யாண மண்டமும், தண்ணீர் வசதியும் செய்ய விருப்பதால், பக்தர்கள் தாராளமாகப் பொருளுதவி செய்யுமாறும், நன்கொடைகளை ''நிர்வாக அதிகாரி'' ஸ்ரீ தேவநாதஸ்வாமி திருக்கோயில்,

திருவஹீந்திரபுரம், 607401 (கடலூர் மாவட்டம்) (S. A. Dt.) என்ற விலா சத்திற்கு அனுப்பி ரசிது பெற்றுக் கொள்ளுமாறும் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

---

ஸ்ரீ:

# SRI LAKSHMI HAYAGRIVA PERUMAL BHAKTA JANA SABHA

## Ramakrishna Nagar, Pondicherry-3.

ஸ்ரீமதே லக்ஷ்மீ ஹயவதந பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:



'வானேறப் போமளவும்' வாழ்பளிப் பனவான திவ்ய ஸூக்திகளை நமக்கு ஈந்தருளிய ஆசார்ய ஸார்வபௌமன் ஸ்ரீ ஸ்வாமி தேசிகனின் ஆராத்ய தேவதையான ஸ்ரீலக்ஷ்மீ ஹயவதநப் பெருமாளின் திருவவதாரம் எம்பெருமானின் விபவாவதாரங்களில் முதன்மையானது. இகபரஸுகங்களும், ஞானமும், கல்வி நலனும், செல்வமும், ஒற்றுமையும் ஒருங்கே ஈந்தருளும் ஞானனந்த ஸ்வரூபனுகிய ஸ்ரீலக்ஷ்மீஹயவதநப் பெருமாளுக்குப் புதுவையில் கி.பி. 1971–ஆம் வருஷம் ஆனி மாதம் அனுஷ நக்ஷத்ரம் கூடிய சுப தினத்தில் (5—7—1971) அடியார்களின் பொருளுதவி கொண்டு ஒரு மிகச் சிறிய ஆலயம் நிர்மித்து. மஹாஸம்ப்ரோக்ஷணம் நிறைவேறிற்று. அன்று தொடங்கி ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவன் பரம ஸாந்நித்யத்துடன் தன்னை வந்து ஸேவிக்கும் அடியார்க்கு 'தமதெல்லாம் அவர் தமக்கு வழங்கி' மஹாவரப்ரஸாதியாய் அடியார்க்கு ''வைகுண்டவாஸேபிநமேபிலாஷ:'' என்ற திவ்ய ஸூக்தியை நினைவூட்டி வருகிறார். ஆறு வருஷகாலமாக, திருப்பவித்ரோத்ஸவம், ப்ரம்மோத்ஸவம், மாஸோத்ஸவங்கள், எம்பெருமானின் கிருபையாலும், மஹநீயர்களின் மங்களாசாஸன விசேஷபலத்தாலும், அடியார்களின் பொருளுதவியாலும் நடைபெற்று வருகின்றன.

ஸ்ரீதேவநாதனை ஸ்வாமி தேசிகன் 'மாசிக்கடலாடி மகிழ்ந்து வருவாரே' என்று மங்களாசாஸனம் செய்தது போலவே, நம் ஸ்ரீ ஹயவதநப் பெருமாளுடன் ஸ்ரீஸ்வாமி தேசிகனும் மாசிக் கடலாடி மேலும் தை அமாவாசை தினத்தில் கடல் தீர்த்தவாரி கண்டருளி கருடஸேவையும் கண்டருளுகிறார். இத்தகைய கைங்கர்யங்கள் எல்லாமே ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவ பக்தஜன ஸபாவின் தலைமையில் பக்தர்களின் பொருளுதவியினுல் நடந்து வருகின்றன. ஆயினும் நித்ய திருவாராதனத்திற்கும், மற்றைய உத்ஸவாதி விசேஷங்களுக்கும் ஏற்ற சாச்வத நிதியும் ஏற்பாடாகவில்லை. சமீபத்தில் 1977 மே மீ த்தில் மைசூர் ஸ்ரீபரகால மடத்து ஸ்ரீமத் பரஹம்ஸேத்யாதி, ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவ திவ்யபாதுகாஸேவக அபிநவ ராமாநுஜப்ரஹ்மதந்த்ர பரகால மஹா தேசிகன் ஸ்வாமி புதுவைக்குப் பொன்னடி சாற்றி எம்பெருமானையும் மங்களாசாஸனம் செய்தார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. எம்பெருமானுடைய ஸாந்நித்யத்தையும், சிரத்தையுடன் நடக்கும் திருவாராதனங்களையும் கண்டு திருவுள்ளம் பூரித்த ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் திருக்கோயில் நிதிக்கு உதவ முன்வந்துள்ளார். புதுவையில் ஸ்ரீபரகால மடம் ஒன்று நிர்மித்துக் கல்யாண மண்டபமாக அதை மக்கள் உபயோகத்திற்குக் கொடுத்து, அதில் வரும் வருமானத்தில் ஒரு பகுதியை திருக்கோயிலுக்குச் சாச்வதமாக தருவதற்கு இசைந்துள்

ளார். 'ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவ பக்த ஜனஸபா' இந்தக் கைங்கர்யத்தை மேற்கொண்டு நடத்துகிறது. பக்தர்கள் பெருமளவுக்கு இந்த கைங்கர்யத்திற்குப் பொருளுதவி செய்து மிகவும் அரிதான பாரத பூமியிலேயே எங்கோ ஓரிடத்தில் விசேஷமாக எழுந்தருளி பக்தர்களை ரக்ஷித்து வரும் ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவப் பெருமாளின் திருவருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்று பக்த ஸபை வேண்டுகிறது. திருக்கோயிலில் எம்பெருமானுக்குக் கோடி அர்ச்சனை நடைபெறுகிறது. இரண்டு ரூபாய் செலவில் 'ஸஹஸ்ரநாம அர்ச்சனை' நடைபெறுகிறது. இவ்வளவு குறைந்த செலவில் நடத்த முன் வந்திருப்பதன் நோக்கம் எல்லோர் திரவ்யசக்திக்கும் உட்பட்டதாயிருக்க வேண்டும் என்பதேயாகும். ஆகையால் அன்பர்கள் யாவரும் கோடி அர்ச்சனைக்கும், ஸ்ரீபரகால மடம் நிர்மாணத்திற்கும் தங்களால் இயன்ற பொருளுதவியை கீழ்க்கண்ட* முகவரிக்கு அனுப்பிக் கடலெனப்பொங்கி வரும் எம்பெருமானுடையவும் ஆசார்யனுடையவும் கிருபையைப் பெற வேண்டுமாய் வேண்டப்படுகிறார்கள்.

* The Treasurer, Sri Lakshmi Hayagriva Perumal Bhakta Jana Sabha, 6, Rainbow Colony, Venkata Nagar, Pondicherry-605011.

ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து

## AN APPEAL
### FROM "THARAMANI", MADRAS-42.

Sri Desika Darsana Sabha started in 1975 conducts classes to children on Sri Desika's Srisuktis. A Temple was constructed by the Sabha for Sri Nigamanta Maha Desika with shrines for Lord Sri Lakshmi Hayagriva & Chakravarti Tirumahan. The Maha Samporkshanam was done on 5-9-1976. Since there is no permanent income for daily Tiru Aaradanam, a scheme of 'Daily Ubhayam Fund' has been drawn up and started by Sri Ubhaya Ve. Villivalam Narayanacharya Swami. Under this scheme an individual can enrol himself by depositing a sum of Rs. 51 with the Sabha and specify ONE day in the year on which Tiru Aaradanam is to be performed as his Ubhayam. The amount collected shall be deposited in a permanent way and out of the interest earned, the above Ubhayam will be performed every year on the day specified......It has also been proposed to construct a Mandapam and Compound Wall for the Temple. Astikas are requested to donate liberally for the above good cause. For further particulars, please write to: *"The Secretary, Sri Desika Darsana Sabha (Regd.) Pandian Street, Tharamani Agraharam, Velacheri P.O., Madras-42."*

ஸ்ரீ:
## வேண்டுகோள்

1. சென்னை மீனம்பாக்கம் ஏர்போர்ட்டுக்கு அருகில் நங்கநல்லூரில் ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவப் பெருமாள் திருக்கோயில் நிர்மிக்கப்பட்டு 28–6–1972-ல் ஸம்ப்ரோக்ஷணமும் நடைபெற்று பக்தர்கள் ஞானமும் ஐச்வர்யமும் அபரிமிதமாக அடைந்து வருவது யாவரும் அறிந்ததே. இந்தத் திருக்கோவிலின் நித்ய திருவாராதனத்திற்கும், உற்சவாதிகளுக்கும் நிதி தேவைப் படுவதால் பக்தர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தாராளமாகப் பொருள் உதவி செய்யும்படி வேண்டப்படுகிறார்கள். விலாசம்: காரியதரிசி, வேதார்த்த ஸ்தாபனஸபா, நங்கநல்லூர், சென்னை–61.

2. தென்னாற்காடு ஜில்லா, திருக்கோவலூருக்கு அருகில் உள்ள திருவரங்கம் என்னும் திவ்ய தேசத்திலிருக்கும் ஸ்ரீரங்கநாத ஸ்வாமி திருக்கோவிலின் ஜீர்ணோத்தாரண திருப்பணி நடந்துகொண்டிருக்கிறது. இங்கு ஸ்ரீரங்கநாதர் பெரிய திருமேனியுடன் பக்தர்களுக்கு ஸேவை ஸாதிக்கிறார். இந்தத் திருப்

பணிக்கு பக்தர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தாராளமாகப் பொருள் உதவி செய்யும்படி வேண்டுகிறோம். விலாசம்: ஸ்ரீ C.K. நரஸிம்மாசாரி, தலைவர், திருவரங்கம் ஸ்ரீரங்கநாத ஸ்வாமி ஜீர்ணோத்தாரணத் திருப்பணிக் குழு, 17–A, ரெங்கநாதபுரம் 2–வது தெரு, மதுரை–9.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## TAIRUNAANGOOR THIRUVANNPURURUSHOTHAM DEVASTHANAM

Our Ancestors built marvellous Temples for our welfare. Alas we are not able to maintain them properly. The above Divya Desam is a very sacred one. Kumudavalli Nachchiaar Sametha Thirumangai Azhwar—in His Peria Thirumozhi 4-2 has given superlative praise to this Temple. The Divya Dhampathis HERE give sevai like the greatest *manmatha* and with *Koti Surya Prakaasam*. The Temple was in a state of disrepair for long and the Trustees and their friends have been struggling hard and have—after many years of arduous work—completed the work of repairs fairly fully and did Samprokshanam recently. Yet, much more remains to be done. We beg to appeal to the rich Bakthas to correspond with the Trustee, Sri Purushotham Temple, Thirunangoor, Via, Mangaimadam, Shiyali Taluk, Tanjore District and do some of the remaining items one by one.

THE LITTLE FLOWER CO., Madras-17, 14-11-1977.

## BADRINATH TEMPLE TO BE RENOVATED

RISHIKESH, July 10, 1977

The Badrinath temple is to be renovated at a cost of Rs. 35 lakhs. The Badrinath Kedarnath Mandir Samiti, which took this decision at its meeting here today, resolved to seek donations for the purpose. The Samiti also decided to construct a Rs.1-crore building at Rishikesh to provide accommodation for 25,000 pilgrims.—*Samachar*

—*The Hindu*, **11-7-1977**

## ஸ்ரீ ரங்கநாத பாதுகா வித்யாலய டிரஸ்ட் வித்யார்த்திகள் தேவை

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதாண்டவனால் ஸ்ரீரங்கத்தில் நடத்தப்பட்டு வருகிற ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயத்திற்கு ஸம்ஸ்கிருத ப்ரவேச பரிக்ஷை (Sanskrit Entrance Examination) எழுதுவதற்கு ஸ்ரீவைஷ்ணவ வித்யார்த்திகள் தேவை. தேர்ந்தெடுக்கப்பட்ட வித்யார்த்திகளுக்கு மாதந்தோறும் உதவித் தொகை ரூபாய் ஐம்பதும், இலவசச் சாப்பாடும், இதர வசதிகளும் செய்து கொடுக்கப்படும். சேர விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு மனு செய்து கொள்ளவும்—பிரின்ஸிபால், ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயம், 155, கீழ் உத்தர வீதி, ஸ்ரீரங்கம்—620006.

இதைக் காணும் நண்பர்கள் தகுதியுள்ள பையன்களைச் சிபாரிசு செய்ய வேண்டுகிறோம்.

ஏ. ஸ்ரீநிவாஸராகவன்,
பிரின்ஸிபால்.

ஸ்ரீ:

## லிப்கோவின் ஸ்ரீசடாரி கைங்கரியம்

புதிதாக அமைக்கும் திருக்கோவில்களுக்கும் புராதனக் கோயில்களுக்கும் எமது எளிய கைங்கரியமாக தாமிரத்தாலான ஸ்ரீசடாரியைப் பல ஆண்டுகளாக ஸமர்ப்பித்து வருகிறோம். இது வரை 765 ஸ்ரீசடாரிகளை ஸமர்ப்பிக்கும்

பாக்கியத்தைப் பெற்றுள்ளோம்.

வசதியுள்ள திருக்கோயில்களிலும் எம்முடையதாக இருக்கவேண்டுமென்று நாங்கள் பிராத்தித்து ஸ்ரீசடாரி ஸமர்ப்பிப்பதும் உண்டு.

இது ஒன்றே, இது ஒன்றே, ஆஸ்திகத்துக்கு அணில்போல இச்சிறிய ஸ்தாபனம் செய்யும் ஸேவை.

22–3–1978

இந்த ஸ்ரீசடாரி கைங்கர்யம் தவிர வேறு எந்தக் கைங்கரியமும் செய்யும் வசதி தற்சமயம் இந்த ஸ்தாபனத்திற்கு இல்லாமையால் ஸ்ரீசடாரி தவிர, வேறு கைங்கரியத்திற்காக எங்களை யாரும் நாட வேண்டாமெனப் பணிவுடன் விஜ்ஞாபித்துக் கொள்கிறோம்.

—லிப்கோ பதிப்பகத்தார்,
சென்னை—17.

## ஒரு அவசரமான பிரார்த்தனை

மக்களைக் காக்க மஹாவிஷ்ணு மாபெரும் கருணைக் கடல்களான ஆழ்வார்களை அனுப்பினன்.

எனவே, மயர்வற மதிநலம் அருளப் பெற்ற அவர்தம் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை மூலம் மட்டும் அழகாக அச்சிட அவனை எப்போதும் பிரார்த்தித்து வருகிறோம். இது தங்கமாக வெளிவந்து, ஸர்வ லோக யோக க்ஷேமத்திற்கு எப்படி எல்லாம் வெளியிட்டால் நலமாக இருக்கும் என்ற யோசனைகள் பக்த சிகாமணிகள் க்ருபை கூர்ந்து உடனே எங்கட்குத் தெரிவித்துக் கோடி புண்யம் தேடிக் கொள்ளுமாறு ப்ரார்த்திக்கிறோம்.

சென்னை—17
19—3—1978

தி லிட்டில் பிளவர் கம்பெனி
''லிப்கோ பதிப்பகம்

ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து

ஸ்ரீ:

## ஸ்ரீபரகால மடம் ஜீயரால் பாராட்டப் பெற்றவர்கள்

சென்னை, ஸ்ரீபுரத்தில் ஸ்ரீஉ. வே. T. K. ராஜகோபாலாச்சரியார் ஸ்வாமி திருமாளிகையில் 25—6—1977ல் நடந்த ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவரின் டோலோத்ஸவத்தில் பிரபல தேய்வீக ஸ்தோத்ர பாடகி ஸ்ரீமதி மணிகிருஷ்ணஸ்வாமி அவர்கள் பல சுலோகங்களை மனமுருகப் பாடினர். இதைப் பாராட்டி ஜீயர் ஸ்வாமிகள் அவருக்கு ''ஸங்கீதாம்ருதலஹரி'' என்ற விருது அளித்து ஆசி கூறினர்கள். அதே ஸமயத்தில் பல நூல்களின் மூலம் ஸ்ரீ ஹயக்ரீவன் மஹிமையை உலகுக்கு வெளியிட்டு வருகின்ற ''லிப்கோ'' ஸ்தாபகர் ஸ்ரீசடாரி ஸேவக, பக்தி ப்ரசாரண ப்ரவீண ஸ்ரீ உ. வே. V. கிருஷ்ணஸ்வாமி சர்மா ஸ்வாமிக்கு ''ஸ்ரீ ஹயக்ரீவ ஸேவாரத்நம்'' என்ற விருது அளித்தார்கள். மற்றும் மேற்படி ஸ்தாபனத்தின் காரியதரிசி சாந்திஸம்பந்த ப்ரஹ்மஸ்ரீ கல்யாணம் அய்யர் அவர்களுக்கு ''ஸ்ரீ சடகோபதாஸன்'' என்றும் ஸ்ரீஹயக்ரீவ சரித்திரத்தை ஸங்கீத உபந்நியாசமாக முதன் முறையாகச் செய்து மகிழ்வித்த மேற்படி லிப்கோவின் மானேஜர் ஸ்வதர்மநிரத, சிஷ்டப்ரேஷ்ட, ஸகல கலாகுசல, செந்நெறிச் செம்மல் பிரஹ்மஸ்ரீ வே. வெங்கடேசன் அவர்களுக்கு ''ஸ்ரீ ஹயக்ரீவ தாஸன்'' என்றும் விருதுகளை அளித்து ஆசி கூறினர்கள்.

18, துகாராம் முதல் தெரு,
தியாகராயநகர்,
சென்னை—17,
21—10—1977.

வித்யாவிசாரத, ந்யாயரத்ந
கிழாத்தூர் ஸ்ரீநிவாஸாசாரியர், P.O.L.,
Dept. of Sanskrit, Jain College.

ஸ்ரீ:

# ஸாத்விக த்யாகம்

## (ஸ்ரீமதி விஷ்ணுப்ரியா சாரியார்

(பக்கம் 5—ம் காண்க)

'ஸாத்விகத்யாக ஸம்பந்ந ஸத்கர்ம க்ருததிப்ரியாய' என்று ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவனுக்கு ஸஹஸ்ரநாமங்களில் ஒரு திருநாமம். ஸாத்விகத்யாகத்துடன் செய்யும் ஸத்கார்யங்களினால் அவருடைய திருவுள்ளம் உகக்கிறது. பகவத் ராமானுஜரும் தன்னுடைய நித்யக்ரந்தத்தில் இதன் அவச்யத்தை வலியுறுத்தி "ஸ்வஸ்மைப்ரீதயே ஸ்வயமேவ ப்ரதிபாதயிதும் உபக்ரமதே" என்பதனால், இதன் மகத்வம் ஸ்வத:ஸித்தமாகிறது. இதன் முக்கியத்தை வலியுறுத்தும் நோக்கத்துடன் மறுபடியும் இதைப்பற்றி கீழே அச்சிடப்பட்டுள்ளது. அனைவரும் இதைப்படித்து உய்யுமாறு பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

இந்த பிரபஞ்சத்திலேயே நம் பாரத பூமிக்கு ஏனைய மற்ற எல்லா ஏற்றங்களைக்காட்டிலும் சிறந்ததான சிரோமணியான ஏற்றம் என்னவெனில் பாரதவாசிகள் பலர் முமுக்ஷுக்களாக இருப்பதுவேதான். இப்படிப் பட்ட முமுக்ஷுக்களுக்கும் மோக்ஷம் பெறுவதற்குத் தடையாய் இருப்பது பாவ புண்ணிய கர்மங்களின் பலன் ஆத்மாவை ஒட்டுவதாலேதான். முதலில் 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது. நம்மால் என்ன செய்யமுடியும்? நாம் எதுவும் செய்யவில்லை' என்ற எண்ணம் வேண்டும்.

பகவத்கீதையில் கண்ணன் "ப்ராமயந் ஸர்வ பூதாநி யந்த்ராரூடானி மாயயா" என்று சொல்வதிலிருந்து எம்பெருமானுடைய லீலாவிபூதியில் யந்திரத்தில் ஏற்றப்பட்டவர்கள்தான் நாம் என்பது தெள்ளெனத் தெரிகிறது. அதனால் எதையுமே நாம் செய்வதாக நினைப்பது அறிவீனம். இதைத்தான் பெரியவர்கள் கர்மந்யாஸம் செய்யவேண்டும் என்று நமக்கு சொல்கிறார்கள். கர்ம ந்யாஸம் என்பது கர்த்ருத்வ த்யாகம், மமதா த்யாகம், பலத்யாகம் என்ற மூன்றும் அடங்கியதாகும். அதாவது எதையும் நான் எனக்காக செய்கிறேன் என்கிற எண்ணம் கூடாது.

"சுபா சுப பலைரேவம் மோக்ஷ்யஸே கர்ம பந்தனை: ஸந்யாஸ யோக யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி" என்கிற பகவத்கீதை ச்லோகத்தின்படி எதையும் கண்ணனுக்கு அர்ப்பணம் செய்ய, கருமமெனும் தளையிலிருந்து விடுபட்டு முக்தி பெற்று அவன் திருவடியைச் சேரலாம் என்று உறுதி கூறுகிறது.

பகவத்கீதை 5—வது அத்யாயம் கர்மந்யாஸ யோகம் முழுவதிலும் கண்ணன் பலமுறை இதையேதான் கூறுகிறான்.

"ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய
ஸ்ருஜதிப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம்
ஸ்வபாவாஸ்து ப்ரவர்த்ததே ॥

என்கிற ச்லோகத்திலிருந்து கருமங்களைச் செய்யும் அதிகாரத்தையும் பலன்களையும் உண்டாக்குவது ஆத்மா அன்று; பிரக்ருதிவாஸனைதான் என்று தெரிகிறது அதாவது இந்த பிரக்ருதி மண்டலத்தில் கட்டுப்பட்ட சரீர ஸ்வபாவமே எதையும் தாம் செய்வதாக நினைக்கப்பண்ணுகிறது. அதனாலேயே தன்மையுள்ள ஆத்மா மேலும் அல்லலுறுகிறது.

கர்மத்தில் கர்மமில்லாத் தன்மையைக் காண்கிறவனும் கர்மமில்லாத் தன்மையில் கர்மத்தைக் காண்கிறவனுமே புத்திசாலி. அவன் ஸகல கர்மங்களையும் அனுஷ்டித்தவனாகிறான் என்று கண்ணன் கூறுகிறான். ஜன்மாந்தரங்களில், நாம் செய்த பிராரப்த கர்மவினையால் இந்த ஜன்மம் எடுத்துள்ளோம். அதை இனி அழிக்க முடியாது. வரும் ஜன்மங்களுக்காக சேர்த்து வைத்திருக்கும் 'ஸஞ்சிதம்' என்கிற பாபத்தையும் புண்ணியத்தையும் இந்த ஜன்மத்தில் செய்த பாபபுண்ணியத்தையும் அவன் திருவடிகளில் ஸமர்ப்பித்து வருவதன் மூலம் ஒழித்துவிடலாம். அப்போதுதான் இனியாவது ஜன்மம் இல்லாதிருக்கும். புண்ணியம் கூட ஆத்மாவின் விரோதிதான். ஏனெனில் புண்ணிய பலனை அனுபவிக்க மறு ஜன்மம் எடுக்க நேரிடும். அதனாலேயே எதையும் "ஸ்வஸ்மை ஸ்வயமேவ காரயதி" என்றும் "காரிதவான்" என்றும் சொல்லி அதன் பலன் நம்மை ஒட்டாமல் செய்கிறோம். இதைத்தான் கண்ணன்,

யத்கரோஷி யதஸ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம் ॥

என்று எல்லாவற்றையும் தனக்கு அர்ப்பணிக்கச் சொல்கிறான்.

மோக்ஷமே இந்த கர்மந்யாஸத்தால் கிடைக்கும் என்கிறபோது இகத்தில் வேண்டிய பலன்களைப்பற்றி கேட்க வேண்டுவதே இல்லை. எதுவும் என்னால் இல்லை என்ற அகிஞ்சத்வமே நமக்கு எதையும் பெற்றுத்தரவல்ல கற்பக விருக்ஷம். கர்மவசத்தினால் ஆக்ஞா, அனுக்ஞா, காமம் என்கிற மூன்றுவித கர்மங்களையும் நாம் செய்துவந்தாலும் அவைகளின் பலனை பேறு பெற முதல் தேவை ஸாத்விக த்யாகம் என்கிற கர்மந்யாஸமே. அப்படி செய்துவிட்டால் எப்பொழுதும் நாம் கர்மங்களை செய்து கொண்டிருந்தாலும்எம்பெருமானுடைய அருளால் நிலையான ஸ்தானத்தை அடைவோம்.

''ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்ய பாச்ரய : ।
மத்ப்ரஸாதாதவாப்நோதி சாச்வதம் பதமவ்யயம் ॥

என்பதால் இந்த ஸாத்விக தியாகத்தின் முக்கியத்வம் விளங்குகிறது. வாயால் செயலால் ஸாத்விகத்யாகம் செய்யாவிட்டால்கூட, புண்ணிய கர்மாவை செய்ய ஆரம்பிக்கும் முன்னே மனத்தளவிலாவது அஹங்காரத்தை விட்டு 'எம்பெருமானே தன் திருப்திக்காக, தானே, நம்மூலம் செய்விக்கிறான்' என்று நினைப்பதுவே உஜ்ஜீவிக்க வழியாகும்.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

திருவயிந்திரபுரம் ஔஷத கிரியில் ஸ்ரீ ஸ்வாமி தேசிகனுக்கு கருத்மான் ப்ரத்யக்ஷமாகி, ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரத்தை உபதேசிக்க, அதனால் ஆசார்ய ஸார்வபௌமன் மந்த்ர ஸித்தி பெற்றஇந்த புனிதமான இடத்தில் ஞாபகச் சின்னமாக மண்டபம் ஒன்று அமைக்க அனுமதி கோரி திருவயிந்திரபுரம் சென்ற சமயம் அடியவர்க்கு மெய்யன் கைங்கர்யத்தை அடியோங்கள் அணிலின் கைங்கர்யம் போல் மஹா விச்வாஸத்துடன் செய்ய முன் வந்ததை தேவஸ்தானத்தார் திருவுள்ளமுகந்து திருக்கோயிலில் அடியோங்களுக்கு அநுக்ரஹித்த திவ்யப்ரஸாதம்.



—லிப்கோ பதிப்பகத்தார்

பிங்கள ஹு
ஆடி மீ 14௳

## பிழை திருத்தம்

பக்கம் 38—ல் ''பிள்ளையந்தாதியும் அடைக்கலப்பத்தும்'' என்ற தலைப்பில் 9—வது வரியில் ''செய்துள்ள'' என்ற வார்த்தைக்குப் பிறகு கீழ்கண்ட வார்த்தைகள் சேர்த்து வாசிக்கவும்

''அடைக்கலப்பத்தையும், கீழே கூறியுள்ளபடி அநுஸந்தித்து வந்தால்''

பக்கம் 4—ல் ''ஸ்ரீ விஷ்வக்ஸேந ஆராதனம்'' என்ற தலைப்பில் 3—வது வரியில் ''வேதாந்தாந்தாசார்யவர்யோமே'' என்றிருப்பதை ''வேதாந்தாசார்யவர்யோமே'' என்று வாசிக்கவும்

ஸ்ரீ:

# ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் தபோ மண்டபம்

''வேதாந்த தேசிகன்'' என்ற பாவநமான திருநாமத்தை உச்சரிக்கும்போதே ஸ்ரீ விசிஷ்டாத்வைதத்திற்கும் ஸ்ரீ வைஷ்ணவத்திற்கும் அவர் ஆற்றியுள்ள அரிய ஸேவைகள், அவருடைய ஜயஸ்தம்பங்களாக நம் அகக் கண்முன் தோன்றி, நம்மைப் பரவசப்படுத்துகின்றன. இம்மஹாபுருஷரின் அதிசயமான ஆற்றலுக்குக் காரணம்தான் என்ன?

அன்று, அவர் திருவஹீந்த்ரபுரத்தின் திருமலையான ஔஷதகிரியில் தவம் புரிந்து, கருடமந்த்ரத்தை ஜபித்து, பெரிய திருவடியைத் தர்சித்து, அவர் உபதேசித்த ஹயக்ரீவ மந்த்ரத்தை ஜபித்து, ப்ரத்யக்ஷமான அப்பெருமாளின் அனுக்கிரஹத்தைப் பெற்றதும் தான்.

இந்த அத்யத்புதமான நிகழ்ச்சியின் ஞாபகார்த்தமாகஸ்ரீதேசிகன்தவம்புரிந்த அதே பவித்ரமான இடத்தில் ஓர் மண்டபத்தை எளிய முறையில் நிறுவும் பெரும் பேற்றினை அடியோங்கள் பெற்றுள்ளோம். ஸ்ரீஸ்வாமிதேசிகன், திருமலையாளின் திருமணியின்—கண்டையின்—அவதாரம் என்பதனை ஆஸ்திகர்களின் நினைவில் நிறுத்தும் வகையில் அமைக்கப் பெற்றுள்ள திருமணியையும், அதன் கைப்பிடியின் மீது கம்பீரமாக வீற்றிருக்கும் ஸ்ரீஹயக்ரீவப் பெருமாளையும், இருமருங்கிலும் பகவத் ஸேவாநிரதர்களான பெரியதிருவடியையும் சிறிய திருவடியையும் இப்படத்தில் காணலாம்.

—லிப்கோ பதிப்பகத்தார்

*Continued from page 36*

Photographs of some more very important persons, possessed of many a golden quality; who in our sincere opinion, owed their success, also to their wearing of the caste-mark with very firm belief (Maha Viswaasam)



லோகசபையின் ஸபாநாயகராகவும், பீஹார் கவர்னராகவும், திருப்பதி கேந்த்ரீய வித்யாபீடத்தின் தலைவராகவும், பார்லிமெண்டு மதிப்பீடு தணிக்கைக் கமிட்டியின் தலைவராகவும், இன்னம் பலவித பதவிகளை வஹித்த வருமான ஸ்ரீ உ. வே. அனந்தசயனம் அய்யங்கார் ஸ்வாமி.



கோவையின் பிரபல தொழில் அதிபரும், ராதாகிருஷ்ணு மில்ஸ் சேர்மனும் தொழில் அதிபர்கள் ஆர். வெங்கடசாமி நாயுடு பி. ஆர். ராமகிருஷ்ணன் ஆகியோரின் தந்தையுமான திரு. V. ரங்கசாமி நாயுடு.



இந்தியாவின் தலைசிறந்த சரித்திரப் பேராசிரியர்களுள் ஒருவரான ஸ்ரீ உ.வே. K.V. ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி. உயர்ந்த குடும்பத்தில் உதித்தவர். சென்னையில் பச்சையப்பன் கல்லூரியில் சரித்திரப் பேராசிரியராகவும், கேரளத்தில் மஹாராஜாக் கல்லூரியில் முதல்வராகவும், பணிபுரிந்து கல்வியுலகில் பெரும் புகழ்பெற்று விளங்கினார். தர்மசாஸ்திரத்தைச் சார்ந்த பல அபூர்வமான கிரந்தங்களை ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். இவருடைய பல ஆராய்ச்சிக் கருத்துக்கள் துணிந்த முடிவுகளாக ஏற்கப்பட்டு அறிஞர்களின் ஆட்சியில் இடம்பெற்றுள்ளன. திருப்பதி ஓரியண்டில் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட் என்ற ஆராய்ச்சி நிறுவனத்தின் நிர்வாஹகராகவும், அதனைச்சார்ந்த ஆராய்ச்சி ஸஞ்சிகையின் பதிப்பாசிரியராகவும் பணி புரிந்து பெரும் புகழ் எய்தினார்.

மஹா மஹோபாத்யாய, அபிநவ பட்டபாண, சப்த தர்க்காலங்கார வித்யாபூஷண, பண்டிதராஜ, வித்வத் கவி ராயம்பேட்டை R. V. க்ருஷ்ண மாசார்ய ஸ்வாமி. சதுச்சாஸ்த்ர பாரங்கதர். ஸம்ஸ்க்ருதத்தில் பல பல ஆராய்ச்சி நூல்களையும், உரைகளையும், மாணவர்களுக்கான பாட புத்தகங்களை யும் இயற்றியவர். இவருடைய ''காதம்பரீ ஸங்க்ரஹம்'', ''ஹர்ஷசரித ஸங்க்ரஹம்'' என்ற இரு நூல்களும் இவரது ஜயஸ்தம்பங்களாகும்.

பல பாஷைகளிலும் வல்லுநராக விளங்கிய இவர் முதன் முதலாக மலையாளம் பண்டிதராகக் கல்வியுலகில் பிரவேசித்தது குறிப்பிடத்தக்கது. இவர் ''ஸஹ்ருதயா'' என்ற ஸம்ஸ்க்ருத பத்ரிகையையும், ' 'காளிதாஸர்'' என்ற தமிழ்ப் பத்ரிகையையும் நடத்தித் தலைசிறந்த இலக்கிய ஸேவை புரிந்தார்.





மேற்படி ஸ்வாமியின் திருக்குமாரர் ஸ்ரீமான் R.K. பார்த்தஸாரதி M.A.L.T., அவர்கள், ஹிந்தி, ப்ரெஞ்ச், ஜர்மன் முதலிய மொழிகளில் பட்டம் பெற்றுள்ளார். 30 வருஷங்களுக்கு மேலாக கல்லூரிகளில் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராகவும், பல ஸர்வகலா சாலைகளில் பரீக்ஷாதிகாரியாகவும், Government Oriental Manuscipts Library-ல் Curator ஆகவும் பணிபுரிந்து சென்னை மாநிலக் கல்லூரியினின்று ஓய்வு பெற்றுள்ளார். தற்போது லிப்கோவின் கௌரவ பதிப்பாசிரியராக துணைபுரிந்து வருகிறார். இவர் பல்லாண்டு, பல்லாண்டு **வாழ்க!**

"முயற்சி திருவினையாக்கும்" "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்பனபோன்ற பொன்மொழிகளைச் தலைசிறந்த முறையில் மெய்ப்பித்துள்ளவர். ப்ரஸித்திபெற்ற லிப்கோ ஸ்தாபனத்தின் ஸ்தாபகர் ஸ்ரீசடாரி ஸேவக, பக்தி பரசாரணப்ரவீண, ஸ்ரீஹயக்ரீவ ஸேவாரத்னம் ஸ்ரீஉ.வே.V. கிருஷ்ணஸ்வாமி சர்மா ஸ்வாமி. கடந்த 50 ஆண்டுகளாக, தமது பெருமைவாய்ந்த புஸ்தகங்கள் மூலம் பக்தியையும், ஞானத்தையும் பல வாறுகப் பரப்பி, பண்டிதர்களுடையவும், பாமரர்களுடையவும், மதாசார்யர்களுடையவும், நன்றி கலந்த பாராட்டைப் பெருமளவில் பெற்றுள்ளார். இவர் தமக்கெனக் கைக்கொண்டு கடைப்பிடித்துவரும் சீரிய கொள்கைகள் பலப்பல. அவற்றுள் ஒன்று எந்த நேரத்திலும் பளிச்சென்று பிரகாசிக்கும் திருமண்காப்பு இட்டுக்கொள்வதாகும்.



திருமண்ணும், ஸ்ரீ சூர்ணமும் பெருமாளுடையவும், பிராட்டியினுடையவும் அனுக்ரஹ சின்னங்கள் என்றும், அவை ஸ்ரீ வைஷ்ணவனின் ரக்ஷைகள் என்றும், அதிலும் இரவு நேரங்களில் பேய், பூதங்கள் போன்ற துஷ்ட சக்திகளை அறவே அழித்திடும் பேராற்றல் அவற்றுக்கு உண்டென்றும் இவருடைய அன்புத்தாயாரும், மற்ற சிஷ்டர்களும் இவருக்கு இவருடைய இளம்வயதில் போதித்த உபதேசங்களை இன்றும் ஒருசிறிதும் பிறழாது போற்றிக் காப்பாற்றிவரும் உத்தமர் இவர்.



ஸ்வதர்ம நிரத, சிஷ்டப்ரேஷ்ட, ஸகலகலா குசல, செந்நெறிச் செம்மல், ஸ்ரீஹயக்ரீவதாஸ ப்ரஹ்மஸ்ரீ வே, வேங்கடேச ஐயர், லிப்கோ ஸ்தாபனத்தின் நிர்வாஹகராகப் பணிபுரிந்து அதனைப் பலவாற்றாலும் சிறப்பித்துள்ளார். ஸ்தாபகரும், இவரும் ஒன்று சேர்ந்து பல இன்னல்களைத் துணிவுடன் கடந்து ஸ்தாபனத்தை வளர்த்துள்ள வழிகள் வரலாற்றுச் சிறப்புடையவை. தன்னடக்கத்தின் உருவாகத் திகழும் இவர் காரியாலயத்தின் வேலைகளையும் கவனித்துக்கொண்டு பஜனை போன்ற ஸத்காரியங்களிலும் ஈடுபடுவது போற்றத்தக்கதாகும். இவரும் லிப்கோ ஸ்தாபகரும், நெற்றிக்குறியிடாத ஹிந்துக்களைக் கண்டால் மனம் வருத்தமடைவதுடன், அவர்களைத் தாக்ஷிண்யமின்றி — சற்று கோபத்துடனும்கூட — நெற்றிக்குறியிடுவதின் அவசியத்தை உபதேசித்து அவர்களை ஸன்மார்க்கத்தில் திருப்ப முயற்சி செய்துகொண்டே இருக்கின்றார்கள்.

# The Glory That Samskrita Is!

by

Prof. R. K. Parthasarathi, M.A., L.T.,
Dip. in French and German,
Professor of Sanskrit (Rtd.).

Acharya Dandin, the reputed rhetorician, says in his Kavyadarsa that Samskrita is a Divine language and that it has been refined and expounded by great sages (like Panini, Patanjali, Katyayana and others.)

To glorify that immortal language with a mortal pen is foolhardiness, pure and simple, that should be placed on a par with that of a person who desires to illumine the sun with the light of a glow-worm.

The very formation of the word "Samskrita" gramatically, is on the basis of its being an embellishment of surpassing beauty. Quite rightly has the celebrated Bhartruhari said that Samskrita alone beautifies man.

As has been said of the Mahabharatha, whatever does not exist in the Sanskrit Language and Literature does not exist anywhere else in the world. In other words, this Language is so comprehensive and all-pervasive that it has not left any subject under the sun, untouched. And what it has touched has been turned into burnished gold! To quote but one or two instances, all that has been said by our ancients of superhuman wisdom, in the realm of Science, say, Mathematics, Astronomy etc., has been a matter of utmost wonder even to the gifted modern scientists. And then, look at the miracle of the entire Samskrita grammar having been condensed into just 14 short Sutras or pithy aphorisms, like a mighty tree having been packed into a tiny seed, which has thrilled that scholar-statesman, Pandit Jawaharlal Nehru, in no small measure.

To state that Samskrita is the mother of most languages of India and that its influence on every kind of Indian literature is very deep, is not the partisan view of a Sanskrit fanatic. On the other hand, it is the considered opinion of many a foreign savant and Indologist who has studied this glorious Language, the hard way. Let us hear what Max Muller, that great German scholar of indefatigable energy and enthusiasm, who edited the Rigveda, the pride of India, nay, of the whole world, for the first time, for the immense benefit of the scholarly world, has said of the glory of Samskrita: "And if I were to ask myself from what literature, we, here in Europe, we, who have been nursed almost on the thoughts of Greeks and Romans and of one Semite race, the Jewish, may draw that corrective which is most wanted in order to make our inner life more perfect, more comprehensive, more universal, in fact, more truly human life, a life not for this life only but a transfigured and eternal life-again, I should point to INDIA."

Emerson, the greatest of thinkers, has obsrved thus: "If the Veda is sublime as heat and light and breathless ocean, it contains every religious sentiment, all the grand ethics which visit in turn each noble poetic mind."

This great Language which is condemned as a dead one by those who are themselves dead to the multifaceted beauty and efficacy of this language, is as much alive as any other modern language. The

very word 'Bhasha' which specially signifies Samskrita, means 'that which is spoken' and this makes it crystal-clear that it has been a spoken language, through the centuries. Panini and Patanjali, the 'Sutrakara' and the 'Bhashyakara', of Sanskrit Grammar, refer to the language as such — Bhasha, in their famous works. Patanjali has even referred to certain colloquialisms, in his illustrious Mahabhashya of which it is said that one should either read Mahabhashya or rule over a mighty country, the pleasure derived from both being of equal magnitude. Further, almost all the Sanskrit dramas had been put on board during Temple-festivals, congregations and the like, as stated in the Prologues, so that both the plebeians and the patricians, the literate and the illiterate, could enjoy themselves seeing the plays and undertanding the lines. How can we explain historical edicts and epigraphs having been worded in Samskrita, unless we presume that even the laity knew and even spoke that language in the past ?

Again, in the national Census, very many people of the north Indian States, especially Bihar and Rajasthan, have named Samskrita as their Mother Tongue. Have we not heard of a lady-member of the Legislative Assembly of Andhra Pradesh, having addressed the Legislators in chaste Samskrita? Was not Chintaman Dwarkanath Deshmukh, a Sanskrit Poet of no mean order and the ex-Finance Minister of the Government of India, in the habit of reciting extempore Sanskrit verses of his own, during debates in the Indian Parliament? One may be struck with wonder to know that all the members of certain families in Tamil Nadu where encouragement to Samskrita has been almost non-existent, converse in Samskrita among themselves. Do not these striking instances prove to the hilt that Samskrita is a lovely Live-language?

Most fortunately, Samskrita has been included in the fourteen national languages that can be made the *lingua franca* of India, thanks to the vigorous plea on its behalf by the late Dr. Ambedkar, one of the founding fathers of the Indian Constitution. Similarly, such mighty intellectuals as Rt. Hon'ble V. S. Srinivasa Sastri, Sir C. P. Ramaswamy Iyer, M. Ananthasayanam Iyengar, M. S. Aney, B. G. Kher, Kulapathi K. M. Munshi and N. V. Gadgil have, from time to time, championed the laudable cause of Samskrita, our richest heritage, and pleaded most convincingly for its adoption as the *lingua franca* of our hoary and holy country. All arguments against this sane and sensible proposal emanate from either a prejudiced or an ill-informed intellect.

In this connection, one may refer to a recent interview of Sri Raja Rao, a novelist, who is now teaching Philosophy at the University of Texas. He says that going away from Sanskrit has been a tragedy for India. He wishes that the Government of India, took a really honest stand and made Sanskrit the National Language of India. Asked as to whether English can become the national language of India he has replied "When you have the greatest language in the world (Sanskrit), why do you want English which is less interesting than Samskrit?" He is of the opinion that 'Sanskrit which is common to all languages should be the national language'. Regretting the slavish mentality of Indians he has observed: "Like everything else, we admire Sanskrit only when somebody else, the 'white man'? comes and says that Sanskrit is glorious". Desiring that all Schools should teach Sanskrit compulsorily, he has asked: "If in 150 years you have learnt English, why not Sanskrit?"

Need it be said that only by the sincere study of Samskrita can Mother India recapture her true and vital self consciousness, 'hear the music of her own voice and behold the beauty of her own face in the Mirror of Art.' But then, a word of caution needs to be uttered here. The cause of Samskrita should never be advocated at the expense of the vernacular languages. For one thing, this sort of approach has been the culture or Samskriti of Samskrita; intolerance is against its very grain. At the same time, if any vernacular bigot thinks that he can promote his language, completely eschewing the aid and influence of Samskrita, he will undoubtedly prove to be the most deluded man on earth! It should be realised betimes that the vernacular literatures can ill-afford to rebel against Samskrita, sever their affiliation with it and repudiate their deep debt of gratitude to it. If this is done, it will be only an act of cutting the nose for spiting the face.

In conclusion, it is earnestly hoped and prayed that we, Indians, heir to an invaluable and inestimable treasure-trove, viz., Samskrita, take a pious vow, right now, to study this language and its literature, with as much fervour and ardour as it is done by all right-thinking foreign scholars, the world over; otherwise, we would not have atoned for the heinous sin of having disregarded one's mother-of having neglected the study and promotion of Samskrita all these years.

Let us not waste our precious time in priding ourselves over the past glory of Samskrita but spend our time in practically living it, every minute of our limited span of life in this evanescent world.

*ALL GLORY TO SAMSKRITA THE LANGUAGE OF THE GODS !!*

*MAY IT BE ADOPTED AS, INDIA'S OFFICIAL LANGUAGE, WITH UTMOST REVERENCE !!!*

---

ஸ்ரீ:

## வேண்டுகோள்

மதுராந்தகம் தாலுகா, கடுக்கலூர் திவ்யதேசத்தில் ஸ்ரீ அம்புஜவல்லித் தாயார் ஸமேத ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவி ஸமேதராய் நின்ற திருக்கோலத்திலேயே தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு அபரிதமாக அநுக்ரஹித்து வருவது யாவரும் அறிந்ததே. பெருமாள், தாயார், ஆண்டாள் ஸந்நிதிகளுக்கு நூதனமாக விமானங்கள் அமைத்து ஸம்ப்ரோக்ஷணம் செய்ய சுமார் ரூ. 50,000/– தேவைப்படுகிறது. இதைக்கண்ணுறும் பக்தர்கள், தாராளமாகப் பொருளுதவிதந்து இந்த நற்பணியில் ஈடுபடும்படி கோரப்படுகிறார்கள். பொருள் அனுப்பவேண்டிய விலாசம்: பொருளாளர், ஸ்ரீ அம்புஜவல்லி ஸமேத ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் கோவில் திருப்பணிக் கமிட்டி, கடுக்கலூர் போஸ்டு, மதுராந்தகம் தாலுகா, செங்கற்பட்டு ஜில்லா.

ஸ்ரீ:

# தமிழில் ஸம்ஸ்க்ருதத்தை எழுதும் முறை

ஸம்ஸ்க்ருதத்தைப் போலவே தீந் தமிழும் தொன்மையானது; சிறப்பு வாய்ந்தது. கம்பநாடன் ஸ்ரீராமனின் ஆழ்ந்த அறிவை உணர்த்தும்போது "தென்சொற்கடந்தான் வடசொற்கு எல்லை தேர்ந்தான்" என்று கூறுகின்றான். தமிழ்நாட்டில் அவ்வப்போது தோன்றி, கல்வியுலகிலும் இலக்கியத் துறையிலும் பெயரும் புகழும் அடைந்த அறிஞர்களின் சரித்திரத்தைப் பார்த்தால், அவர்கள் உபயபாஷா பாண்டித்ய முடையவர்களாக அதாவது தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் தேர்ந்தவர்களாக விளங்கியுள்ளதைக் காணலாம்.

இத்தகைய பண்பட்ட, தொன்மை வாய்ந்த தமிழில் ஸம்ஸ்க்ருதத்தை நேருக்கு நேராக, அதே ஒலி உண்டாகும் வகையில் எழுத முடியாமலிருப்பது மிகவும் வருந்தத்தக்க ஒன்றாகும். இது இவ்விரு மொழிகளுள் எம்மொழியின் துரத்ருஷ்டமோ தெரியவில்லை. ஸம்ஸ்க்ருத நூல்களை, முக்யமாக ஸ்தோத்ரங்களை, தமிழில் ப்ரசுரிப்பவர்களுக்கு இது ஒரு பெருந்தடையாக இருக்கின்றது. ஸம்ஸ்க்ருத மெய்யெழுத்து வர்க்கங்களிலுள்ள முதல் நான்கு எழுத்துக்களுக்கும் ஒரே தமிழ் எழுத்தை வைத்துக்கொள்வதோ, தமிழ் எழுத்துக்கள் மீது 2, 3, என்ற எண் குறியீடுகள் தருவதோ வாசகர்களுக்கும் பதிப்பாளர்களுக்கும் மிகுந்த சிக்கலை ஏற்படுத்துகின்றது. ஏனைய த்ராவிட மொழிகளில் தெலுங்கு, கன்னடம் மலையாள மொழிகளில் இந்த ச்ரமமே கிடையாது.

ஸம்ஸ்க்ருத உயிரெழுத்துக்களைத் தமிழில் எளிதில் எழுதிவிடலாம். : என்ற வடிவமுள்ள விஸர்க்கத்தை அப்படியே எழுதிவிடலாம்; அல்லது "ஹ" என்ற க்ரந்த எழுத்தை வைத்துக்கொண்டு, ஸம்ஸ்க்ருத உச்சாரணத்திற்குத் தகுந்தவாறு ஹ, ஹி, ஹு ஹ என்றெல்லாம் எழுதிவிடலாம். ஸம்ஸ்க்ருதத்திலுள்ள, க, ச, ட, த, ப என்ற ஐந்து வர்க்கங்களிலுமுள்ள முதல் எழுத்துக்களையும், தமிழிலுள்ள எழுத்துக்களின் மூலம் எழுதிவிடலாம். ஆனால், இரண்டாவது மூன்றுவது நான்காவது எழுத்துக்களைத் தமிழில் எழுதும்போதுதான் ச்ரமம் ஏற்படுகின்றது. இதனைத் தவிர்க்க, அவ்வெழுத்துக்களுக்கு நேரான க்ரந்த எழுத்துக்களைத் தமிழில் அமைத்துக் கொண்டுவிடுவதே சிறந்த வழியாகும். ஏற்கனவே, ஜ, ஶ, ஷ, ஸ, ஹ என்ற எழுத்துக்களை க்ரந்த லிபிகளிலிருந்து எடுத்துக்கொண்டுள்ளோம். உண்மையில் ஸம்ஸ்க்ருத ஒலிகளையும் மற்றப் பாஷையிலுமுள்ள அதே ஒலிகளையும் தமிழில் கொணர்வதற்காகவே க்ரந்த லிபி உருவாக்கப்பட்டுள்ளது என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும். க்ரந்த எழுத்துக்களின் வடிவம் தமிழ் எழுத்துக்களின் வடிவம் போலவோ அவையாகவோ இருப்பது இக்கருத்தை வெகுவாகப் பலப்படுத்தும் ஓர் சான்றாகும். தமிழ் எழுத்துக்களை வடிக்கும் நிறுவத்தினர் இவ்வெழுத்துக்களை வடித்துள்ளனர். ஐந்து வர்க்கங்களுக்குமாக நமக்கு மேற்கொண்டு பதினைந்து க்ரந்த எழுத்துக்களே தேவைப்படுகின்றன. இவற்றையும் எழுத்து வடிப்பவர்கள் அமைத்துத் தந்துவிட்டால் அச்சகத்தினரும் அவற்றை உபயோகிப்பார்கள் என்பதில் ஐயமே இல்லை. இதுபற்றிய நமது பெருங்கவலையும் ஆதவனைக்கண்ட பனிபோல் நீங்கும்.

கீழே இருக்கும் படத்தில், தமிழில் இல்லாத ஸம்ஸ்க்ருத எழுத்துக்களுக்கு நேரான க்ரந்த எழுத்துக்களைக் காணலாம்.

| ஸம்ஸ்க்ருத எழுத்து | க்ரந்த எழுத்து | ஸம்ஸ்க்ருத எழுத்து | க்ரந்த எழுத்து |
|---|---|---|---|
| ख | [illegible] | द | [illegible] |
| ग | [illegible] | ध | [illegible] |
| घ | [illegible] | फ | [illegible] |
| ङ | [illegible] | ब | [illegible] |
| ज | ஜ* | भ | [illegible] |
| झ | [illegible] | श | ஶ* |
| ठ | [illegible] | ष | ஷ* |
| ड | [illegible] | स | ஸ* |
| ढ | [illegible] | | ஹ* |
| थ | [illegible] | | |

* இக்குறியிட்ட எழுத்துக்கள் ஏற்கெனவே உபயோகத்தில் இருக்கின்றன.

"முயற்சி திருவினையாக்கும்"?

---

## REMEMBER THIS

"In all human events and in all human activities there must be a METHOD, PURPOSE and an OVERALL PLAN THAT WILL WORK. Every businessman MUST use his brain to find the KEY to this PLAN and if he so does—only if he so does—he will be successful. There must be constant prayers for the success of the PLAN as THAT GRAND ARCHITECT ALONE IS CAPABLE OF FULFILLING ANY HUMAN PLANS AND ENDEAVOURS. SPEED is a *must*"

— ANON

# திருமலையில் செய்யக் கூடாதவை



1. அதிகமாகப் பணமோ நகைகளோ எடுத்துச் செல்லாதீர்கள்
2. அசைவ உணவைச் சாப்பிடாதீர்கள்.
3. மதுவையோ, போதைப் பொருள்களையோ அருந்தாதீர்கள்.
4. கோயிலைச் சுற்றிய புனிதமான இடங்களில் புகை பிடிக்காதீர்கள்.
5. காலணிகளை அணிந்து செல்லாதீர்கள்.
6. பெருமாளைச் சுலபமாகத் தரிசிக்கலாம் என்ற ஏமாற்றுக்காரர்களின் பேச்சைக் கேட்காதீர்கள்.
7. தங்கும் இடவசதிக்காகப் புது மனிதர்களை அணுகாதீர்கள்.
8. முடியிறக்கத் தனிப்பட்ட நாவிதர்களிடம் போகாதீர்கள்.
9. தெருவில் விற்பவர்களிடம் பிரசாதங்களை வாங்காதீர்கள்.
10. பெருமாளைத் தரிசிக்கவேண்டும் என்ற புனித நினைவைத் தவிர மற்றக் காரியங்களுக்காகத் திருமலை வராதீர்கள்.
11. முட்டி மோதிக்கொண்டு செல்லாமல் கியூவில் உங்கள் முறை வரும்போது அமைதியாகச் செல்லுங்கள்.
12. கோயிலைச் சுற்றிய இடங்களில் எச்சில் துப்பவோ அசுத்தப்படுத்தவோ கூடாது.
13. பழக்கவழக்கங்களுக்குட்பட்டு நீங்கள் கோவிலுக்குள் செல்வதற்குத் தடை இருந்தால் மீறிச் செல்லாதீர்கள்.
14. திருமலையிலுள்ளவரை மலர்களை அணியாதீர்கள்; எல்லா மலர்களும் பெருமாளுக்கே உரியவை.
15. இன்பக் கேளிக்கைகளில் ஈடுபடாதீர்கள்.

நிர்வாக அதிகாரி
**திருமலை திருப்பதி தேவஸ்தானம்**
திருப்பதி

With grateful acknowlegment to : KALAIMAGAL, April 1978 issue.

## AN ELDERLY GENTLEMAN OPINES....

The sacredness of wearing the Holy Thread by the Brahmins till their last bireath cannot be overemphasised. Smilarly, our Hindu ladies must wear their Thirumangalyam in the Holy Yellow Thread—Mangal Sutra — given by pious Veda Purushas at the time of marriage and renewed from time to time in the prescribed manner. It seems to be the fashion now-a-days to do away with the Holy Yellow Thread and to wear a gold chain in·tead which is highly improper, as it runs counter to Vedic Injunctions.

### ஸ்ரீ அஹோபிலமடத்தில் மூர்த்தாபிஷக்தராய் எழுந்தருளியிருந்த 42-ஆம் பட்டம் இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கரின் 100-வது திருநக்ஷத்ர வைபவமும் அஹோபில மடம் ஓரியண்டல் பள்ளியின் வெள்ளி விழாவும்



Block by courtesy: Sri Ahobila Mutt Oriental High School, Madras-33

சென்னை மேற்கு மாம்பலம் அஹோபில மடம் ஓரியண்டல் பள்ளியில் மேற்படி விழா 16–2–1978ல் மேதகு சென்னை கவர்னர் தலைமையில் கொண்டாடப்பட்டது. ஆளுநர் தமது உரையில் தர்ம சாஸ்த்ரங்கள், புராணங்கள் முதலியன ஸம்ஸ்க்ருதத்தில்தான் இருக்கின்றன என்றும், ஒப்பற்ற பணியை ஆர்வத்துடன் மேற்படி பள்ளிக்கூடம் செய்து வருகிறதென்றும் பாராட்டிப் பேசினார். ஸம்ஸ்க்ருதம்தான் எல்லா பாஷைகளுக்கும் மூலகாரணம் என்றும் அதனை அவசியம் கற்கவேண்டும் என்றும் த்ரிதண்டி நாராயண ஜீயர் ஸ்வாமி ஸாதித்தார். ஸ்ரீ காஞ்சீபுரம் ப்ரதிவாதி பயங்கரம், மாஹா மஹிமோபத்யாய ஸ்ரீமதுபயவே. அண்ணங்காராசார்ய ஸ்வாமி தமது உபந்யாஸத்தில் இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கர் சதுச்சாஸ்த்ர பாரங்கதர் என்றும், ஸ்ரீ ஸ்வாமி தேசிகனால் கூறப்பட்ட குணங்கள் அனைத்தும் நிரம்பியவர் என்று பல உதாரணங்கள் எடுத்துக் காட்டியும், இம்மாதிரியான நற்பணிகள் பள்ளியில் அடிக்கடி நடந்து பள்ளி உயர்ந்து விளங்க வேண்டும் என்றும் அனுக்ரஹித்தார்.

## A TACIT SPIRITUAL MANDATE TO ALL SRIVAISHNAVITES

### BY THE GREAT SRI BHASHYAKARAR

Sri Bhashyakarar could easily have had his Samaasrayanam at any Thenkalai Shrine; instead, HE chose to have it performed at the Vadakalai Temple of Madurantakam. This is a tacit Mandate that all Vadakalais and Thenkalais should live in complete amity with one another.

ஸ்ரீ ராமஜயம்

# நாம ராமாயணம்

ஸத்யம், தர்மம், பித்ரு வாக்ய பரிபாலனம், மாத்ருபக்தி, ப்ராத்ரு ஸ்நேகம், பதிவ்ரதா தர்மம், ஏகபத்நீவ்ரதம், சரணாகதரக்ஷணம் முதலிய குணவிசேஷணங்களை அடிப்படையாகக் கொண்டது ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம். "ப்ரஜைகள் எல்லோரும் ஸந்தோஷமாய்க் காலங்கழித்தார்கள்; எல்லோரும் தர்மத்தையே நாடின மனமுடையவர்களாயிருந்தார்கள்; தர்ம ஸ்வரூபியான ஸ்ரீராமனுடைய ஆசாரத்தையே ப்ரஜைகளும் அனுஸரித்து ஒருவரையொருவர் ஹிம்ஸிக்காமலிருந்தார்கள்" என்று ஸ்ரீவால்மீகி பகவான் பட்டாபிஷேக ஸர்க்கத்தில் ராம ராஜ்யத்தில் இருந்த ஸௌக்யங்களை மிகமிக அழகாக வர்ணித்திருக்கிறார். எனவே, ஸர்வலோக யோகக்ஷேமத்தை முன்னிட்டு "நாம ராமாயணம்" கீழே தந்துள்ளோம்.

ஓம் ஸ்ரீ ஸீதா லக்ஷ்மணபரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

***பால காண்டம்*** 1 சுத்த ப்ரஹ்ம பராத்பர ராம 2 காலாத்மக பரமேச்வர ராம 3 சேஷதல்ப ஸுக நித்ரித ராம 4 ப்ரஹ்மா த்யமர ப்ரார்த்தித ராம 5 சண்டகிரணகுல மண்டந ராம 6 ஸ்ரீமத் தசரத நந்தன ராம 7 கௌஸல்யா ஸுக வர்த்தநராம 8 விச்வாமித்ர ப்ரியதன ராம 9 கோர தாடகா காதக ராம 10 மாரீசாதி நிபாதக ராம 11 கௌசிக மகஸம்ரக்ஷக ராம 12 ஸ்ரீமதஹல்யோத்தாரக ராம 13 கௌதம முனிஸம்பூஜித ராம 14 ஸுரமுனிவரகண ஸம்ஸ்துத ராம 15 நாவிக தாவித ம்ருதுபத ராம 16 மிதிலாபுரஜன மோஹக ராம 17 விதேஹ மானஸ ரஞ்ஜக ராம 18 த்ரியம்பக கார்முக பஞ்ஜக ராம 19 ஸீதார்ப்பித வர மாலிக ராக 20 க்ருதவை வாஹிக கௌதுக ராம 21 பார்க்கவ தர்ப்ப விநாசக ராம 22 ஸ்ரீமதயோத்யா பாலக ராம

***அயோத்தியா காண்டம்*** 23 அகணித குணகண பூஷித ராம 24 அவநீதநயாகாமித ராம 25 ராகாசந்த்ர ஸமாநந ராம 26 பித்ருவாக்யாச்ரித காநந 27 ராம ப்ரியகுஹ விநிவேதித பத ராம 28 தத்க்ஷாலித நிஜ ம்ருதுபத ராம 29 பரத்வாஜமுகாந்தக ராம 30 சித்ர கூடாத்ரிநிகேதந ராம 31 தசரத ஸந்தத சிந்தித ராம 32 கைகேயீ தநயார்த்தித ராம 33 விரசித நிஜ பித்ருகர்மக ராம 34 பரதார்ப்பித நிஜ பாதுக ராம.

***ஆரண்ய காண்டம்*** 35 தண்டகாவந ஜந பாவன ராம 36 துஷ்ட விராத விநாசன ராம 37 சரபங்க ஸுதீக்ஷ்ண அர்ச்சித ராம 38 அகஸ்த்யாநுக்ரஹ வர்த்தித ராம 39 க்ருத்ராதிப ஸம்ஸேவித ராம 40 பஞ்சவடீ தட ஸுஸ்தித ராம 41 சூர்ப்பணகார்த்திவிதாயக ராம 42 கரதூஷணமுக ஸூதக ராம 43 ஸீதாப்ரிய ஹரிணாநுக ராம 44 மாரீசார்த்தி க்ருதாசுக

ராம 45 விநஷ்ட ஸீதாந்வேஷக ராம 46 க்ருத்ராதிப கதி தாயக ராம 47 சபரீ தத்த பலாசந ராம 48 கபந்த பாஹுச் சேதந ராம.

**கிஷ்கிந்தா காண்டம்** 49 ஹநுமத் ஸேவித நிஜபத ராம 50 நதஸுக்ரீவாபீஷ்டத ராம 51 கர்வித வாலி ஸம்ஹாரக ராம 52 வாநர தூத ப்ரேஷக ராம 53 ஹிதகர லக்ஷ்மண ஸம்யுத ராம.

**ஸுந்தர காண்டம்** 54 கபிவர ஸந்தத ஸம்ஸ்ம்ருத ராம 55 தத்கதி விக்ந த்வம்ஸக ராம 56 ஸீதா ப்ராணு தாரக ராம 57 துஷ்ட தசாநந தூஷித ராம 58 சிஷ்ட ஹநுமத் பூஷித ராம 59 ஸீதா வேதித காகாவந ராம 60 க்ருத சூடா மணி தர்சந ராம 61 கபிவர வசநு ச்வாஸித ராம.

**யுத்த காண்டம்** 62 ராவண நிதநப்ரஸ்தித ராம 63 வாநர ஸைந்யஸமா வ்ருத ராம 63 சோஷித ஸரிதீசார்த்தித ராம 65 விபீஷணுபய தாயக ராம 66 பர்வத ஸேது நிபந்தக ராம 67 கும்பகர்ண சிரச்சேதக ராம 68 ராக்ஷஸ ஸங்க விமர்த்தக ராம 69 அஹிமஹி ராவண சாரண ராம 70 ஸம்ஹ்ருத தசமுக ராவண ராம 71 விதிபவ முகஸுர ஸம்ஸ்துத ராம 72 கஸ்தித தசரத வீக்ஷித ராம 73 ஸீதா தர்சன மோகித ராம 74 அபிஷிக்த விபீஷணநத ராம 75 புஷ்பக யாநா ரோஹண ராம 76 பரத்வாஜாபிநிஷேவண ராம 77 பரத ப்ராண ப்ரியகர ராம 78 ஸாகேதபுரீ பூஷண ராம 79 ஸகல ஸ்வீய ஸமாநத ராம 80 ரத்ந லஸத் பீடாஸ்தித ராம 81 பட்டாபிஷேகாலங்க்ருத ராம 82 பார்த்திவ குல ஸம்மாநித ராம 83 விபீஷணர்ப்பித ரங்கக ராம 84 கீசகுலாநுக்ரஹகர ராம 85 ஸகலஜீவ ஸம்ரக்ஷக ராம 86 ஸமஸ்த லோகா தாரக ராம.

**உத்தர காண்டம்** 87 ஆகத முநிகண ஸம்ஸ்துத ராம 88 விச்ருத தசகண்டோத்பவ ராம 89 ஸீதாலிங்கந நிர்வ்ருத ராம 90 நீதி ஸுரக்ஷித ஜநபத ராம 91 விபிந த்யாஜித ஜநகஜ ராம 92 காரிதலவணுஸுரவத ராம 93 ஸ்வர்க்கத சம்புக ஸம்ஸ்துத ராம 94 ஸ்வதநய குசலவ நந்தித ராம 95 அச்வ மேதக்ரது தீக்ஷித ராம 96 காலா வேதித ஸுரபத ராம 97 ஆயோத்யகஜந முக்தித ராம 98 விதிமுக விபுதா நந்தக ராம 99 தேஜோமய நிஜரூபக ராம 100 ஸம்ஸ்ருதி பந்த விமோசக ராம 101 தர்ம ஸ்தாபந தத்பர ராம 102 பக்தி பரா யண முக்தித ராம 103 ஸர்வ சராசர பாலக ராம 104 ஸர்வ பவாமய வாரக ராம 105 வைகுண்டாலய ஸம்ஸ்தித ராம 106 நித்யாநந்த பதஸ்தித ராம 107 ராம ராம ஜயராஜா ராம 108 ராம ராம ஜய ஸீதா ராம.

பயஹர மங்கள தசரத ராம—ஜயஜய மங்கள ஸீதா ராம—மங்களகர ஜய மங்கள ராம—ஸங்கத சுப விபவோதய ராம—ஆநந்தாம்ருத வர்ஷக ராம—ஆச்ரித வத்ஸல ஜயஜய ராம—ரகுபதி ராகவ ராஜா ராம—பதித பாவந ஸீதா ராம.



DEVI PRESS, MADRAS.

ஸ்ரீ:

# "கோவிந்த நாம ஸங்கீர்த்தநம்"

श्रीमते लक्ष्मीहयवदनपरब्रह्मणे नमः
श्रीमते निगमान्तमहागुरवे नमः
श्रीमते श्रीसुन्दरतातयार्यमहागुरवे नमः

ஸ்ரீவிஷ்ணு புராணம் கலியுகத்தின் குணப்ரபாவங்களைப்பற்றிப் பரக்கப் பேசுகிறது. துவாபர யுகம் முடிந்து கலியுகம் தொடங்கியதுமே தர்மம் அழிந்து அதர்மமும், நாஸ்திகமும், தீய எண்ணங்களும் கொள்கைகளுமே எங்கும் நிலவி இருக்கும். சிறுகச் சிறுக இக் கலி ப்ரபாவங்களால் உலகம் தானே அழியும் என்று சுருங்கக் கூறப்பட்டிருக்கிறது. மதாந்தரஸ்தர்களின் அட்டஹாஸமான செயல்களால் நம் பெருமாள் விக்ரஹங்களுக்கும் ச்ருதப்ரகாசிகை போன்ற ஸம்ப்ரதாய கிரந்தங்களுக்கும் நேர்ந்த அபாயத்தைக் கண்டு உளம் வாடிய ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஸ்ரீஅபீதிஸ்தவத்தை அருளிச்செய்து அதன் முடிவில் எம்பெருமானை 'பரஸ்பர ஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய' என்று பிரார்த்திக்கிறார். அதாவது பரஸ்பரம் நல்லெண்ணம் கொண்ட மஹநீயர்கள் நடுவில் என்னை வாழும்படி செய் என்கிறார். ஆசார்ய ஸார்வபௌமருடைய உள்ளம் சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்னமேயே கலியுகத்தில் மக்களுடைய மனநிலையைக் கண்டு வருந்தியிருக்கிறதென்றால், இன்றைய நிலையில் நம் ஒவ்வொருவருடைய உள்ளமும் இதை நினைந்து உருகுகிறது. பேராசை, பொறாமை, சுயநலம் போன்ற தீய எண்ணங்களே நம் உள்ளங்களில் மண்டிக் கிடக்கின்றன. இந்நிலையில் ஆசாரம், சீலம் இவைகளுக்கெல்லாம் கொஞ்சமும் இடம் கொடுக்காத—கண்டதே காட்சி, கொண்டதே கோலமெனும் இந்தக் கலிகாலத்தில் எம்பெருமானின் கிருபையைப் பெறச் சுலபமான வழியென்ன? நம் முன்னோர்களான ருஷி, முனிவர்களைப்போல் தவமியற்ற முடியுமா? யாக யக்ஞங்கள் தாம் செய்ய முடியுமா? விஷ்ணு தர்மத்திலே சௌநகர் "காலம் கலிகாலமாயிற்று. ஸம்ஸாரிகள் உய்வதற்கு வேறொன்றும் உபாயமில்லாது போயிற்று. ஸர்வாதிகமான பகவந்நாம ஸங்கீர்த்தனமே ஆன்மாக்களுக்கு உஜ்ஜீவனமாயிருப்பது" என்று அருளிச் செய்திருக்கிறார்.

இப்படியும் நாமஸ்மரணம் செய்ய ஆசார்ய முகேன உபதேசம், நியமம், ஆசாரம் இவையெல்லாம் தேவையாயிற்றே. திருவஷ்டாக்ஷரம், த்வயம், சரமச்லோகம் இத்யாதியைப் போல் ஜபம் செய்ய ஜாதி வரையறை, நியமம் தேவையாயிற்றே என்று ஸந்தேகம் எழுகின்றது. எந்த பகவந்நாமாவை ஜபிப்பது என்றால் 'கலி ஸந்தாரண உபநிஷத்' ஒரு மிகச் சுலபமான வழி

யைச் சொல்கிறது. இது கலியுகத்தில் உள்ள தீய சக்திகளிலிருந்து நம் ஆன்மாவைக் காக்கும் மிகச் சுலபமான வழியைக் காண்பிப்ப தால் இதற்கு கலி ஸந்தாரண உபநிஷத் என்ற பெயரும் பொருத் தமாக இருக்கிறது. இதில் நாரதரும், ப்ரஹ்மாவும் பேசிக்கொள் வதாக உபதேசம் அமைந்திருக்கிறது.

நாரதர் ப்ரம்மாவைக் கலியிலிருந்து மீள வழியென்ன என்று கேட்கிருர். அதற்கு ப்ரஹ்மா அதி ரஹஸ்யமாக வைத்துக் கொள்ள வேண்டிய விஷயத்தைக் கூறுகிறேன். கேள். ஆதிபுருஷ ரான ஸ்ரீமந் நாராயணனுடைய நாமத்தை ஜபிப்பதே கலியை ஒழிக்கவல்லது என்று பதிலளிக்கிருர். நாரதர் மேலும் நாராயண னுடைய எந்த நாமத்தை ஜபிப்பது என்று கேட்கிருர். அதற்கு ப்ரஹ்மா பகவானுடைய ஷோடச அதாவது பதினறு நாமங்களைக் கொண்ட நாமங்களை ஜபிப்பதே கலிகல்மஷத்தை நசிப்பிக்கும். இதைத் தவிர ஸகல வேதங்களிலும் வேறெந்த உபாயமும் காணப் படவில்லை என்று கூறிக்கீழ்க்கண்ட மந்திரத்தைக் கூறுகிருர்.

**"ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரே ஹரே |**
**ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரேஹரே ||**

சூரியனை மறைத்த மேகம் விலகியவுடன் சூரியன் புனரபி பிரகாசிப் பதைப்போல மேற்கண்ட நாமத்தை ஜபிக்க ஆன்மா என்ற சூரி யனை, பகவானின் கைங்கர்ய பாக்யத்திலிருந்து விலக்கி வைத் திருக்கும் சரீரம் என்ற மேகம் விலகி ஆத்மா புனரபி எம்பெரு மானின் ஸாயுஜ்ய பதவியைப் பெறுகிறது. மேலும் நாரதர் இந்த நாமஸ்மரணைக்கு விதிமுறைகள், அங்கந்யாஸ கரந்யாஸ, புரச்சர் யாதிகள் ஏதாவது உண்டாவென வினவுகிருர். அதற்கு பிரம்மா எந்தவித விதிமுறையுமின்றி, ஜாதிமதபேதமின்றி எவரும் எப்பொ ழுதும் குளித்து மடியாகவோ அல்லது சுத்தமாக இல்லாவிட்டாலோ கூட எவரும் எப்பொழுதும் ஜபிக்கலாம் என்று விடையளிக்கிருர். அப்போது படிப்பவனுக்கு ஒருலக்ஷணம்மட்டும் கூறுகிருர். அவன் ப்ராஹ்மணன் என்று கூறுகிருர். பிறப்பால் ப்ராஹ்மணனு என் ருல் கிடையாதாம். வேறெப்படி என்ருல் 'வஜ்ரஸூசிகோபநிஷத்' தில் கூறியிருக்கிறபடி ப்ராஹ்மணன் யார் என்ருல் 'பரப்ரஹ்ம மாகிய ஸ்ரீமந் நாராயணனின் ஸாயுஜ்யபதவியை அடைய நினைப் பவனே ப்ராஹ்மணன்' ஆகையால் ஸ்த்ரீ, புருஷர், குழந்தைகள் எல் லோரும் எப்பொழுதும் மேற்கண்ட நாமங்களை ஸமயம் கிடைத்த போதெல்லாம் ஜபித்துக் கலிகாலத்தின் தீய பலன்களிலிருந்து விடு பட்டு மோக்ஷஸாம்ராஜ்யத்தைப் பெறலாம். கலி ஸந்தாரண உப நிஷத்தில் பிரம்மா இந்த நாமத்தை 3½ கோடி முறை ஜபித்தால் 'ப்ரஹ்மஹத்தி' போன்ற பாபங்களிலிருந்துகூட விடுபட்டு, தங்கத் தைப்போன்ற காந்தி பெற்றுத் தேஜஸ்வியாக விளங்கி, மற்றெந்த தர்மங்களையும் அனுஷ்டிக்காத பரமபாபியாக இருந்தாலும் இந்த நாமஸ்மரணை மட்டுமாவது செய்து உய்யப் பெறலாம் என்று மறு படியும் அறுதியிட்டுக் கூறுகிருர்.

அதனால் காலத்தை வீணே இதுவரை கழித்துவிட்டவர்கள், இனியாவது 'ஹரே ராம' மந்திரத்தை அனவரதமும் உச்சரித்துத் தம் குழந்தைகளுக்கும் இப்பொழுதே இதை உபதேசித்து அனுதினமும் பள்ளிக்கூடம், காலேஜ் முடிந்ததும் மாலைவேளைகளில் அரை மணி நேரமாவது ஜபிக்கச் செய்வது சாலச்சிறந்தது. ஒரு பேட்டையில் உள்ள மஹாஜனங்கள் ஒன்றுகூடி தினத்திற்கு ஒரு வீட்டில் மேற்கண்ட நாமத்தைக் கூட்டமாக ஜபித்து, புண்ணிய பூமியாகிய நம் பாரத பூமியிலிருந்து தீய சக்திகளை விரட்டியடிப்போம். பரலோகத்தில் மோக்ஷ ஸாம்ராஜ்யம் பெறுவது மட்டுமில்லாது இயந்திர வாழ்க்கை வாழும் இகலோகத்திலும் விலைமதிப்பற்ற மனநிம்மதியை அளவில்லாது பெறுவோம். நம் குழந்தைகள் பரம தேஜஸ்விகளாகவும், நல்ல ஆத்மகுணங்கள் நிறைந்தவர்களாகவும் உலகில் சிறந்த இடங்களை வகிப்பவர்களாகச் செய்ய நாம் இன்றே வழி வகுப்போம்.

"Paduka Rajyam"
19, Ramakrishna Nagar,
Pondicherry-3.

**"விஷ்ணுப்ரியா"**
(Smt. Vishnu Priya, M.A., B.SC.)

☞ இம்மாதிரியான ஸத்விஷயங்களில் மேற்கொண்டு விவரங்கள் தேவையானால் மேற்படி பக்தைக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

Madras-17, 14-11-1977 **—லிப்கோ பதிப்பகத்தார்**

---

## புதையல் காட்டிய பொன்னரங்கன்

தஞ்சாவூர் ஜில்லா சீர்காழி ரயில் நிலையத்திற்குத் தென் கிழக்கில் 8 மைல் தொலைவில் பஸ் மார்க்கத்தில் 'செம்பொன் செய் கோயில்' என்னும் இந்த திவ்ய தேசம் உள்ளது. இது திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் பெற்ற ஸ்தலம். இந்தச் சந்நிதியில் 3 நாட்கள் தங்கி, திருவஷ்டாக்ஷரத்தைக் குருவிடம் உபதேசம் பெற்றவர்கள் 33,000 தடவை ஜபம் செய்தார்களானால் **அவர்களுக்குச் செல்வம் கொழிக்கும் என்பதை** ஸ்தல வரலாறு கூறுகிறது.* மற்ற விவரங்களை—

**ஸ்ரீ S. லக்ஷ்மண பட்டாசாரியர், அர்ச்சகர், செம்பொன்னரங்கர் கோயில், திருநாங்கூர், (வயா) மங்கைமடம், சீர்காழி தாலுக்கா, தஞ்சாவூர் ஜில்லா** என்ற விலாஸத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

Madras-600017, 14-11-1977. —THE LIFCO PUBLISHERS

---

*In this connection, we beg to respectfully submit that we deputed, with all fervour and humility, one of our partners to the above Divya Desam who stayed there from 6-6-1975 to 8-6-1975 and did with extreme bhakti 33,000 times TIRU ASHTAAKSHARA JAPAM.

ஸ்ரீ:

# திரு வேங்கடாசலபதிசுவாமி திருக்கோவில்
# ஒப்பிலியப்பன் கோவில்

பொய்கையாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், திரு மங்கையாழ்வார் இவர்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டதும், ''திருவிண்ணகர்'' என்ற பெயர் பெற்றது இத்திவ்யதேசம். தமிழ்நாட்டுத் திருமலை—திருப்பதி எனத் திகழும் இந்த ஒப்பிலியப்பன் ஸந்நிதியில், திருமலையில் செலுத்த வேண்டிய ப்ரார்த்தனைகளையெல்லாம் பக்தர்கள் இங்குச் செலுத்துகிறார்கள். திருமலையில் இருப்பதுபோலவே இங்கும் பல கட்டளை உற்சவங்கள் நடைபெறுகின்றன.

**கட்டண விளக்கம்:** பிரார்த்தனை பிரம்மோத்ஸவம் ரூ.1000-00 பிரார்த்தனை திருக்கல்யாணம் ரூ. 125—00, பிரார்த்தனை கருட சேவை ரூ. 50—00, பிரார்த்தனை டோலோற்சவம் ரூ. 25—00, பிரார்த்தனை தர்பார் உத்சவம் ரூ.15—00, கண்ணாடித் திருப்பள்ளியறை சேவை ரூ.50—00, இரத்தினகிரீடம்சாத்த ரூ.10—00 ஸந்தானகிருஷ்ணன் கையில் எழுந்தருள ரூ. 2—00, நித்யாராதனம் ரூ. 100—00, மூலவர் திருமஞ்சன அனுமதிக் கட்டணம்—ரூ. 80—00, உற்சவர் திருவடி திருமஞ்சன அனுமதிக் கட்டணம்—ரூ. 22—00, கட்டளை அஷ்டோத்தர அர்ச்சனை 1 பசலிக்கு ரூ. 25-00 கட்டளை ஸஹஸ்ரநாம அர்ச்சனை 1 பசலிக்கு ரூ. 50—00, சத்திரம் நாள் 1க்கு வாடகை ரூ. 50.00, நாற்காலி 1க்கு வாடகை ரூ. 0—30, மூலவர் கலர் படம் 12 × 10 ரூ. 1—00, மூலவர் போட்டோ 1க்கு ரூ. 2—00, மூலவர் சிறிய படம் ரூ.0—50, உற்சவர் பெரிய போட்டோ 1க்கு ரூ.2—00, தலபுராணம் & ஸுப்ரபாதம் ரூ.1-25 வெள்ளிக்காசு 1க்கு ரூ.10—00, ஒருநாள் முழு ஆராதனை செலவுக்கு ரூ. 100—00, நித்ய ஆராதனைக் கட்டளைக்கு மூலதனம் ரூ. 1000—00.

குறிப்பு:— 1. கட்டணங்கள் மாறுதலுக்கு உட்பட்டன. 2. பிரார்த்தனை கருட உற்சவம் காலை, பகல் நேரங்களிலும், மாலையில் 5 மணிக்கு முன்பும் செய்யப்படமாட்டாது. 3. யாத்திரிகர்கள் தங்கி வழிபடத் தேவஸ்தானத்தில் ரூம்கள் கிடைக்கும். 4. காணிக்கைகளை நேராகத் தேவஸ்தான நிர்வாக அதிகாரிக்கு அனுப்பும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது. 5. முன் கூட்டியே நிர்வாக அதிகாரி அவர்களுக்கு எழுதி பதில் வந்த பிறகு தக்கன செய்வதுதான் நலம்.

ஒப்பிலியப்பன்கோவில்
திருநாகேசுவரம்—612204
(தஞ்சை ஜில்லா)

நிர்வாக அதிகாரி
போன்: 785

# VALUE OF TIME—DO IT NOW!

**EVERY SECOND OF TIME IS PRECIOUS. DON'T PROCRASTINATE ANY TASKS, BIG OR SMALL. ALSO PLAN WELL.**

''முற்ற மூத்துக் கோல்துணையா முன்னடி நோக்கிவளைந்து,
இற்ற கால்போல் தள்ளி மெள்ள விருந்தங் கிளையாமுன்,
பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடு,உயிரை
வற்ற வாங்கி யுண்ட வாயான் வதரி வணங்குதுமே.

—திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி *1—3—1*

மின்னின் நிலையில, — மன்னுயி ராக்கைகள்,
என்னு மிடத்து, இறை – உன்னுமின் நீரே.

—நம்மாழ்வார் திருவாய்மொழி *1—2—2*

Even Adisesha cannot—in spite of His having 1000 tongues—*repeat* cannot, adequately describe the value of TIME. Remember: One may get back anything lost, but even 1 second of time, if lost is lost for ever. There was a man who wasted away his TIME *as if there was an eternal supply of it*, and, *alas*, when Death came to him, he sobbed and sobbed at his having squandered away his TIME—of no use to him or to others. Pray to HIM, PLAN WELL and Hurry up. Let every act of yours be done with accuracy, courtesy and *speed*.

SRI HARIHI SARANAM NAHA

Madras-17
14-11-1977

THE LIFCO PUBLISHERS

# செல்வம், இளமை, வாழ்நாள்

''பெருக்காறு ஒத்தது செல்வம்; பெருக்காற்று
இடிகரை ஒத்தது இளமை; இடிகரை
வாழ்மரம் ஒத்தது வாழ்நாள்;'' ஆதலால்,

**நன்மையை உடனே செய்க! நாளை என்பது நமனுடைய நாள்!**

''ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும்; நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும்,
(இன்றும் உடனே செய்ய வேண்டும்) இன்னும்
நாளை நாளை என்பீர் ஆகில்
நமனுடைய முறைநாள் ஆவதும் அறியீர்
நம்முடைய முறைநாள் ஆவதும் அறியீர்'' —கபிலர்.

### கருத்து

செல்வம் ஆற்று வெள்ளம் போல் மறையக்கூடியது. இளமைப் பருவம் அந்த ஆற்று வெள்ளத்திஞல் இடிந்துபோகும் கரையைப் போன்றது. மனித வாழ்க்கையோ அந்த இடிகரையில் உள்ள மரம் போல அழியக்கூடியது.

ஆகையால், என்றும் நன்மையையே செய்யவேண்டும்; நன்மையையும் இன்றே செய்ய வேண்டும். **இன்னும் இப்போதே செய்ய வேண்டும்.** இன்னும் 'நாளை செய்வோம்', 'நாளை செய்வோம்' எனக் காலம் கடத்திஞல் எமன் நம் வாழ்நாளை முடிக்கும் காலம் வருவதை அறியாதவர் ஆவீர். ஆகையால் நினைத்தசெயலை **உடனே செய்க.**

---

ஶ்ரீ:

# ரதோற்சவம்



சாதி வேற்றுமைகள் பாராமல், பணக்காரர்—ஏழை, பெரியவர்—சிறுவர், ஆண்—பெண் என்ற வித்தியாசமின்றி இந்து சமுதாயம் ஒருங்கிணைந்து பங்கு கொள்ளும் ஒரே நிகழ்ச்சி ரதோற்சவம்தானே! நமது இந்து ஸமயத்தையும், வேத நெறியையும் தெய்வ வழிபாட்டையும் ஒரு தேராக உருவப்படுத்திப் பார்த்தால் அதை இழுத்துச் செல்வது இமயம் முதல் குமரி வரையில் பெருகி வாழும் மக்கள் கூட்டம் அன்றோ? இந்த ஆன்மிகப் பணியில், தென்ஞடு வடநாடு என்ற வேற்றுமையின்றி, அனைத்து இந்திய மக்களும் ஒரு குடும்பமாக ஒரே மனத்துடன் ஒருங்கிணைந்து செயல்படவேண்டும் என்பதை எடுத்துக்காட்டுவது போல் அமைந்திருக்கிறது நம் திருக்கோயில்களில் நடைபெறும் ரதோற்சவம்.

—With grateful acknowledgments to:
The "Ananda Vikatan", July 3, 1977.

---

## மிக மிக முக்கியம்

**நெற்றிக்கு இட்டுக் கொள்ளாமலும், ஸந்த்யா வந்தனம் செய்யாமலும், கிருஹஸ்தர்கள் கச்சம் வைத்து வேஷ்டி, உத்தரீயம் தரிக்கா**

மலும் எந்தக் கர்மாவைச் செய்தாலும் பயனில்லை. ஆகவே, மேற்கண்டவைகளைச் செய்ய வேண்டியது மிக மிக அவசியம்.

குறிப்பு: மாத்யாஹ்நிகம் செய்வதும் மிக மிக முக்கியம்

|| 108 திவ்ய திதேச திவ்ய தம்பதிகள் திருவடிகளே சரணம் ||
|| ஸர்வே ஜனாஸ் ஸுகினோ பவந்து ||

---

## LUCKY SEVEN

ADELAIDE (Australia) July 8: Robert Martin a 27-year-old plumber and his wife Janette, celebrated the birth yesterday of a son whom they are calling, "the luckiest child in the world."

All the lucky signs greeted Baby Ryan's arrival in Adelaide's Victoria Hospital. He was born precisely at seven minutes past seven o'clock yesterday morning, the seventh day of the seventh month of seventy seven and weighed in at seven pounds seven ounces.

## STRINGS OF SEVEN

A Hindu couple living in Hong Kong certainly got their married life off to a lucky start—with a string of sevens.

Mr. Beepu Sadhwani and Miss Poonam Harilela were married on the seventh hour of the seventh day of the seventh month in 1977.

They had a seven-tier wedding cake and their reception hall was bedecked in seven different colours.......

*-With grateful acknowledgments to*
*The "Mail" July* 8, 1977.

## 7 என்ற எண்ணின் மகிமை

ஹிந்துக்களுக்கு ஸப்தர்ஷிகளின் அருள் முக்யம். விவாஹச் சடங்குகளில் "ஸப்தபதி" என்று உண்டு. இந்தச் சடங்கு செய்வதால் தம்பதிகள் அந்யோந்யமாக வாழ்க்கை நடத்துவார்கள். ஹிந்துக்களுக்கெல்லாம் 108 விஷ்ணு திவ்ய தேசங்கள் முக்கியம். அதிலும் 7 ப்ராகாரங்கள் கொண்ட ஸ்ரீரங்கமும், 7 மலைகள் கொண்ட திருப்பதியும், முக்திதரும் நகரங்கள் 7-ல் முக்கியமான கச்சி என்னும் காஞ்சீபுரமும் மிகப் புனிதமானவை.

எனவே 7 மிக மிக ஸிலாக்யமானது.

ஏற்பாடுகால் தாஸர்கள்
—லிப்கோ பதிப்பகத்தார்

SRIYAI NAMAH | SRI HARIHI SARANAM NAHA |
SARVE JANAAS SUKHINO BHAVANTHU |

## A FERVENT APPEAL TO BRAHMIN YOUNGSTERS

1. The great strength of our ancient country lies in its spiritual values.

2. In those days, Brahmins were studying only Scriptures—now, they have—90 or more percent of them—taken to secular ways. It is all right.

3. But, at least, during important functions, Brahmins must observe ECONOMY in expenditure and must conduct them laying the greatest stress upon the spiritual aspects—for instance, supposing it is a wedding, why Janu Vasam and Reception—they can be avoided—instead of Janu Vasam etc. the host can do well by escorting *with all humility and Bakthi* to the marriage house, the Utsava Moorthis of the Local Temple when the entire gathering can prostrate themselves physically before the Idols—these Idols must be received with Poorna Kumbham, Chanting of Vedas and with Mahaa Viswaasam. *A wedding commenced with this Divine Grace shall be a great success.*

4. Further, all those who are assembling at the time of any function must wear their dresses in the orthodox way, must put on their caste-marks in a bright manner and the *kartha* must repeat the Mantras with *Mahaa Viswaasam*—failure to do any of this will result in loss of getting Godly blessings.

5. For any function, invitations must be kept at the barest minimum.

6. In any function, the Officiating Priest and his collaborators must be received and treated with respect and Sambhavana paid *suitably and with all-gratitude*. Failure to do this, will kill this Bruhaspati institution itself completely.

7. During every function, the *kartha* must help the known poor to the best of his resources and thus earn their best wishes, which shall be most beneficial—for instance, remember the poem, "ABU BEN ADAM AND THE ANGEL".

NOTE: The above are the views of an elderly gentleman who has conducted many a function—Birthdays, Upanayanams, Weddings, Nuptials, Simantams etc. etc.

14-11-1977 The LIFCO Publishers

---

H

ஸ்ரீ:

# பரதாழ்வானுக்கு, சக்கரவர்த்தித் திருமகன் உபதேசித்த, ராஜ்யபாலனத்திற்கு வேண்டிய ''பொன்னுன'' நீதிகளில் சில:

(அயோத்யா காண்டம்—ஸர்க்கம் 100-லிருந்து)

## 1. மந்திரிகள்

*உன் மந்திரிகள் புத்திமான்களாகவும், நீதிசாஸ்திர நிபுணர்களாகவும், உத்தம குலத்தில் பிறந்தவர்களாகவும், பிறருடைய எண்ணங்களை ஸூக்ஷ்மமாகத் தெரிந்து கொள்கிறவர்களாகவும், உன்னைப்போல் நம்பத் தகுந்தவர்களாகவும் இருக்கிறார்களா?*

## 2. மந்திராலோசனை

*நீதி சாஸ்திரத்தில் கரைகண்ட மந்திரிகளால் நன்றாக ஆலோசிக்கப்பட்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்படும் மந்திராலோசனை அரசர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கும்.*

## 3. விழிப்பு

*தகுந்த காலத்தில் படுக்கிறாயா? தகுந்த காலத்தில் விழிக்கிறாயா? விடியற்காலத்தில் ஐசுவரியத்தை ஸம்பாதிக்கும் வழிகளை ஆலோசிக்கிறாயா?*

## 4. விவசாயிகள் வியாபாரிகள் இவர்களைக் காத்தல்

*பயிரிடுகிறவர்களும், பசுக்களை மேய்க்கிறவர்களும் உன் ஆளுகையில் எல்லையற்ற ஐசுவரியத்தை அடைந்து, உன்னிடத்தில் பிரீதி வைத்திருக்கிறார்களா? கொடுக்கல் வாங்கல், ஏற்றுமதி இறக்குமதி முதலிய வியாபாரங்களைச் செய்து வர்த்தகர்கள்உன்னை அண்டி ஸுகமாகப் பிழைக்கிறார்களா? அரசன் தன் ராஜ்யத்தில் வஸிக்கும் ஜனங்களெல்லோரையும் தர்மமாக ஆள வேண்டும். ஆகையால் மேற்சொன்னவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து அசௌகரியங்களை விலக்கிக் காப்பாற்றி வருகிறாயா?*

## 5. அரசன் விலக்க வேண்டிய 14 தோஷங்கள்

*1. பரலோகமில்லை என்று வாதிப்பது 2. பொய் சொல்வது, 3. பெற்றோர்கள், ஆசிரியர்கள், பிராமணர்கள், பல ஹீனர்கள் குற்றம் செய்தாலும் அவர்களிடத்தில் கோபிப்பது 4. அஜாக்கிரதை 5. காரியங்களை நிதானமாகச் செய்வது 6. எல்லா மேன்மைக்கும் காரணமான ஸாதுக்களைத் தரிசிக்காமலிருப்பது, 7. சோம்பல் 8. இந்திரியங்களை அடக்காமலிருப்பது 9. மந்திரிகளின் உதவியில்லாமல் ராஜ்ய காரியங்களைத் தானே ஆலோசிப்*

பது 10. விபரீதமான அர்த்தங்களைச் சொல்லுகிறவர்களுடன் ஆலோசிப்பது 11. நிச்சயித்த காரியங்களை ஆரம்பிக்காமலிருப் பது 12. தன் ஆலோசனைகளை முன்னதாகவே வெளியிடுவது 13. காலையில் எழுந்தவுடன் கண்ணாடி முதலியவைகளைப் பார்ப்ப தென்ற மங்கள காரியங்களை அனுஷ்டிக்காமலிருப்பது 14. யாரைப் பார்த்தாலும் எழுந்து மரியாதை செய்வது என்ற இந்தப் பதி னான்கும் அரசன் விலக்க வேண்டிய தோஷங்களில் முக்கிய மானவை. நீ அவைகளை விலக்குகிறாயா?

## 6. நீக்கவேண்டியவை பத்து

1. வேட்டை 2. சூதாட்டம் 3. பகலில் தூங்குவது 4. பிறரைத் தூஷிப்பது 5. பெண்களுடனே காலம் கழிப்பது 6. மதுபானம், 7. பாட்டு, 8. கூத்து, 9. வாத்தியமென்றவை களில் காலத்தைக் கழிப்பது, 10. காரியமில்லாமல் அலைவதென்ற இந்தப் பத்தையும் விலக்கி வருகிறாயா?

## 7. நாஸ்திகர்களுடன் பழகாமை

பௌத்தன் சார்வாகன் முதலிய நாஸ்திக பிராம்மணர் களுடன் பழகாமலிருக்கிறாயா? சாஸ்திரங்களுக்கு விபரீதமான அர்த்தங்களை உபதேசிப்பதில் இவர்களுக்கு அதிகத் திறமையுண்டு. உண்மையான ஞானத்திற்கு விரோதமான ஞானத்தை உடைய வர்கள். பாலர்களைப்போல் ஒன்றும் தெரியாதவர்கள்; ஆனால் தங்களைப் பெரிய பண்டிதர்களென்று எண்ணுகிறவர்கள். வேத மார்க்கத்திற்கு விபரீதமான புத்தியையுடையவர்கள். புராணங் களையும் தர்மசாஸ்திரங்களையும் பெரியோர்களுடைய ஸம்பிரதாய பரம்பரைப்படி அர்த்தம் செய்யாமல், கேவல தர்க்கத்தைப் பிரயோகித்து, அவை இஹத்திலும் பரத்திலும் பயனற்றவை என்று வாதிப்பவர்கள்.

## 8. வழக்கில் நேர்மை

தனவான்களுக்கும் ஏழைகளுக்கும் வழக்கு நேர்ந்தால், உன் நியாயாதிகாரிகள் தனவானிடத்திலிருந்து லாபத்தை அடைய உத்தேசிக்காமல் தீர்ப்புச் செய்கிறார்களா?

## 9. அதர்மநீதி அழித்துவிடும்

அரசன் தன் ராஜ்யத்தில் நடக்கும் நியாயா நியாயங்களை விசாரிக்காமல் கேவலம் தன் ஸௌக்கியத்தையே நாடி ஆண்டு வந்தால், சரியாக விசாரிக்காமல் குற்றம் சாட்டப்பட்டவர்கள் கண்ணீர் விட்டால் அது அவனுடைய மனைவி மக்களையும் பசுக் களையும் நாசம் செய்யும்.

---

ஸ்ரீ :

ஸ்ரீராம: சரணம் மம

# சரணாகத வத்ஸலன்

## ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி

"உத்தமகதியை அடைவதற்குச் சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கும் இதர உபாயங்களைப் பல தடவை அனுஷ்டித்தால் மாத்திரம் பிரயோஜனப்படும்; சரணாகதியோ அப்படியன்று. என்னை ஒருவன் ஒரே தடவை வந்து சரணடைந்தாலும் போதும். அதையும் வார்த்தைகளால் சொல்வதும் தேகத்தால் செய்வதும் அவசியமில்லை; மனஸால் சரணடைவதே போதும். 'நான் உன்னைச் சேர்ந்தவன்; உனக்குக் கைங்கர்யம் செய்வதே நான் அபேக்ஷிக்கும் பலன்' என்று பிரார்த்தித்தால், அவனுக்குப் பயம் நேரக்கூடிய ஸகல பூதங்களிடத்திலிருந்தும் பயமில்லாமல் செய்வேன். சரணமடைந்தவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் அபய தானம் செய்கிறேன்; இது என் விரதம். எக்காலத்திலும், எந்த சமயத்திலும் இதைக் கைவிடமாட்டேன்."

—ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் யுத்தகாண்டம் ஸர்க்கம்—18

ஸ்ரீ :

# IN RAM RAJYA

## Rich Were Made Richer to Help Good Causes

"....அப்பொழுது தசரத சக்கரவர்த்தி, தம் புத்திரன் உத்தம குணங்களால் நிகரற்றவனென்று நினைத்து, "வயது முதிர்ந்த தமக்கு இனி ஆகவேண்டியதென்ன? நாம் உயிரோடிருக்கக் கையில் ராமன் அரசனாகவேண்டியதே நமக்கு மிகுந்தப் ப்ரீதியைக் கொடுக்கும். ஆகையால், அவனுக்கு அபிஷேகம் செய்து, அவனை அரசனாக எப்பொழுது பார்ப்பேன்? நம் குழந்தை ராமன், **தனவான்களுக்கு மேன்மேலும் ஐசுவரியம் பெருக வேண்டுமென்று விரும்புகிறவன்.** செல்வம் குறைந்தவர்களிடத்தில் மிகுந்த தயை வைத்து உதவி செய்கிறவன். தாபத்தைப் போக்கி ஜலத்தைப் பொழிவதால் மேகத்தினிடத்தில் ஜனங்கள் எப்படிப் பிரியம் வைக்கிறார்களோ அப்படி, நம்மைவிட ராமனிடத்தில் விசேஷப் பிரியம் வைத்திருக்கிறார்கள். மேலும், பராக்கிரமத்தில் யமனையும், இந்திரனையும், புத்தியில் பிருஹஸ்பதியையும், தைரியத்தில் ஹிமயமலையையும் ஒத்திருப்பதால் என்னை விட மிகுந்த குணசாலி. நம் குழந்தை ராமனுக்கு அபிஷேகம் செய்து இந்த முதிர்ந்த வயதில் அதனாலுண்டாகும் ஆனந்தத்தை அனுபவித்துப் பிறகு ஸ்வர்க்கமடைய வேண்டும்" என்று தம் மனத்தில் தீர்மானித்துக் கொண்டார்...."

—ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் அயோத்தியாகாண்டம் ஸர்க்கம்—1

# குற்றங்களைத் தவிர்க்க போலீஸ் கமிஷனரின் 16 யோசனைகள்

சென்னை, ஆக. 10, 1977—நகரில் குற்றங்கள் நிகழாமல் தடுப்பதற்கு, பொதுமக்கள் விழிப்பு உணர்ச்சியோடு இருக்க வேண்டும் என்று, சென்னை நகர போலீஸ் கமிஷனர் பொன். பரமகுரு கூறியுள்ளார்.

பொதுமக்கள் மேற்கொள்ள வேண்டிய முன்ஜாக்கிரதை நடவடிக்கைகள் குறித்து, 16 அம்ச யோசனைகளை அவர் தெரிவித்துள்ளார். அவையாவன:

1. இரவில் வீட்டைப் பூட்டிக்கொண்டு வெளியே செல்லும் போது, வீட்டில் சிறிதுகூட வெளிச்சமே இல்லாமல் போட்டுச் செல்ல வேண்டாம். குறைந்தபட்சம் ஒரு சிறிய விளக்கையாவது எரியவிட்டுச் செல்லுங்கள். சினிமாவுக்கோ அல்லது கோயிலுக்கோ அல்லது அருகே உள்ள நண்பர்கள் வீட்டுக்கோ போகும் போதுகூட மறக்காமல் இவ்வாறு 'லைட்'டை எரியவிட்டுச் செல்லுங்கள். சாவியை அருகே எங்கேயாவது வைத்துவிட்டுப் போக வேண்டாம். ஒருவேளை, திருடர்கள் அதைக் கவனித்துக்கொண்டே இருக்கக்கூடும்.

2. வீட்டுக்குத் திரும்பியவுடன் ஒவ்வொரு கதவையும், ஜன்னலையும் நன்கு சோதித்துப் பாருங்கள். மூடப்படாத கதவு, ஜன்னல்கள் போன்றவைதான் திருடர்களுக்கு நல்ல வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருகின்றன.

3. இரவு நேரங்களில் உங்கள் வீட்டுக்குள்ளோ அல்லது பக்கத்து வீட்டிலோ சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் ஏதேனும் சத்தம் கேட்டால் அதனைச் சாதாரணமாகக் கருதி சும்மா இருந்துவிட வேண்டாம். அக்கம்பக்கத்து வீடுகளின் மீது ஒரு கண் வைத்திருங்கள். சுற்றுப்புறங்களில் சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் புதிய நபர்கள் யாரேனும் தென்பட்டால் உடனே போலீசுக்குத் தெரிவியுங்கள்.

4. **விடுமுறையின்போது வீட்டைப் பூட்டிக்கொண்டு வெளியூருக்குப் போக நேர்ந்தால், அதுபற்றி அருகில் உள்ள போலீஸ் ஸ்டேஷனில் சொல்லிவிட்டுப் போவது நல்லது.** இத்தகைய சமயங்களில் உங்கள் வீடுகளை, போலீஸார் விசேஷக் கவனம் செலுத்தி கவனமாகப் பார்த்துக்கொள்வார்கள்.

5. உங்களிடம் உள்ள நகைகள் போன்ற மதிப்பு மிக்கப் பொருட்களைப் பத்திரமாகப் பாங்குகளில் பாதுகாத்து வைக்கலாம். அல்லது வீட்டிலேயே வைப்பதானால், திருடர்களால் கைப்பற்ற முடியாதபடி, பத்திரமான பெட்டிகளில் பாதுகாப்பாக வைப்பது நல்லது.

6. கைக்கடிகாரங்கள் போன்ற பொருட்களை, திறந்த ஜன்னல்களுக்கு அருகே வைக்காதீர்கள். திருடர்கள் சுலபமாகக் கையைவிட்டு அவற்றை 'அபேஸ்' செய்துவிட முடியும்.

7. வீட்டுக்குள் மின்சார மீட்டர், டெலிபோன், தண்ணீர்க் குழாய் மீட்டர் முதலியவற்றைச் சோதனையிட வருவதுபோல பல திருடர்கள் வருகிறார்கள். எனவே இவ்வாறு வருபவர்கள் நிஜமாகவே அந்தந்த இலாகாவைச் சேர்ந்தவர்கள்தானா என்பதை முதலில் நன்கு விசாரித்து உறுதி செய்துகொண்டு அவர்களை பின்னரே வீட்டுக்குள் அனுமதியுங்கள்.

8. உங்கள் வீடுகளில் உள்ள சாக்கடைக் குழாய்களின் மீது முள் கம்பிகளைச் சுற்றி வையுங்கள்.

9. புதிதாக வேலைக்காரர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்வதற்கு முன்னால், அவர்களைப் பற்றித் தீர விசாரியுங்கள். ஏனெனில் கைதேர்ந்த திருடர்கள்கூட இதுபோல வேலைக்குச் சேர்ந்து உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பிறகு, உங்கள் வீட்டிலேயே தங்கள் கைவரிசையைக் காட்டக்கூடும்.

10. நடுத் தெருவில் சைக்கிளைப் பாதுகாப்பின்றி விட்டுச் செல்லாதீர்கள். ஏதாவது வேலை காரணமாக ஒரு கட்டிடத்திற்குள் செல்ல நேரும்போது, உங்கள் சைக்கிளை, அருகில் உள்ள சைக்கிள் ஸ்டாண்டில்விட்டுப் பூட்டிக் கொண்டு செல்லுங்கள்.

11. இரவு நேரங்களில், 11 மணிக்கு மேல் 12 மணிக்குள் உங்கள் பங்களாக்களின் காம்பவுண்டை, உங்கள் காவல்காரரை விட்டு நன்றாகச் சோதனையிடுங்கள். ஏனெனில் அங்கு இருட்டுப் பகுதிகளில் யாரேனும் திருடர்கள் ஒளிந்துகொண்டு இருந்து தக்க நேரம் கனிவதற்காகக் காத்திருக்கக்கூடும்.

12. வெளி ஆட்களிடம் எச்சரிக்கையாக இருக்கும்படி உங்கள் குழந்தைகளை உஷார்ப்படுத்தி வையுங்கள். குழந்தைகளுக்கு மிட்டாய் போன்றவற்றைக் கொடுத்து ஆசை காட்டி, அவர்களிடமுள்ள நகைகள் போன்றவற்றைப் பறித்துச் செல்வதற்கு என்றே சிலர் திரிகிறார்கள்.

13. பஸ்களில், குறிப்பாகக் கூட்டம் நிறைந்த பஸ்களில் பயணம் செய்யும்போது உஷாராக இருங்கள்; ஜேப்படிக்காரர்கள் இங்குதான் மிகவும் சுறுசுறுப்பாக இயங்குவார்கள்.

*14.* குறறம் ஏதாவது நடந்துவிட்டிருந்தால், அப்பகுதி யில் தடயங்கள் அழியாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் சுலபமாகத் துப்பு துலக்க முடியும். கைரேகை நிபுணர்களும், விஞ்ஞான ஆய்வாளர்களும் அப்போதுதான் தங்கள் பணியைச் சுலபமாகச் செய்து, குற்றவாளிகளைப் பிடிப்பதற்கான உதவிகளைச் செய்து தரமுடியும்.

*15.* குற்றம் ஏதேனும் நடந்துள்ளதாக உங்களுக்குத் தெரிய வந்தால், உடனடியாக 100-ஆம் நெம்பருக்கு டெலிபோன் செய்து போலீசுக்குத் தகவல் தெரிவியுங்கள். உடனே தகவல் கிடைத்தால்தான் போலீஸார், போலீஸ் துப்பறியும் நாயுடன் அங்கு வந்து சூட்டோடு சூடாகத் துப்பறிந்து, குற்றவாளியைப் பிடிக்க முயல முடியும்.

*16.* உங்கள் சுற்றுப்புறத்தை நன்கு உணர்ந்து, விழிப்புணர்வோடு இருங்கள். உங்களுக்குப் போலீஸார் உதவிபுரிய நீங்கள் போலீஸாருக்கு உதவியாக இருங்கள்.

இவ்வாறு பரமகுரு யோசனை கூறியுள்ளார்.

—with grateful acknowledgments to "*தினமணி*", 11-8-1977.

---

## AN APPEAL TO V.I.Ps.

*Ladies & Gentlemen,*

We beg to appeal to your goodselves to *sympathetically* peruse the following points and to move the concerned Authorities with a view to giving urgent relief to the lower middle and poor teeming millions in our country.

*Gratefully Yours,*
*The Little Flower Co.*

14-11-1977

### A. Regarding the Tirumalai-Tirupathi Devasthanam

Today, the name and fame and the sacredness of our T.T. Devasthanam cannot be adequately described even by the 1000 tongued Audi Sesha.

At the same time, orthodox devotees are very much pained—repeat very much pained—to see that all ancient practices are now absent in the Hills and that nepotism and corruption play a very important part.

Those who go to offices have to dress themselves in the modern way. Similarly those who go to Thirumala and any other Temple for worship, must observe the barest minimum in regard to ancient practices in regard to dress, wearing of caste mark, not to wear flowers when on the Hills, not taking non-vegetarian food on the Hills, etc. etc. Especially, the Devasthanam staff should be compelled to wear orthodox dress and also put on their caste marks in a bright way.

The following extract from Letters to Editor (*The Hindu* **July 22, 1977**) *very* painful to read:

"Incidentally, I would like to mention here that I saw one of the orderlies regulating the queue, just before the deity, biting some fruit in one hand and pushing the crowd with the other. Such pollution should not be allowed inside the sanctum sanctorum, as this upsets the mind of a strong devotee like me."

We do not know how far the above is true. We are also told that people bribe the Devasthanam Servants and get the Darsan of our Lord immediately in preference to thousands of pilgrims—some of them old, invalid and handicapped ones.

Some drastic steps must be taken to avoid all such malpractices so that the sacredness of the Hills can be preserved.

**B. Cleanliness of villages, towns and cities as a whole, especially the slums converted into pucca flats**

Every one will agree that cleanliness, cent per cent cleanliness, is a MUST and that if there is cleanliness much of the diseases can be avoided. Alas, if you can make a surprise visit to many of these poor dwellings, you will find them a hell on earth. The Municipal and Corporation authorities must depute special sweepers to cleanse all the slums and the slums which have been converted into flats.

Surprise checking may also be made in regard to those who occupy these flats as we are told that the poor man to whom the particular flat is allotted lets it away for higher rent and goes back to his slum again.

A peep into the Madras Corporation Fruit Market in Esplanade, the various so-called foot-paths, the various Bus Stands all over Tamil Nadu shall impress the concerned authority in regard to the urgency and the "MUST" of taking very special steps to ensure 100% cleanliness which means Godliness.

In short, a special raid towards keeping our earth completely clean shall, repeat shall, reduce congestion in hospitals.

In addition to cleansing the slums, special care must be restored to see that there is plentiful supply of water and the latrines are specially kept quite sanitary.

**C. Private Nursery Schools**

In the larger interests of the thousands of middle class families, I request, you will be good enough to bring the following to the benign notice of the Hon'ble Minister for Education:

Many Private Nursery Schools have been started and the Fee which was about 60 p., 120 p., 240 p. and 525 p. some 50 years ago, are probably—repeat probably—being charged per month *about* Rs. 30, Rs. 35, Rs. 40 &c. *Such schools seem to make this a profession and not a Temple of Education.*

Further, they insist upon the wearing of uniform. They do not stop there and they want children to wear socks and shoes. These do not last even for 4 or 5 months. Further, the middle class mother is to toil with the children in dressing them and putting on the socks and shoes at least for half-an-hour and the mother's health gets deteriorated.

O

Assuming the high fees and the uniform should be there, at least the children may be exempt from wearing socks and shoes; instead, some sandals will do. *This is a very urgent reform which will bring relief to thousands of poor families now put to much hardship and expenditure.*

### D. **Heavy Postal Rates**

Now that the Janata Government is functioning at the Centre, the Cabinet should KINDLY review the present heavy postal rates and reduce them:

*For Example:*

I. (*a*) a cheap book, priced say, 50 p. and weighing 100 gms. costs by way of V.P. Post an extra charge of Re. 1·65:

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | Post-card by the customer to order the book | .. | Re. | 0·15 |
| 2. | Book-post postage on the V.P. Packet | .. | ,, | 0·10 |
| 3. | Compulsory Registration | .. | ,, | 0·65 |
| 4. | V.P. Fee | .. | ,, | 0·50 |
| 5. | V.P. M.O. Commission | .. | ,, | 0·25 |
| | | Total | | 1·65 |

(*b*) The same book if sent by Registered Book-post, it will cost by way of postage alone Rs. 2·40:

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | M.O. commission for sending the cost of the book by the customer | | ,, | 0·30 |
| 2. | Bookpost Postage | .. | ,, | 0·10 |
| 3. | Registration Fee | .. | ,, | 2·00 |
| | | | | 2.40 |

II. For the despatch of a medicine priced Re. 1 and weighing about 300 gms. postage stamps of Rs. 3·50 is to be affixed, if it is to be sent by Registered Parcel Post.

III. For sending an M.O. of Re. 1 to a *poor patient* by a *poor man* the M.O. charges alone is 30 p.

In short, the price of a post-card must be reduced to 10 p., Inland Letter 15 p., Cover 20 p., M.O. commission to 5 p. for every Rs. 5 with a minimum of 5 p., Registration Fee—which is now so high as Rs. 2 must be reduced to 50 p. or 75 p., Parcel Rates reduced to 50 p. for every 250 gms. and the Telegraph rates also should be reduced to a considerable degree. By such a reduction, there will be more traffic and much income to the Government.

**The above rates, prevailing in 1977, have since gone up.
It is prayed that the Government be pl[illegible]duce the rates considerably.**

Printed at Raisri Printers 97 Lloyds Road, Madras 86 Phone: 88292

# பயனுள்ள லிப்கோ வெளியீடுகள்

*(தபால் செலவு தனி)*

| | ரூ. | காசு |
|---|---|---|
| தேசிக ப்ரபந்தம் | 2 | 60 |
| லக்ஷ்மீ குபேர பூஜாக்ரமம் | 0 | 90 |
| ஸூக்தங்கள் | 0 | 80 |
| வேங்கடேச ஸுப்ரபாதம் | 0 | 40 |
| முகுந்தமாலை—ஸம்ஸ்க்ருத, தமிழ் மூலம், | | |
| பதவுரை, கருத்துரை | 1 | 50 |
| திய ஹ்ருதயமும் ஸ்ரீராமாஷ்டோத்தரசதநாம | | |
| ஸ்தோத்ரமும்—ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும் | 0 | 40 |
| ஸ்ரீவைஷ்ணவ ஸந்த்யாவந்தனம்—மூன்றாம் பதிப்பு | 1 | 00 |
| டகலை அமாவாஸ்யை தர்ப்பணம் | 0 | 70 |
| தென்கலை அமாவாஸ்யை தர்ப்பணம் | 0 | 70 |
| ரீவைஷ்ணவ நித்யாநுஷ்டாந க்ரமம் | 2 | 00 |
| த திருவாராதந க்ரமம் (வடகலை) | 0 | 70 |
| வைஷ்ணவ ஸதாசார ஸங்க்ரஹம் | 3 | 50 |
| ரீவைஷ்ணவ பாலசிக்ஷை | 1 | 50 |
| வாமி ஸ்ரீ தேசிகன் பெருமையும் ஆஹார நியமமும் | | |
| ஸ்ரீ ஸீதா விவாஹமும் | 1 | 00 |
| ந்துக்களுக்கு இனிய நல்லுரைகள் | 1 | 50 |
| ாவிந்தா! கோவிந்தா!! கோவிந்தா!!! | | |
| (நாலாயிரப் பிரபந்தத்திலிருந்து சில பாசுரங்கள்) | 0 | 70 |
| ராயணா! நாராயணா!! நாராயணா!!! | | |
| (நாலாயிரப் பிரபந்தத்திலிருந்து சில பாசுரங்கள்) | 1 | 00 |
| ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும் ஸகல கார்ய | | |
| ஸித்தியும் | 1 | 80 |
| ச்வகுணாதர்சசம்பு—ஸம்ஸ்க்ருத மூலம், | | |
| தமிழ் உரையுடன் | 4 | 50 |
| ாங்கள்ய ஸ்தவம் (ஸ்ரீ விஷ்ணு விஜய ஸ்தோத்ரம், | | |
| அபாமார்ஜந ஸ்தோத்ரம் ஆகியவற்றுடன்) — | | |
| மூலம் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் | 1 | 50 |
| லக்ஷ்மீநாராயண ஹ்ருதயம் (ஸம்ஸ்க்ருதம், தமிழ்) | 1 | 50 |
| சக்கரத்தாழ்வார் மஹிமையும் ஜிதந்தே | | |
| ஸ்தோத்ரமும் | 1 | 50 |

## கம்ப ராமாயணம்

*தமிழ் வசனம் — 420 பக்கங்கள்*

விலை ரூ. 6.00; தபாலில் ரூ. 8.40